# ஸ்ரீ ராமாநுஜன் 206, 207

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 18 | 1966ஸு பிப்ரவரி, மார்ச்சுமீ<br>விசுவாவசுஸு மாசி, பங்குமீ | ஸஞ்சிகை 2, 3 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—86.

உருகுமா லென்னெஞ்ச முன்செயல்க ளெண்ணி *
பெருகுமால் வேட்கையெனப் பேசி *—மருவுகின்ற
இன்னுப் புடனவன்சீ ரேய்ந்துரைத்த மாறன் சொல் *
என்னுச்சொல் லாதிருப்ப தெங்கு ?.

| | | | |
|---|---|---|---|
| உன் செயல்கள் எண்ணி | ‘(எம்பெருமானே!) உனது சரிதைகளை நினைத்து | அவன் சீர் ஏய்ந்து உரைத்த | அப்பெருமானது குணத்தைப் பொருத்தமாக எடுத்துரைத்த |
| என் நெஞ்சம் உருகும் | எனது உள்ளம் உருகா நின்றது; | மாறன் சொல் | —ஆழ்வாருடைய ஸ்ரீ ஸூக்தியை |
| வேட்கை பெருகும் என பேசி | (அதற்கு மேலே) ஆசையும் அதிகரித்து வாரா நின்றது என்று கூறி | என் நா | —எனது நாவானது |
| மருவுகின்ற இன்னுப்புடன் | (கீழே ஸ்மாரக பதார்த்தங்களாலே நோவு பட்டு) அநுவர்த்திக்கின்ற அந்த அவஸாதத்துடனே | சொல்லாது இருப்பது எங்கு | அநுஸந்தியாமலிருப்பது எவ்விடத்தில் ? (எங்குமில்லை.) |

***—உருகுமாலுக்குக் கீழ்த்திருவாய் மொழியாகிய *இன்னுயிர்ச்சேவலில், ஸ்மாரகபதார்த்தங்களாலே நோவுபட்டுச் செல்லா நிற்கச்செய்தே, கீழே எட்டாம் பத்தில் (7) இருத்தும்வியந்தென்கிற திருவாய்மொழியிலே தலைதடுமாறுகக் கலந்த கலவி நினைவுக்கு வந்து தரிப்பிக்க, அதனையருளிச் செய்த திருவாய்மொழியாம் *உருகுமால் நெஞ்சப் பதிகம். திருவாய் மொழியில் “உருகுமால் நெஞ்சம்” என்று பாசுரமிருந்தாலும் இங்கு, வெண்பாவாகையாலே வெண்டளைக்குச் சேர “உருகுமால் என்னெஞ்சம்“ என்றே சுத்தபாடமாகும்.

*இன்னுயிர்ச் சேவலு மென்கிற கீழ்ப்பதிகத்தின் முடிவிலே *எழநண்ணி நாமும் நம் வான நாடனேடொன்றினேம்* என்றருளிச் செய்த பாசுரத்தைக் காணுமிடத்து ஆழ்வார் அந்தப் பாசுரத்தோடு திருவாய் மொழியைத் தலைக்கட்டி

விட்டதாகவும், இனிப் பாசுரங்களருளிச் செய்ய ஆழ்வார் இந்நிலத்தில் இல்லையாகவும் தோன்ற நின்றது. ஆனாலும் ஆழ்வார் இன்னமும் இந்நிலத்திலேயே திருப்புளி யாழ்வாரடியிலேயே யெழுந்தருளியிருந்து மேலே பாசுரங்களருளிச் செய்ய ப்ராப்தமாகிறது. எம்பெருமான் வந்து முகங்காட்டி ஆழ்வாரைத் தரிக்கச் செய்தானோ? அதனால் தரித்து நின்று பேசுகிறாரோ வென்னில்; இல்லை, எம்பெருமான் வந்து முகங்காட்டி இவரைப் பெறுவது, இல்லையாகில் இழப்பது என்னும் படியான நிலைமையாயிருக்கச் செய்தேயும் அவன் வந்து முகங்காட்டாமலே ஒரு விரகு செய்தானாயிற்று; அந்த விரகுதான் ஏதென்னில்; கீழ் எட்டாம்பத்தில் (7) * இருத்தும் வியந்தென்னை * என்கிற பதிகத்திலே ஒரு விலக்ஷணமான ஸம்ச்லேஷம் நடந்திருந்ததே; அதை நினைப்பூட்டி ஒருவாறு தரிக்கச் செய்தானாயிற்று எம்பெருமான், அதுதான் அவன் செய்த விரகு. அதனால் ஆழ்வார் ஒருவாறு தரித்திருந்து இப்பதிகமருளிச் செய்கிறபடி. இதற்கு மூன்று விதமான காரணங்களை நம்பிள்ளையருளிச் செய்கிறார்—(1) ஆழ்வார் முதற்பதிகமே தொடங்கி * குருகூர்ச் சடகோபன் சொல் ஆயிரம் * என்று, எம்பெருமானுக்கு ஒரு ஆயிரம் பாசுரம் பேசித் தலைக்கட்டவேணுமென்று ஸங்கல்பித்துக் கொண்டாராகையாலே அப்படி அவர் தாம் அதிகரித்த கைங்கரியத்தை முற்றமுடிய நடத்து கைக்கீடான அத்ருஷ்டத்தையுடையராயிருந்தார். (3) ஆழ்வாருடைய ஈரச் சொற்களை இன்னமுங்கேட்கவேணுமென்று பாரித்துக் கொண்டிருக்கிற எம்பெருமானுடைய பாக்கியமுமொன்றுண்டு. (3) * தொண்டர்க்கமுதுண்ணச் சொன் மாலைகள் சொன்னேன் * என்று ஆழ்வார் தாமே பணித்தபடி இப்பாசுரங் கொண்டுபோதுபோக்கவிருக்கிற ஸம்ஸாரி சேதநர்களின் பாக்கியமுமொன்றுண்டே. ஆக இம்மூன்று காரணங்களினாலும் ஆழ்வார் இன்னமும் இந்நிலத்தில் தரித்து நிற்க ப்ராப்தமாகி, போனவுயிர் மீளுமபடி *இருத்தும் வியந்தென் கிற வொரு பதிகத்திலே நடந்த கலவி நினைவுக்கு விஷயமாயிற்று. அசோகவனத்திலே திருவடி சென்று கிட்டினபோது முன்பு நெடுநாள்பட்ட கிலேச மெல்லாம் கிடக்கச் செய்தே, பெருமாளும் வந்து முகங்காட்டாதிருக்கச் செய்தேயும், வனவாஸத்திற்கு முன்பு திருவயோத்யையிலே பன்னிரண்டாண்டு பெருமாளும் தானும் ஏகபோகமாக விருந்து பேரின்பம் நுகர்ந்த நுகர்ச்சி நினைவுக்கு விஷயமாகி *ஸமா த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே, புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாம ஸம்ருத்திநீ* என்று அதைச் சொல்லிப் போதுபோக்கினாப் போலே. *இருத்தும் வியந்து பதிகத்திலே "மூவுலகும் தன்னெறியாவயிற்றிற் கொண்டு சிறியேனுடைச் சிந்தையுள்-நின்றொழிந்தான்" என்னும்படி முறை கெடப்பரிமாறின பரிமாற்றம் நினைவுக்கு விஷயமாகி, அது கேவலம் ஸ்மிருதி மாத்திரமேயல்லாமல் இப்போதைய அநுபவமேயென்றே கொள்ளலாம்படியாகி அந்த சீல குணத்தைப் பேசி சிதிலராகிறார். இப்படி பழைய கலவியை நினைப்பூட்டி ஒருவாறு தரித்து நிற்கச் செய்து பேசுவிக்கிறவன் திருக்காட்கரை யெம்பெருமான்போலும். ஆகவே திருக்காட்கரைப் பெருமான் விஷயமாக அவதரிக்கின்றது இப்பதிகம். மலைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாயிற்று = திருக்காட்கரை.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.



# ஸ்ரீ காஞ்சீ நம்பிள்ளை மஹோத்ஸவ ப்ரகடன பத்திரிகை.

(விச்வாவசு ௵ 1965)

ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதியின் திருமுன்பே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் நம்பிள்ளைக்கு நாளது கார்த்திகை௴ 13௳ (28—11—65) ஞாயிற்றுக்கிழமை உத்தராட நக்ஷத்திரத்தில் திருவவதார மஹோத்ஸவம் தொடக்கமாகி கார்த்திகை௴ 22௳ (7-12-65) செவ்வாய்க்கிழமை திருக்கார்த்திகைத் திருநக்ஷத்திரத்தில் சாற்றுமுறையாகும். பத்து நாட்களிலும் அலங்கார திருமஞ்சனமும் இரண்டு வேளைகளிலும் திவ்யப்ரபந்த ஸேவை கோஷ்டிகளும் ததீயாராதனமும் விசேஷ வைபவமாக நடைபெறும். வித்வான்களின் உபந்யாஸங்களும் இடையிடையே நடைபெறும். ஆஸ்திகர்களனைவரும் வந்திருந்து அநுபவித்து ஆனந்திக்கவேணும். இம்மஹோத்ஸவ ஸேவார்த்தமாக வெளியூர்களிலிருந்து வரும் பக்த பாகவதோத்தமர்களுக்கு ஸ்தல வசதி முதலிய ஸௌகரியங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படும். ஸ்ரீவைஷ்ணவ பக்த சிகாமணிகள் குழாங்கூடியிருந்து அநுபவிக்கக் கூடிய மஹோத்ஸவமிது.

இரண்டாயிரம் ரூபாய் செலவில் விசேஷ வைபவங்களுடன் நடைபெற்று வருகின்ற இந்த மஹோத்ஸவத்திற்கு பக்தர்கள் உகந்து உபகரிக்கும் பொருளே மூலதனமாகும். அவரவர்கள் யதாசக்தி பொருளுதவி புரிந்து ஆசார்ய ஸார்வபௌமருடைய இம் மஹோத்ஸவத்தை மிகவும் சிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

**சென்றவாண்டில் ததீயாராதனைக்காகவும் அத்யாபக ஸம்பாவனைக்காகவும் வரவுகள்.**

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீமத்பரமஹம்ஸ திருக்குறுங்குடி ஜீயர் ஸ்வாமி திருவருள் | | 25 | 00 |
| Madras A. Srinivasayyangar ... | .... | 25 | 00 |
| ,, T. A. Thlruvenkatacharyar, (T. V. S.) | ... | 10 | 00 |
| ,, V. N. Devanathan ... | ... | 10 | 00 |
| ,, M. A. Krishnamma ... | ... | 25 | 00 |
| ,, M. தனகோட்டியம்மா ... | ... | 5 | 00 |
| கிருஷ்ணகிரி வெங்கடலக்ஷ்மியம்மா ... | ... | 10 | 00 |
| ஸ்ரீ. உ. வே. மாங்காடு திருவேங்கடாசாரியர் ... | ... | 25 | 00 |
| ,, A. Ramanujachari, B. A., New Delhi. | ... | 5 | 00 |

இங்ஙனம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் **அண்ணங்கராசாரியர்,**

(நம்பிள்ளை ஸன்னிதி காவலாளர்.)

## சென்ற குரோதி வருஷத்தில் (1964) இம் மஹோத்ஸவத்தில் உபயம் நடத்தினவர்களின் விவரம்.

1. முதல் திருநாள் காலையும் மாலையும்—சென்னை உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் சாரிடி உபயம். (ததீயாராதனையுமுட்பட)

2, ஸ்ரீ. உ. வே. வி. வி. ஐயங்கார் ஸ்வாமி, கரியமாணிக்கம் and மதுரை அட்வகேட் S. ஸுந்தரராஜய்யங்கார் இரண்டாவது திருநாள் காலை உபயம். ஸ்ரீமான் பக்தமணிகள். V. C. சக்ரபாணி செட்டி & கொண்டலேடி கன்னைய நாயுடு மதராஸ், இவர்கள் இரண்டாவது திருநாள் இரவு உபயக்காரர்கள்.

3. ஸ்ரீ. உ. வே. R. ஸ்ரீனிவாஸன், டாக்டர்—(குளித்தலை) மூன்ருவது திருநாள் காலை உபயம். ஸ்ரீ. உ. வே. நெல்லூர் சக்ரவர்த்தி வெங்கடாசாரியர் ஸ்வாமி நாறுநறும்பொழில் அக்காரவடிசில். ஸ்ரீ. உ. வே. R. வரதராஜய்யங்கார், New Delhi மூன்ருவது திருநாள் இரவு உபயம்.

4. விக்ரவாண்டி பாகவதர், திருநாராயண ரெட்டியார், சிங்காரம் பிள்ளை வகையருக்கள் ததீயாராதனை யுட்பட நான்காவது திருநாள் காலையுபயம். ஆத்தூர், ஸ்ரீதரன் மோட்டார் ஸர்வீஸ் புரொப்ரைட்டர் ஸ்ரீவைஷ்ணவ ரத்னம், V. கேசவலு நாயுடு அவர்கள் நான்காவது திருநாள் இரவு உபயம்.

5. ஐந்தாவது திருநாள் காலையுபயம் ஸ்ரீ. உ, வே. R. ராமஸ்வாமி ஐயங்கார், Committee Office, உரிகம் and A. ராமஸ்வாமி ஐயங்கார், உரிகம், (Son of Late Ramakrishna Iyengar) ஐந்தாவது திருநாள் இரவு உபயம்—காஞ்சீபுரம் பக்தமணி கண்ணப்ப நாயகரவர்கள்.

6. ஸ்ரீ. உ, வே. C. R ராமஸ்வாமி ஐயங்கார் (அட்வகேட்) கோயம்புத்தூர் ஆருவது திருநாள் காலை உபயம். விட்டலாபுரம் V. S. வெங்கடாசாரியர் ஸ்வாமி ஆருவது திருநாள் இரவு உபயம்.

7, ஸ்ரீ உ. வே. அகரம் கந்தரடை ரங்கஸ்வாமி ஐயங்கார் (Hardwar T. Nagar) & அனக்காவூர் பண்டித கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஏழாவது திருநாள் காலையுபயம். ஸ்ரீ. உ, வே. (Late) தென்திருப்பேரை K ராமச்சந்திரய்யங்கார் பண்டுமூலம் ஏழாவது திருநாள் இரவு வெள்ளைச்சுரிசங்கு கோஷ்டி படித்தனம். பெருங்குளம் மிராசுதார் ஸ்ரீ உ. வே. மாயக்கூத்த ஐயங்கார் 7. இரவு உபயம்.

8. ஸ்ரீ. உ. வே. A. K. சடகோபாசாரியர் (பென்ஷனர் அம்பத்தூர்) எட்டாவது திருநாள் காலை உபயம். ஸ்ரீ உ. வே. மங்களம்பாடி வித்வான் ஸ்ரீநிவாஸ ராமாநுஜாசாரியர் ஸ்வாமி குமாரர் ஜகன்னுதாசாரியர் 8 இரவு உபயம்.

9. ஸ்ரீ உ. வே. மங்களம், ராமாநுஜய்யங்கார் ஸ்வாமி சாரிடி பண்டு (மதருஸ்) ஒன்பதாவது திருநாள் இரவு உபயம். கோனேரிகுப்பம் ஸதீமணி மரகதம்மா, ஒன்பதாவது திருநாள் காலை உபயம் (ததீயாராதனை யுட்பட)

10. கீர்த்தி மூர்த்தியான ஊரா. ஸ்ரீராமுலு செட்டியார் சாரிடீஸ்—சாத்துமுறை இரவு உபயம் ஸ்ரீமதுபயவே அந்தர்வேதிபாளயம் ஈயுண்ணி சேஷசிங்கராசாரியர்ஸ்வாமி, தென்திருப்பேரை மகரபூஷணமய்யங்கார் ஸ்ரீமத்பரமஹம்ஸ காஞ்சீ அழகிய மணவாள யதீந்த்ரப்ரவணராமாநுஜ ஜீயர் ஸ்வாமி ஆகிய இத்திருநாமங்கள் சாற்றுமுறை காலை உபயம். .... ... .... (*)

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

## அன்பர்களுக்கு அடியேன் செய்யும் விண்ணப்பம்.

ஸ்ரீராமாநுஜன் 199ல் ஆரம்பிக்கப்பட்ட உபந்யாஸ சதத்வயம் நெ. 203ல் முதற்பகுதி முடிவு பெற்றுள்ளது. [அதாவது நூறு உபந்யாஸங்கள் முடிவு பெற்றன.] அதன்பிறகுநெ. 204, 205ல் அஷ்டாதசாஷ்டாதச மஹார்த்த நிதி யென்கிற முந்நூற்றிருபத்துநான்கு மஹார்த்தங்கள் நிமித்த விசேஷ நிபந்தனமாக ஆரம்பிக்கப்பட்டு (1) வேத ஸம்ஹிதையில் 18. (2) வேத ப்ராஹ்மணத்தில் 18. (3) ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தில் 18. (4) பகவத் கீதையில் 18. (5) பூர்வாசார்ய க்ரந்த விவரணம் 18. (6) ராமாநுஜனும் ராமாநுஜரும் 18. (7) மநுஸ்ம்ருதியில் 18. ஆக ஏழு அஷ்டாதசமஹார்த்தங்கள் [126 மஹார்த்தங்கள்] வெளியிடப்பட்டன. அதில் சேஷித்திருக்கின்ற மஹார்த்தங்கள் இப்போது வெளியிடவேண்டியிருந்தும் இதற்கு முன்னமே தொடங்கப்பட்ட உபந்யாஸ சதத்வயத்தின் பிற்பகுதியை ஆவலோடு எதிர்பார்த்திருப்பதாகப் பல ஆப்தர்கள் தெரிவித்தபடியால் அஃது இப்போது வெளியிடப்படுகிறது. இப்போது நடப்பது கார்த்திகை (நவம்பர்) மாதம் பங்குனிமாதத்துப் பத்திரிகை இப்போது வெளிவந்துவிட்டது. எனவே நான்கு மாதங்களின் பத்திரிகைகள் முன்னடி வெளிவந்துவிட்டன.



**சந்தாதாரர்கள் முக்கியமாக இதை கவனிப்பது.**

அடியேனுடைய உடல் நிலையைப்பற்றிப் பல நாளாகப் பத்திரிகை மூலம் ஒன்றும் தெரிவிக்கவில்லையே யென்று பல நண்பர்கள் எழுதிக்கொண்டே வருகிறார்கள். ஆம்; புதிதாக எழுதுவதற்கு விஷயமொன்றுமில்லை. 'ஸமதா குண:' என்று ஏற்கெனவே தெவித்திருப்பது தவிர வேறொன்றும் தெரிவிக்கக் கூடியதில்லை. நம்முடைய நான்கு பாஷைப் பத்திரிகைகளும் குறைவின்றி நடைபெற்றுவருவது கண்டு அன்பர்கள் கவலையற்றிருப்பார்களாக. அசக்தியின் ஆதிக்யமொழிய வேறில்லை யென்றுணர்க.

## மணவாளமாமுனிகள் மஹோத்ஸவம்

அழகு திகழ்ந்திடு மைப்பசியில் திருமூல மஹோத்ஸவம் நடைபெறாத திவ்ய தேசமில்லை. ஆனாலும், ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் ஸந்நிதியில் நடைபெறும் க்ரமம் அத்விதீயம் அதிவிலக்ஷணம் என்பதையறியாதாரில்லை. சென்ற ஐப்பசிமீ 4வ (20-10-65) முதலாகப் பதினொருநாள் இம்மஹோத்ஸவம் வெகு விபவமாக நடைபெற்றது. திருமூல நன்னாளினன்று வெள்ளிக்கிழமை சேர்ந்தபடியால் பேரருளாளனோடு கூடப் பெருந்தேவித்தாயாரும் மணவாளமாமுனிகள் ஸந்நிதிக்கு இரவு 8-மணிக்கெழுந்தருளி இரவுமுடிய ஸேவை சாத்துமுறைகள் கண்டருளின அதிசயம் அப்ரமேயமென்னத் தக்கது. இந்த சாத்துமுறை மஹோத்ஸவத்தை ஆயிரம் ரூ. செலவில் நடத்நிவைக்கும் மஹாபாக்யசாலி ஸ்ரீமான் உ. வே. K. V. நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி (Auditor, Chittoor.)

நடந்த மஹோத்ஸவத்தின் திருவுருவப்படங்களிரண்டு அடுத்த பக்கத்தில் ஸேவிக்க ப்ராப்தமாகிறது. ஸந்நிதியின் வெளிப்பந்தலில் ஊஞ்சல் நடைபெறுங் காட்சியொன்று. மற்றொன்று ஆஸ்தான ஸேவை.

# Kanchi Wedding

By C SESHACHALAM



Sow. Prema and Sri Varadarajan with Sri P. B. Annangara-chariar.—*Photos by C. Seshachalam.*

MARRIAGE is a serious holy sacrament of the deepest significance. The Hindu sastraic pattern is designed to impress on the minds of the contracting parties the essence of the solemnity of lasting bonds which merge two young lives with the mighty forces of mutual love, respect and obligations. It is not merely a social 'get together' of feasting and entertainment centered around a brief abridged ceremony, as is often to be witnessed now-a-days!

When Jagadacharya Simhasanathipathy Sriman U Ve Prativadi Bhayankara Annangarachariar Swamy celebrates the marriage of one of his family members, distinguished outstanding savant and acknowledged doyen that he is, it may well be expected to be a notable event of rare impressive charm, packed with Vedic chants, serious and weighty with imposing traditional observances (see also "Free India", dated 19th Sept. 1965.) On Nov. 7 last Sri Annangarachariar Swamy celebrated and personally conducted the marriage of his dauhitri (grand daughter) Chiranjeevi Sowbhagyavati Prema at his Kancheepuram residence.

Much of the ritual and 'paddhati' of worship of Sri Venkateswara at Tirumalai was organised and laid down by Acharya Sri Ramanuja. A thousand years ago this mountain shrine should have been a fastness amidst dense jungle, as inaccessible as it was inhospitable. Sri Ramanuja was blessed with grace and intuition to sense the divine presence. Great humanitarian that he was, he nominated "Anandam Pillai" of Tirunarayanapuram as his deputy. This devoted bhakta was personally responsible for numerous kainkaryams on Tirumalai Hills including the tank named after him which to this day is an important source of water. The bride's father, Vidwan Sampathkumaracharya is a direct descendant of that same "Tirumalai Anandam". True to his great and glorious past he qualified as Master of Arts, is an erudite scholar deeply devoted to Sampradaya Granthas in which he is very well versed. He is silently dedicating all his time and talent to the great task of assisting in the prodigious publishing work of his father-in-law.



Vedic scholars who attended the wedding.

The bridegroom Sri Varadarajan. is of the Prativadi Bhayankara family, one of whose illustrious fore-bears "Anna" composed the immortal Sri Venkateswara Suprabhatam, of incomparably impressive grandeur, which for several unbroken centuries is sung sonorously by devotees every day at the pre-dawn Brahma Muhurtham during the opening of the Golden Doors of the sanctum of Tirumalai Srinivasa.

May He bless the couple with happiness!

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்:



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீ காஞ்சீ வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையின் நித்யப்ரதக்ஷிண வேதபாராயண கைங்கரியத்தின் நாற்பத்தாருமாண்டு நிறைவு விழா

# விளம்பரப் பத்திரிகை

ஸித்தார்த்தி௵ (1919) கார்த்திகை மாதத்திலிருந்து நடைபெற்றுவரும் ப்ரபாத ப்ரதக்ஷிண வேதபாராயண கைங்கர்யத்திற்கு நாற்பத்தாருவது ஸம்வத்ஸரபூர்த்தி விழாக் கொண்டாட்டம் நிகழும் கார்த்திகைமீ 25௳ (10-12-65) த்விதீயை வெள்ளிக்கிழமை முதலாக 5 நாள் நமது பாடசாலையில் நடைபெறும். வழக்கப்படி காலை மாலைகளில் திருவீதி க்ரமபாராயணம் நடைபெறும். 46 ஸம்வத்ஸரம் அவிச்சின்னமாக நடந்துவந்த இந்த கைங்கரியம் சில மாதங்களாக சில அஸௌகரியங்களால் திருவீதி பாராயணமில்லாமல் பாடசாலையிலேயே நடத்தப்பட்டுவந்த குறைதீர இனி யதாபூர்வம் நடைபெற்றுவருவதற்குப் பெருந்தேவி மணவாளனை பேரருளாளன் பரிபூர்ண க்ருபைசெய்தருள வேணுமென்று பிரார்த்தித்து இந்த நிகழ்ச்சி நடத்தப்படுகின்றது. ஆஸ்திக வைதிக பக்த பாகவதர்கள் இம்மஹோத்ஸவத்தில் கலந்துகொண்டு பேரின்பம் நுகரவேணுமென்று பிரார்த்திக்கப்படுகிறார்கள். இம்மஹோத்ஸவத்தில் வைதிகோபந்யாஸங்களும் நடைபெறும்.

இப்படிக்கு, பாடசாலைத் தலைவர்,

**P. B. அண்ணங்கராசாரியர்,**

சின்ன காஞ்சீ. 1-12-65.

# ஸைதாபேட்டையில் வாழும் ஸ்ரீமான் உவே. நாதமுனி சேஷாசாரியர்ஸ்வாமியின் அன்புமிகுந்த திருமுகம்.

[குறிப்பு :—இந்த ஸ்வாமி பத்து வருடங்களுக்கு மேலாக என்னிடம் வைத்திருக்கிற ப்ரீதிவிச்வாஸங்களைப்பற்றி ஒரு பாரதம் எழுதினாலும் போதாது. இவர் நான்குமாதகாலமாக மாதந்தோறும் எழுதியனுப்பிவரும் ஸ்ரீமுகங்களை வெளியிடாமலே வைத்திருப்பது என்னுடைய மஹத்தான அபசாரமேயாகும். அவையெல்லாம் அவசியம் வெளியிடத் தக்கவையேயாயினும் கடைசியாக 12—11—65-ல் இந்த ஸ்வாமியெழுதியனுப்பிய ஸ்ரீமுகமொன்றுமட்டும் இங்கு வெளியிடலாகிறது.]

“ஸ்வாமிந்! அடியேனுடைய பல விண்ணப்பங்களை தேவரீர் என்ன காரணத்தினால் ஒளித்து மறைத்து வைத்திருக்கிறீரென்பது அடியேனுக்கு விளங்கவில்லை. அடியேன் பண்டிதர்களிலோ வித்வான்களிலோ மேதாவிகளிலோ சேர்ந்தவனல்லேனாகிலும் தேவரீரிடம் அன்புகொண்ட மங்களாசாஸனபரர்களில் தலையான வகுப்பில் அடியேன் சேர்ந்தவனென்பதை அடியேனே சொல்லிக்கொள்ள வேண்டியதில்லை. உலகமெல்லாம் தெரிந்துகொண்டேயிருக்கின்றது. என்னுடைய நாலைந்து விண்ணப்பங்களில் வித்வான்கள் உகக்கும் விஷயம் ஒன்றுமில்லையென்று தேவரீர் அவற்றை உபேக்ஷித்திருக்கலாம். அதை அடியேனும் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனாலும் ஸ்வாமியிடத்தில் மெய்யன்பு பூண்டிருக்கும் அனேக பக்தர்களுக்கு அந்த விண்ணப்பங்கள் பேரின்பமளிக்குமென்பதில் தேவரீருக்கும் சந்தேகமிராது. என் மனோரதங்களை தேவரீர் பூர்த்திசெய்யாதுவிட்டாலும் ஆனந்த விகடன் பத்ரிகை (7-11-65ல் வெளிவந்தது) உலகமறியப் பூர்த்திசெய்துவிட்டது. அடியேன் தேவரீருடைய திருவுருவப்படங்கள் பலவற்றை ஸேவித்திருந்தாலும் அந்த ஆனந்த விகடனில் ஸேவிக்கப்பெற்ற திருவுருவம் ஆனந்தவெள்ளம் பரந்தோடுவது போல் காண்கிற காட்சியை சுமார் இரண்டுலக்ஷம்பேர்கள் சேவிக்கப்பெற்றது. என்னுடைய பாக்கியமென்றே கருதுகின்றேன். ஸ்வாமியைக் கூரத்தாழ்வானோடு ஒப்பிட்டு எழுதியிருக்கிறது அதில். காலஞ்சென்ற மஹான் காளிரங்காசாரியர் ஸ்வாமி ஸகல பூர்வாசார்ய ஸமுதாயாவதாரரென்று தேவரீரைப் போற்றியிருப்பதை உலகம் மறவாது. ஆனந்த விகடன் எத்தனையோ விஷயங்களைத் தாங்கினாலும் இந்த 7-11-65 பத்ரிகையொன்றுதான் புனிதமானதென்று ஒவ்வொருவரும் சொல்லிவருகிறார்கள்.



ஸ்ரீ உவே. N. R. நாதமுனிசேஷாசாரியர் ஸ்வாமி
(Saidapet West)

ஸ்ரீ:

## உபந்யாஸசதத்வயம் இரண்டாம் பகுதியில்
## இச்சஞ்சிகையில் வெளிவந்துள்ள உபந்யாஸங்களின் அடைவு.


| | (உபந்யாஸங்கள்) | பக்கம் |
|---|---|---|
| 101. | ஸ்ரீக்ருஷ்ண திவ்ய சேஷ்டிதங்கள் | 1 |
| 102. | தந்தை காலில் விலங்கற வந்து தோன்றியது | 2 |
| 103. | பேய்ச்சி முலைசுவைத்துச் சகடத்தைச் சாடிமருதிறுத்தது | 3 |
| 104. | கண்ணன் வாயினில் வையமேழுங் கண்டது | 3 |
| 105. | காளியனுச்சியில் நட்டம் பாய்ந்தது | 4 |
| 106. | தேனுக-அரிஷ்டநேமி பகாசுர பங்கம் | 4 |
| 107. | குருந் தொசித்துக் கன்றெறிந்து குன்றெடுத்தது | 5 |
| 108: | கோபீவஸ்த்ராபஹாரம், குரவை கோத்தல், குடக்கூத்தாடல் | 5 |
| 109. | மாலிகனோடு தோழமையும் தலை கொண்டதும் | 6 |
| 110. | பத்தவிலோசன முனிவர் மனைவி விருந்து | 7 |
| 111. | பாண்டிவடத்துப் பிலம்பன் வதம் | 8 |
| 112. | நப்பின்னை திருமணமும் கேசிவதமும் | 9 |
| 113. | (வட மதுரையில்) கூனி கூன் நிமிர்த்தது | 9 |
| 114. | வில்விழவொழித்து மதகளிறடர்த்து மல்லரைமுடித்துக் கஞ்சனை மாய்த்தது | 9 |
| 115. | பௌண்ட்ரக வாஸுதேவ பங்கம் | 10 |
| 116. | வாணன்தோள் துணித்தது | 10 |
| 117. | நரகனைத் தொலைத்துக் கற்பகங் கொணர்ந்தது | 11 |
| 118 | "ஆமையாய்க் கங்கையாய்" இதிகாசம் | 12 |
| 119. | காண்டவவனத்தைத் தீமூட்டிவிட்டது | 14 |
| 120. | துரியோதனஸபையில் மல்லரை மடித்தது | 14 |
| 121. | பார்த்தஸாரதியாய்க் கீதையருளியது | 15 |
| 122. | ஆழியாலிரவியை மறைத்து ஜயத்ரதனை முடித்தது | 15 |
| 123. | ஸாந்தீபநிபுத்திரனை மீட்டுத் தந்தது | 16 |
| 124. | வைதிகன் பிள்ளைகளைக் கொணர்ந்து கொடுத்தது | 16 |
| 125. | துரியோதனன் சபையில் ஒளி வீசியது | 17 |
| 126. | தேரின் முன்னின்று மோழை யெழுவித்தது | 18 |
| 127. | உத்தரைதன் சிறுவனையுய்யக் கொண்டது | 18 |
| 128. | பார்த்தன் தெளிந்தொழிந்தபெருமை | 18 |
| 129. | ஸ்ரீராமக்ருஷ்ணஸாம்ய நிர்வாஹம் | 19 |
| 130 | ஸம்பந்தஜ்ஞானத்தின் சிறப்பு | 20 |
| 131. | நவவிதஸம்பந்த விவரணம் | 22 |
| 132. | "த்வம்மேஹம்மே" விபுலவிவரணம் | 24 |
| 133. | நதீதீராவதார குதூஹலம் | 29 |
| 134. | பித்ருவாக்ய பரிபாலன குதூஹலம் | 32 |
| 135. | ப்ரேமவச்யத்வநிரூபணம் | 34 |
| 136. | விரோதி நிரஸநபடுத்வம் | 36 |
| 137. | காந்தாரயாத்ரா குதூகலம் | 38 |
| 138. | மோக்ஷைச்வர்யப்ரதாயகத்வம் | 39 |
| 139. | ஜகந்யஜநஸௌஹார்த குதூஹலம் | 40 |
| 140. | ஸௌந்தர்ய சாலித்வம் | 41 |
| 141. | பரத்வேநிரபேக்ஷத்வம் | 42 |
| 142. | அதிமாநுஷக்ருத்ய நிர்வஹணம் | 44 |
| 143. | மணவாள மாமுனிகளின் திருநாவீறு | 45 |
| 144. | அழகிய மணவாளனது சிஷ்யத்வ வைபவம் | 48 |
| 145. | மாமுனிகளின் வியாக்கியான வைபவம் | 52 |
| 146. | மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்திதத்வ ப்ரதர்சநம் | 53 |
| 147. | மாமுனிகளின் அஷ்டதிக்கஜாசார்யர்கள் | 57 |
| 148. | மைஸூரனந்தாழ்வான் கண்ட பெருமை | 58 |
| 149. | திருவாய்மொழி நூற்றந்தாதியின் பெருமை | 59 |
| 150. | பகவத் ஸௌசீல்ய விவரணம் | 61 |
| 151. | பயிலுஞ்சுடரொளி நெடுமாற் கடிமைகளின்வாசி | 64 |
| | **திருமஞ்சனக் கட்டியங்கள்** | |
| 152. | தேவப்பெருமாள் மணவாளமாமுனிகள் | |
| 153. | தேவப்பெருமாள் நம்மாழ்வார் | |
| 154. | ஸ்ரீ யதோக்தகாரியெம்பெருமான் | |
| 155. | ,, பொய்கையாழ்வார் | |
| 156. | ,, பிள்ளைலோகாசாரியர் | |
| 157. | ,, திருமழிசையாழ்வார் | |
| 158. | காட்டுமன்னார் ஸன்னிதி மன்னனார் | |
| 159. | ,, ஸ்ரீமந்நாதமுனிகள் | |
| 160. | ,, ஆளவந்தார் | |
| 161. | ப்ரதிவாதிபயங்கரமண்ணா | |
| 162. | திருமலையனந்தாழ்வான் | |
| 163. | கச்சிப்பதி. நம்பிள்ளை | |
| 164. | மணவாள மாமுனிகளுக்ஸவத்தில் திவ்யதேச மங்களாசாஸனம் | |

ஸ்ரீரஸ்து.

# உபந்யாஸ சதத்வயம்—(இரண்டாம் பகுதி)

— P. B. அண்ணங்கராசாரியர் —

(நூற்றோராவது உபந்யாஸம் முதல் இருநூறாவது உபந்யாஸம் வரை)

## 101. ஸ்ரீ க்ருஷ்ண திவ்ய சேஷ்டிதோபந்யாஸங்கள்.

கண்ணபிரானுடைய திவ்ய சரித்திரங்கள் ஸ்ரீவிஷ்ணுபுராணம் ஸ்ரீபாகவதம் மஹாபாரதம் ஹரிவம்சம் கர்க்கஸம்ஹிதை முதலானவற்றில் அபரிமிதமாக இருந்தாலும் நம்முடைய ஆழ்வார்கள் தமது திவ்வியப்பிரபந்தங்களில் அடிக்கடி வாய்வெருவியநுபவிக்கும் சரிதைகளை மட்டும் எண்டெடுத்து உபந்யஸிக்க ஆசைகிளர்கின்றது. பகவத் கீதையில் நான்காவதா அத்யாயத்தில் *ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:. த்யக்த்வா தேஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந!* என்று கண்ணபிரான் தானே அருளிச் செய்ததை நோக்கவேணும். 'நான் பிறந்தவாற்றையும் வளர்ந்தவாற்றையும் உள்ளபடி யாவனொருவன் அறிகின்றானோ அவன் மறுபிறப்பின்றி என்னையேயடைந்து நித்யாநந்த மெய்துகின்றான்' என்பது மேற்குறித்த ச்லோகத்தின் பொருள். ஆகவே நம்முடைய உஜ்ஜீவநோபாயங்களில் கண்ணபிரானுடைய திவ்ய சரிதைகளைச் சிந்தனை செய்வதே தலைமைபெற்றிருக்கும். அந்த திவ்ய சரிதங்களில் *தேனுகன் பிலம்பன் காளியனென்னுந் தீப்பப்பூடுகளடங்கவுழக்கி* என்ற பெரியாழ்வாரருளிச் செயலின்படியும் *காட்டைநாடித் தேனுகனும் களிறும்புள்ளுமுடன்மடிய வேட்டையாடி வருவான்* என்ற ஆண்டாளருளிச் செயலின்படியும் விரோதிவர்க்கங்களைக் கிழங்கெடுத்த சரிதைகளே அதிகமாயிருக்கும். கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் *யா கம்ஸ முக்ய்ந்ருப கீட நிபர்ஹணோத்தா ஸா நிர்ஜித த்ரிஜகதஸ் தவ நைவ கீர்த்தி:* என்றச்லோகத்தில் 'கம்ஸன் முதலிய க்ரிமிகீடங்களை ஸர்வ சக்தனான கண்ணபிரான் நசுக்கினானென்கிறவிது அவனுக்கு ஒருபுகழோ? அல்ல; பராத்பரனான அவன் *திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி* கன்றுமேய்த்தினிதுகந்த காளாய்!* என்னும்படி ஆநிரை மேய்த்ததொன்றே சிந்தனைக்கினிது' என்றாராகிலும், அவர்தாமே அடுத்த ஸுந்தர பாஹுஸ்தவத்தில் *இங்கிதம் நிமிஷநஞ் ச தாவகம் ரம்யம் அத்புதம் அதிப்ரியங்கரம், தேந கம்ஸமுக கீட சாஸநம் ஸுந்தரால்பகமபி ப்ரசஸ்யதே* என்றாராதலால் 'அப்பெருமான் செய்த செயல்' என்கிற காரணத்தினால் எப்படிப்பட்ட சிறுச்சேவகமும் சிந்தனைக்கு உரியதும் இனியதுமேயாமென்று கொண்டு *இமையோர் தமக்கும் நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச் சொல்லே* மத்துறு கடைவெண்ணெய்களவினிலுரவிடை யாப்புண்டு எத்திறமுரலினோடிணைந் திருந்தேங்கிய வெளிவே!* என்று நவநீதசௌர்யத்திலே உள்குழைந்த ஆழ்வாரும் *ஏறுபாய்ந்தது, மாயமாவினை வாய்பிளந்தது, பேய்முலையுண்டது, சாடிறுத்தது, புள்வாய் பிளந்தது, களிறட்டது முதலியவற்றையும் பலகால்பேசி *அதுவிதுவுது வென்னலாவனவல்ல, என்னைபுன் செய்கை நைவிக்கும்* என்று பேசிப் போந்தார். ஆகவே அப்பெருமான் செய்தருளின விரோதி நிரஸநச் செய்கைகளையும் விடாது அநுபவித்து உபந்யஸிப்போம். .... .... .... .... *

## 102. தந்தைகாலில்விலங்கற வந்துதோன்றியவுபந்யாஸம்.

பூமிதேவிக்குத் தன்மீது ஸஜ்ஜனங்கள் எத்தனை கோடிக்கணக்காக இருந்தாலும் அவர்களைச் சுமப்பது இலவம்பஞ்சைச் சுமப்பதுபோல் வருத்தமற்றிருக்கும். ஒரு துஷ்டனுண்டாகிலும் இரும்பு மூட்டையைத் தாங்குவதுபோல் மிகவருத்தமாம். ஆதலால், த்வாபரயுகத்தில் இப்பூமியின் கண் பிறந்திருந்த கம்ஸன் சிசுபாலன் முதலிய அஸுரர்களின் பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் பூமிப்பிராட்டி கோரூபத்தைத் தரித்து மேருமலையினுச்சியிலுள்ள தேவர்களின் ஸபையை அடைந்து, அச்சபை நடுவில் வீற்றிருக்கும் நான்முகனை வணங்கித் தனது துயரத்தை முறையிட்டு இவ்வஸுரர்களைத் தொலைத்துத் தன்னை ஸுகப்படுத்தவேணுமென வேண்டிக்கொள்ள, அதற்கு நான்முகன் சிறிது காலம் யோசித்து இது நம்மாலாகாது; ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய் ஸர்வலோக பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணனுக்கு அறிவித்து அவர் மூலமாக இக்காரியத்தை நிறைவேற்றுவிக்கவேணும்' எனக்கருதி அந்தப் பூமியையும் மற்றுமுள்ள தேவர்களையுங் கூட்டிக்கொண்டுபோய்ப் பாற்கடலுள்பள்ளிகொள்கின்ற பரமனைத்தொழுது துதித்தனர். பின்பு திருமால் அருள்புரிந்த சிந்தைகொண்டு அவர்கட்குக் காட்சிதந்து யோகக்ஷேமங்களை விசாரித்து அவர்கள் வந்த வரலாற்றை உணர்ந்தருளி, "ஓ தேவர்களே! உங்கள் கருத்தை அறிந்துகொண்டேன், முற்காலத்தில் வருணனுடைய சாபத்தினால் கச்யபரும் அவரது மனைவியான அதிதியும் இப்பொழுது வஸுதேவ தேவகிகளாகப் பிறந்திருக்கின்றனர்; இப்பிறவியில் அவர்களுக்கு நான் பிள்ளையாகப் பிறக்கின்றேனென்று முன்பு வரமளித்திருக்கிறேன்; அங்ஙனமே நான் அவர்களுடைய கர்ப்பத்தில் தோன்றி ஸாதுபரித்ராணமும் துர்ஜநவிநாசமும் தரும ஸம்ஸ்தாபநமும் செய்யக் கடவேன்; நீங்கள் போகலாம்" என்று சோதிவாய் திறந்து அருளிச்செய்ய; அவர்கள் பரமாநந்தத்துடன் விடைபெற்றுத் தத்தம் ஸ்தானங்களை அடையலாயினர். அக்காலத்தில் மதுராநகரத்தில் யதுவம்சத்தாரில் உக்ரஸேநன் என்றொரு தார்மிகன் அரசனாயிருந்தான்; அவனது மகன் கம்ஸனென்பான். இக்கஞ்சன் துஷ்டர்களில் தலைவனாயிருந்துகொண்டு பெரியோர்கட்குத் தீமையும் புல்லியர்கட்கு நன்மையும் செய்துகொண்டு தன் பலத்தினால் தனது தந்தையாகிய உக்ரஸேநனைச் சிங்காதனத்தினின்று தள்ளிவிட்டுத் தான் அரசாண்டு வருங்காலத்து; கம்ஸன் தனது உடன்பிறந்தவளாய் யுக்தவயது வாய்ந்தவளான தேவகியை வஸுதேவருக்கு விவாஹம் செய்வித்து அவ்விவாகம் முடிந்த பின் அவளை வஸுதேவர் மாளிகையிற்கொண்டு விடுகைக்காகத் தேரேற்றிக்கொண்டு தான் தேவகியிடத்தில் மிக்க அன்பு ஆதரத்துடன் ஸாரதியாயிருந்து தேரை நடத்திக்கொண்டு வரும்போது, ஆகாயத்தில், "ஓ! அறிவுகேடனே! நீ யாரிடத்தில் அன்பு பூண்டிருக்கின்றனையோ, அத்தேவகியின் எட்டாவது கர்ப்பம் உன்னைக் கொல்லப்போகிறது? என்று அசரீரவாக்குப் பிறக்க, அதனைக்கேட்ட கம்ஸன் மிகவும் திடுக்கிட்டு, 'இனி நாம் தப்ப வழி யாது?' என்று யோசித்து, 'இத் தேவகி பிழைத்திருந்தாலன்றோ இவளது எட்டாவது பிள்ளை நம்மைக் கொல்லப்போகிறது; இப்போதே இவளைக் கொன்று விடுவோம்' என்றறுதியிட்டுக் கத்தியை உருவிக்கொண்டு தேவகியைக் கொலைசெய்யப்புக, வசுதேவர் அவனுக்குப் பல தருமங்களை

யும் காலகதியையும் பரக்க உபதேசிக்கவும் அவன் அதை மதியாமல் ஒரே பிடிவாதமாய் நிற்க, பின்பு வஸுதேவர் நல்லுபாயமாக அப்பா! உனக்கு இவள்கையால் சாவு இல்லையே; இவளுடைய பிள்ளை கையினுலல்லவோ சாவுநேரிடப்போகிறது; இவளுக்குப் பிள்ளை பிறந்தவுடன் அப்பிள்ளைகளை உன்னிடம் கொடுத்துவிடுகிறேன், நீ அவற்றைக் கொன்றுவிடு என்று சொல்ல; கம்ஸன் அதை யுக்தமென்று கொண்டு அத்தம்பதிகளை விலங்கிட்டுச் சிறையிலடைத்திட்டான். திருமால் தேவகியிடம் எட்டாவது கர்ப்பத்தில் [ஆவணி மாதம் க்ருஷ்ணஷ்டமி கூடிய ரோஹிணீ நக்ஷத்திரத்தில் இரவு விருஷபலக்கினத்தில்] ஸ்ரீ கிருஷ்ணனுய் அவதரிக்க, அப்போதே வசுதேவ தேவகிகளின் கால்விலங்கு இற்று முறிந்து விழுந்தொழிந்தது. அப்போதே வஸுதேவர் கண்ணபிரானைக்கொண்டு சென்று திருவாய்ப்பாடியில் நந்தகோபர் திருமாளிகையில் ஸுரக்ஷிதனுயிருக்கும்படி விட்டுவந்தார். .... *

## 103. பேய்ச்சிமுலைசுவைத்துச் சகடத்தைச்சாடி மருதிறுத்தவுபந்யாஸம்.

ஒருத்திமகனுய்ப் பிறந்து ஓரிரவிலொருத்திமகனு யொளித்து வளர்கின்ற ஸ்ரீ கிருஷ்ண சிசுவை நாடியுணர்ந்து கொல்லும்பொருட்டுக் கஞ்சன் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்குவந்து, அங்குத் தூங்கிக்கொண்டிருந்த கிருஷ்ணசிசுவையெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்ல முயல, பகவானுகிய குழந்தை அவ்வரக்கியின் ஸ்தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்கிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவள் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தருளினன். .... .... ....

நந்தகோப கிருஹத்தில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே கண்ணனைத் தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்தி யசோதை யமுனை நீராடப்போனுள். கம்ஸனுல் ஏவப்பட்ட அசுரனெருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்து ஸ்ரீ கிருஷ்ண சிசுவின்மேலே விழுந்து கொல்லமுயன்றதை அறிந்த அப்பகவான், பாலுக்கு அழுகிறபாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலேதூக்கி உதைத்தருள, அவ்வுதைபட்ட மாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழேவிழுந்து அசுரனுட்பட அழிந்தது. .... .... ....

குழந்தைப் பருவமுள்ள கண்ணன் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினுற் கட்டி ஒருரலிலே பிணித்து விட, கண்ணன் அவ்வுரலை இழுத்துக் கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமர [யமளார்ஜுன]த்தின் நடுவே எழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினுலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில், முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்ரீவன் என்னும் குபேர புத்திரர் இருவரும் சாபந்தீர்ந்து சென்றனர். .... *

## 104. கண்ணன் வாயினில் வையமேழுங்கண்ட வுபந்யாஸம்.

ஒருநாள் கண்ணன் வீதியில் விளையாடிக் கொண்டிருக்கையில் பலராமன் வந்து 'அம்மா! கிருஷ்ணன் மண்ணைத்தின்கின்றுன்' என்று சொல்லக்கேட்ட யசோதை ஓடிப்போய்க் கண்ணனை வாரி யெடுத்துக்கொண்டு உள்ளே வந்து ஏன் மண்ணைத்தின்றுய்? என்று வெருட்ட, அதற்குக் கண்ணன் 'அம்மா நான் மண்ணைத் தின்னவில்லை; பலராமன் என்மேல் வீணுகக் கோள் சொல்லுகிறுன். வேணுமாகில்

என் வாயைப் பார்' என்று தன் வாயைத்திறந்து காட்ட, யசோதை அவ்வாய் வழியாக அவனுடைய திருவயிற்றில் ஏழு குலபர்வதங்களையும் ஏழு கடல்களையும் ஏழு தீவுகளையுமுடைய இப்பூமி முழுவதையுங்கண்டு "இவன் ஆயர் புத்திரனல்லன் அருந்தெய்வம்" என்று நிர்ணயித்துப் பின்னையும் சிறிதுநேரத்தில் அந்த புத்தி மாறித் தன்னுடைய பாலனாகவே யெண்ணிக் கண்ணனை யெடுத்து முத்தமிட்டாள். *ஐய நாவழித்தாளுக்கு அங்காந்திட வையமேழும் பிள்ளைவாயுள் கண்டதுமுண்டு.

## 105. காளியனுச்சியில் நட்டம்பாய்ந்த வுபந்யாஸம்.

இப்படி யிருக்கையில் ஒருநாள் கிருஷ்ணன் கன்றுகளை ஓட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாதவழியே போகத்தொடங்க, மற்ற இடைப்பிள்ளைகள் அழைத்து 'கிருஷ்ணா! அவ்வழி நோக்கவேண்டா; அவ்வழியிற் சென்றால், யமுநாநதியில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்நியினாற் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானத்துக்கு அநர்ஹமாம்படிசெய்த காளியனென்னும் கொடிய ஐந்தலைநாகம் குடும்பத்தோடும் வாஸஞ்செய்துகொண்டு அணுகினவர்களனைவரையும் பிணமாக்கி விடுதலால் நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன; அதைக் கேட்ட கண்ணபிரான் உடனே அக்காளிய நாகத்தைத் தண்டிக்கவேண்டுமென்ற திருவுள்ளங்கொண்டு அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்பமரத்தின்மேலேறி அம்மடுவிற் குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின்மேல் ஏறித் துவைத்து நர்த்தனஞ்செய்து நசுக்கி வலியடக்குகையில், மாங்கலிய பிக்ஷை இட்டருளவேண்டுமென்று தன்னை வணங்கிப் பிரார்த்தித்த நாககன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற்சென்று வாழும்படி விட்டருளினன். ... *

## 106. தேனுக, அரிஷ்டநேமி, பகாசுர பங்கங்களினுபந்யாஸம்.

ஒருநாள் கண்ணபிரான், பலராமனோடும் ஆயர் சிறுவர்களோடும் ஆநிரை மேய்த்துக் கொண்டு பழங்கள் அழகாக மிகுதியாய்ப் பழுத்து வாஸனை வீசிக்கொண்டிருந்த ஒரு பனங்காட்டையடைந்து அப்பனம்பழங்களை விரும்பி உதிர்த்துக் கொண்டு வருகையில், அவ்வனத்துக்குத் தலைவனும் கம்ஸன் பரிவாரத்தில் ஒருவனுமாகிய கழுதை வடிவங்கொண்ட தேநுகாஸுரன் கோபமூண்டு ஓடிவந்து எதிர்த்துப் போர்செய்ய, உடனே கண்ணன் அதிலாகவமாய்ப் பின்னங்காலிரண்டையும் பற்றி அவ்வசுரக் கழுதையைச் சுழற்றி உயிரிழக்கும்படி பனைமரத்தின்மேல் எறிந்து அழித்து, பிறகு எல்லாருமாய் அங்குள்ள இனிய கனிகளை அருந்திப் பொழுதுபோனவாறே வீடுபோய்ச் சேர்ந்தனர். .... ... .... .... ஒருநாள் கம்ஸனாலேவப்பட்ட அசுரர்களில் அரிஷ்டனென்பவன் எருது வடிவங்கொண்டு பசுக்களையெல்லாம் முட்டி இடைச்சேரியைப் பயப்படுத்திக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனது திருவயிற்றின்மேற் கண்வைத்துக் கொம்புகளை நீட்டிப் பாய்ந்துவர, கண்ணபிரான் அவனைக் கொம்புகளிற்பிடித்து அசையவொட்டாமற் செய்து தன்காலினால் அவனது வயிற்றிலே ஓரிடி இடித்து அவன் கழுத்தைப் பிடித்துக் கசக்கி அவனுடைய கொம்புகளில் ஒன்றைப் பறித்து அதனாலேயே அவனை அடித்துக் கொன்றனன். ஒருநாள் பகன் என்னும் ஓரஸுரன் கொக்குவடிவங்கொண்டு கண்ணபிரானைக் கொல்வதாக நெருங்கிவர, அப்பொழுது கண்ணன் அப்பறவையின் வாயலகுகளை இருகையாலும் பிடித்துக்கிழித்து அதனை அழித்தனன். .... .... *

## 107. குருந்தொசித்துக் கன்றினால் விளவெறிந்து குன்றெடுத்துக் கோநிரைகாத்த வுபந்யாஸம்.

ஒருநாள் வேறொரு அஸுரன், கண்ணபிரான் மலர்கொய்வதற்பொருட்டு விரும்பியேறும் குருந்தமரத்திற் பிரவேசித்து அப்பெருமான் வந்து தன்மீது ஏறும் போது தான் முறிந்துவீழ்ந்து அவனை வீழ்த்திக்கொல்லக் கருதியபோது, மாயவனை கண்ணபிரான் அம்மரத்தைக் கைகளாற் பிடித்துத் தன்வலிமை கொண்டு முறித்து அழித்தனன். .... .... .... கம்ஸனாலேவப்பட்ட அசுரர்களில் கபித்தாசுரன் விளாமரத்தின் வடிவமாய், கண்ணன் தன்கீழ் வரும்பொழுது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்து நிற்க, அதனையறிந்து கிருஷ்ணபகவான் அவ்வாறே தன்னை முட்டிக் கொல்லும்பொருட்டுக் கன்றின் வடிவங்கொண்டு வந்த வத்ஸாஸுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்து எடுத்துச் சுழற்றி விளாமரத்தின்மேல் எறிய, இருவரும் சிதைந்து தமது அசுரவடிவத்துடனே விழுந்து இறந்தன. இதுமுள்ளைக் கொண்டே முள்ளைக் களைவது போலாம். ... ... ... ... *

கண்ணபிரானுடைய அதிமாநுஷ சீலவ்ருத்த வேஷங்களைக் கண்டு ஆயர்களனைவரும் 'இவனே நம் குலக்கொழுந்து, இவன் கட்டளைப்படியே நாம் ஒழுக வேண்டும்' என்று அறுதியிட்டனர்- இங்ஙனமிருக்கையில் சரத்ருது வந்தது. அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவதுபோல் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பற்பல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்களுமாகிய இவைகளைச் சேகரிப்பதைக் கண்டு கிருஷ்ணன் 'பெரியோர்களே! நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கே பூஜைசெய்வது தகுதி; இக்கோவர்த்தனகிரியே பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பயனுண்டு? ஒன்றுமில்லை. ஆகையால் நீங்கள் இப்பூசையனைத்தையும் இம்மலைக்கே இடுங்கள்' என்ன, இடையர்கள் இதைக்கேட்டு அங்ஙனமே செய்ய, கண்ணபிரான் தானே ஒரு தேவதையின் ரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பல மேகங்களை ஏவி, கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையர்களுக்கும் இடைச்சியர்க்கும் தீங்கு தரும்படி கல் மழையை ஏழு நாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தநமலையை யெடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லாவுயிர்களையும் காத்தருளினன். .... .... *

## 108. ஆய்ச்சியரது துகில்களையும் வளைகளையுங் கொண்டு குரவைகோத்துக் குடக்கூத்தாடின வுபந்யாஸங்கள்.

திருவாய்ப்பாடியிலுள்ள கோபஸ்த்ரீகள் கண்ணபிரானிடங்கொண்ட வேட்கை மிகுதியினால் அவன் தம்மிடம் காதல் விஞ்சுமாறு நோன்புநோற்று அந்நோன்பின் முடிவில் யமுனாநதியிலே நீராட அப்போது அவர்கள் இடைச்சாதியொழுக்கத்தின்படி கரையில் அவிழ்த்து வைத்துவிட்டுப்போன ஆடைகளையெல்லாம்

கண்ணன் ரஹஸ்யமாகவந்து எடுத்துக்கொண்டு அருகிலிருந்ததொரு மரத்தின் மேலேறியிருந்து சிறிதுபோது அவர்களை அலைக்கழித்துப்பின்பு அவர்கள் கைகூப்பி வணங்கி மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொண்டதனால் அவர்களுக்கு அத்துகில்களை அளித்தருளினன் .... .... மற்றொருகால், கண்ணபிரான் தன்னிடத்து விருப்பமுற்ற ஆயர்மாதருடைய ஆவலைத் தீர்க்கக் கருதி சரத்காலத்தில் ஓரிரவில் யமுனைக்கரையில் நின்று வேணுநாதம் செய்ய, அதனைக்கேட்ட இடைப்பெண்களெல்லாரும் மாமியார் மாமனார் முதலியோரையும் மதியாமல் காவல் கடந்து புறப்பட்டுச் சென்று க்ருஷ்ண கோஷ்டியில் அந்வயிக்க, அன்றிரவு அவர்களுடன் பரமபோக்யமாகக் குரவைக் கூத்தாடினன். [குரவையாவது—ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்தில் ஒவ்வொரு கண்ணனாகப் பலவடிவெடுத்து நின்று மண்டலித்தாடும் ராஸக்ரீடை.] அப்பொழுது கோபிமார்கள் பரமாநந்தத்தின் எல்லையிலே நிற்பதைக்கண்ட கண்ணபிரான் 'இது வெள்ளக்கேடாக வொண்ணாது; இந்த ரஸத்தை மாற்றவேணும்' என நினைத்து அவ்வாயர்மங்கையரை விட்டுப் பிரிந்துபோய் ஒளிக்க, கோபிகள் கண்ணனைத்தேடிக் காணமல் காதல் மீதூர்ந்து அப்பிரானைக் காணுமளவும் தாங்கள் உயிர்தரித்திருக்கைக்காக, ஒருத்தி க்ருஷ்ணனாகவும் மற்றொருத்தி காளியனாகவும் வேறொருத்தி வேறொன்றாகவும் பாவனைகள் செய்துகொண்டு கிருஷ்ணனுடைய செயல்களையெல்லாம் அநுகரித்துத் தரித்திருக்கையில்; "தாஸாமாவிரபூத் சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ:—பீதாம்பரதரஸ் ஸ்ரக்வீ ஸாக்ஷாத் மந்மதமந்மத:' என்றபடி—புன்முறுவல்செய்து பீதகவாடை யுடுத்துப் பரமவிலக்ஷணமான திருக்கோலத்துடனே எழுந்தருளி அவர்களுக்கு ஸேவைஸாதித்து அப்பொழுதே அவர்களது தாபமெல்லாம் ஆறும்படி பலவித லீலைகளைச்செய்து ஆநந்தப் படுத்தினன் .... .... க்ருஷ்ண லீலைகளில் குடக்கூத்தாடினது மிகச் சிறப்புற்றது. குடக்கூத்து—ப்ராஹ்மணர்க்குச் செல்வம் விஞ்சினால் யாகஞ்செய்வதுபோல, இடையர்க்குச் செல்வம் விஞ்சினால் அதனாலுண்டாகுஞ் செருக்குக்குப் போக்குவீடாக அவர்களாடுவதொரு கூத்து; இதனை, தலையிலே அடுக்குக் குடமிருக்க இருதோள்களிலும் இருகுடங்களிருக்க இரு கையிலும் குடங்களையேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து—என்பர்.

## 109. சீமாலிகனவனோடு தோழமை கொண்டு சக்கரத்தால் தலைகொண்ட வுபந்யாஸம்.

திருவாய்ப்பாடியில் மாலிகனென்பானொருவன் கண்ணபிரானுக்கு உயிர்த் தோழனாய் அப்பிரானிடத்தில் பலவகையாயுதங்களையும் பயின்று ஒருவர்க்கு மஞ்சாமல் அஹங்காரியாய் ஸாது ஜனங்களை நலிந்துகொண்டு இதுவே போதுபோக்காக விருந்தான். அதனால் கண்ணபிரானுக்கு அவனை வதஞ் செய்து விடவும் எண்ணமுண்டாயிற்று. ஆனாலும் 'நண்பனாகிய இவனை நாம் கொல்வது தகாது, என்ன செய்யலாம்' என்கிற ஆலோசனை யுண்டாயிற்று. ஒருபாயம் தோன்றி, ஒரு நாள் அவனை நோக்கி 'நீ இப்படி அஹங்காரியாய் ஸாது ஜனங்களை நலியா நிற்பது தகுதியன்று' என்ன, ஆஸுரப்ரக்ருதியான அந்த மாலிகன் தன் வாயில் வந்தபடி பிதற்றி, 'நீ எல்லா ஆயுதங்களையும் எனக்குக் கற்பித்தும் சக்ராயுதப் பயிற்சி மட்டும் செய்விக்கவில்லையே' என்று கண்ணபிரான் மேற் குறைகூற 'இதில் பழகுவது

உனக்கு முடியாது, எனக்கே அஸாதாரணமானது?' என்று கண்ணன் கூற, 'என்னால் முடியாததுமொன்றுண்டோ? நீ அவசியம் அதைக் கற்பிக்கவேணும்' என்று அவன் நிர்ப்பந்திக்க, கண்ணன் இதுதான் தக்க ஸமயமென்று திருவுள்ளத்திற்கொண்டு சக்ராயுதத்தை யெடுத்துத் தன் ஒற்றை விரலால் சுழற்றி மேலேயெறிந்து கையிலேற்க, 'இது எனக்கு அரிதோ?' என்று மாலிகன் சொல்ல; 'இது உனக்கு அரிதேகிடாய்' என்று கண்ணன் கூறவும் அதை அவன் கேளாமல் அச்சக்ராயுதத்தை வாங்கிச் சுழற்றி யெறிந்து பிடிப்பதாக நினைத்துத் தன் கைவிரலைக் கழுத்துக்கு அடுத்து வைத்து நிற்க, அச்சக்கரம் சுழன்று வருவதற்கு இடம் போதாமையாலே அதன் வீச்சு இவன் கையில் பிடிபடாமல் இவன் தலையை அரிந்துகொண்டு போயிற்று. இக்கதையைப் பெரியாழ்வாரொருவரே தமது திருமொழியில் (2—7—8) *சீமாலிக னவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்* என்றநுஸந்தித்தருளினர். இப்படி தோழனைச் சாமா றெண்ணினது தகுமோ வென்கிற சங்கைக்குப் பரிஹாரமாக "ஆமாறு அறியும் பிரானே! என்று எம்பெருமானை விளித்தார்.... *

## 110. பக்த விலோசனத்து மஹர்ஷி மனைவிகளின் கதை யுபந்யாஸம்.

ஒரு நாள் கண்ணபிரானும் பலராமனும் பசுக்களுடனும் இடையர்களுடனும் யமுனையாற்றின் கரையிலே சென்று நெடும்போது பசுக்களை மேய்த்துக் களைத்து ஆற்றங்கரையில் ஓரிடத்திலே உட்கார்ந்த வளவில், இடைப்பிள்ளைகளெல்லாரும் க்ருஷ்ண பலராமர்களை நோக்கித் தங்களுடைய பசியின் கொடுமையைக் கூறி 'இப்போதே நீங்கள் இப்பசியைப் போக்கி யருளவேணும்' என்று மிக்க ஆர்த்தியுடன் ப்ரார்த்திக்க, அவர்களுடைய பரிதாபத்தை யறிந்த கண்ணபிரான், 'ஓ பிள்ளைகளே! சமீபத்தில் சில மஹர்ஷிகள் ஆங்கிரஸ மென்னும் வேள்வியை அநுஷ்டித்துக் கொண்டிருக்கிறார்கள்; நீங்கள் அவர்களிடம் போய் என் பெயரையும் என் தமையனார் பெயரையும் சொல்லி, இன்னாரால் நாங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றோமென்று கூறி அன்னம் விரும்புங்கள்; பசிதீரும்' என்று கட்டளையிட்டனுப்பினான்; அவர்களும் அங்ஙனமே அவ்விடஞ்சென்று விநயத்துடன் இவ்வண்ணம் விண்ணப்பஞ்செய்து அடிசில் வேண்ட, அவ்வந்தணர்கள் இவ்வாயர் பிள்ளைகளின் பேச்சைச் செவிகொடுத்துங் கேளாதொழியவே ஆய்ப்பிள்ளைகள் க்ருஷ்ண பலராமர்களிடம் மீண்டு வந்து செய்தியைச்சொல்ல, அதுகேட்ட கண்ணபிரான் புன்முறுவல் செய்து, பிள்ளைகாள்! அந்த மஹர்ஷிகளுடைய தர்ம பத்னிகள் இருக்கிறார்களே, அவர்களிடஞ் சென்று நானும் பலராமனும் இங்கே இருப்பதாகச் சொல்லி ப்ரஸாதம் கேளுங்கள்; அப்பெண்டிர் தவறாது தந்திடுவர்கள்' என்று சொல்லி அவர்களை ரிஷிபத்னிகளிடமனுப்ப, உடனே அவர்கள் அவ்விடஞ் சென்று அந்த ரிஷிபத்னிகளை நமஸ்கரித்து 'அம்மனைமீர்! இதோ ஸமீபத்தில் கண்ணபிரானும் நம்பி மூத்த பிரானும் பசுக்களை மேய்த்துக் களைத்திருக்கின்றனர்; அவர்களோடு அநுசரர்களாக வந்த அஸ்மதாதிகளும் களைத்திருக்கின்றோம்; எல்லாரும் பசி தீர்ந்து மகிழும்படி ப்ரஸாதம் தரவேணும்' எனவேண்ட; அப்பெண்டிர்கள் ஸ்ரீக்ருஷ்ண

நாம ச்ரவணமாத்ரத்திலே பரமாநந்தமடைந்து உடம்பு மயிர்க்கூச்செறிந்து உடனே பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம், சோஷ்யம் என நான்கு வகைப்பட்ட அன்னவர்க்கங்களையும் நல்ல பாத்திரங்களிலெடுத்துக் கொண்டு ஸ்ரீக்ருஷ்ண பலராமர்களிருக்குமிடத்தை நோக்கிப் புறப்படுகையில், தந்தையர் தாய்மார் மக்கள் உடன் பிறந்தார் பர்த்தாக்கள் முதலானோர் எவ்வளவு தடுத்தும் அவர்களுடைய தடைக்கு உடன்படாதாராய் நிலைநின்ற பக்தி நிஷ்டையை யுடையவர்களாய் விரைந்து வந்து யமுனையாற்றங்கரைச் சோலையிலே நம்பி மூத்த பிரானையும் கண்ணபிரானையும் ஸேவித்து, கொணர்ந்த அன்னவர்க்கங்களை ஸமர்ப்பித்துவிட்டுப் பரமாநந்த பூரிதர்களாய் மீண்டு சென்றனர்; அவ்வடிசிலைக் கண்ணபிரான் அவ்வாயர் பிள்ளைகளுக்குத் தந்து தானும் அமுது செய்தான்—என்ற வரலாறு ஸ்ரீபாகவதத்தில் தசமஸ்கந்தத்தில் இருபத்து மூன்றுமத்யாயத்தில் விரிவாகக் காணத்தக்கது. ரிஷிபத்னிகள் இவ்வண்ணமாக அடிசில் கொணர்ந்து கொடுத்தது ஒரு நாளேயல்ல! நாடோறும் கண்ணபிரான் யமுனையாற்றங்கரைச் சோலைகளிலே வந்து ஆநிரை மேய்த்துக் களைத்துப் பேர்கிறானென்றுணர்ந்து அப்பெண்டிர் நெடுநாள் வரையில் நாடோறும் பகலில் உச்சி வேளையில் கொணர்ந்து கொடுத்துக்கொண்டிருந்தார்களென்றும், ஒவ்வொரு நாளும் அவர்கள் அடிசில் கொணரும் ஸமயத்துக்குச் சரியாகக் கண்ணபிரானும் களைப்புடன் அவ்வடிசிலை எதிர்பார்த்து அத்திக்கையே நோக்கியிருப்பனென்றும் ஆண்டாள் பாசுரத்தினாலறியலாகிறது. அப்பாசுரம் நாச்சியார் திருமொழி. (12-6) *வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசிலுண்ணும்போது, ஈதென்று பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும் பத்தவிலோசனத்துய்த்திடுமின்* என்பதாம்.

## 111. பிலம்பன்தன்னை வென்ற பாண்டிவடத்துபந்யாஸம்.

யமுனையாற்றங்கரையில் பாண்டீரவடமென்று பெரியதோராலமரம். அதனைப் பாண்டிவடமென்றாள் ஆண்டாள். நாச்சியார் திருமொழியில் (12 7.) *பிலம்பன் தன்னைப் பண்ணழியப் பலதேவன் வென்ற பாண்டிவடத்தென்னை யுய்த்திடுமின்* என்ற பாசுரம்காண்க. கம்ஸன் கண்ணனை நலியுமாறு ஏவின பல அசுரர்களில் ப்ரலம்பாஸுரனென்பவனு மொருவன். இவன் திருவாய்ப்பாடியில் வந்து தீங்கு செய்ய கண்ணனும் பலராமனும் இவனை விளையாட்டாகத் தள்ளிக்கொண்டுபோய்ப் பாண்டிவடத்தருகில் சேர்த்துப் பலராமன் கொன்றிட்டனன். இச்சரிதையைப் பெரியாழ்வாரும் ஆண்டாளுமே அநுசந்தித்தனர். பெரியாழ்வார் தமது திருமொழியில் (3-6-4.) *தேனுகன் பிலம்பன் காளியனென்னும் தீப்பப்பூடுகளடங்கவுழக்கி* என்ற பாசுரத்தினால் இந்த ப்ரலம்பாஸுரவதத்தை ஸ்ரீக்ருஷ்ண சேஷ்டிதங்களிலொன்றாகவே யநுஸந்தித்தார். ஆண்டாள் அங்ஙனன்றிக்கே "பிலம்பன் தன்னைப் பண்ணழியப் பலதேவன் வென்ற" என்று புராணரீதி வழுவாது பலராம க்ருத்யமாகவே பேசினாள். பெரியாழ்வார் இதனை ஸ்ரீக்ருஷ்ண சேஷ்டிதமாகக் கூறினது தவறுதானேயென்ன வேண்டா; ஸ்ரீராமாயணத்தில் சூர்ப்பணகாபங்கம் செய்தது இளைய பெருமாளாயிருக்கவும் அதனைப் பெருமாளுடைய செயலாகவே ஆழ்வார்களநுஸந்தித்ததோடொக்குமிது. .... .... .... *

## 112. ஏழ்விடை செற்றுப் பின்னைதோள் புணர்ந்து கேசியின் வாய் கீண்ட வுபந்யாஸம்.

கும்பனென்னும் இடையர் தலைவனது மகளாய் நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளான நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவள் தந்தை விவாஹசுல்கமாகக் குறித்தபடி யாவருக்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையுங் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப் பிராட்டியை மணஞ் செய்து கொண்டனன். [இதைப்பற்றித் தனியுபந்யாஸம் காண்க.] .... .... ஒருநாள் கம்ஸனுலேவப்பட்ட கேசி என்பானோர் அஸுரன் குதிரையினுருவத்தோடு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி கனைத்துத் துரத்திக்கொண்டு கண்ணபிரான்மேற் பாய்ந்து வர, அப்பெருமான் தன் திருக்கையை நன்றாகப் பெருக்கி நீட்டி அதன் வாயிற் கொடுத்துத் தாக்கிப் பற்களை யுதிர்த்து உதட்டைப் பிளந்து அதனுடம்பையும் இரு பிளவாக வகிர்ந்து தள்ளினன். [திருவாய்ப்பாடி நிகழ்ச்சிகள் முடிந்தன.] .... *

## 113. வடமதுரையில் கூனி கூன் நிமிர்த்த வுபந்யாஸம்.

கம்ஸனால் வில்விழவுக் கென்று அக்ரூரரையிட்டு அழைக்கப்பட்ட கண்ணபிரான் பலராமனோடு வடமதுரை யெழுந்தருளும்போது ராஜவீதியில் சந்தனக்கிண்ணத்தைக் கையிலேந்தி வருகிற மங்கைப் பருவமுடைய ஒரு கூனியைக்கண்டு 'நங்காய்! யாருக்கு நீ இந்தப் பூச்சுக் கொண்டு போகிறாய்?' என்று விலாஸத்தோடு கேட்டருள, அந்தக்கூனி இவ்வாறு காதலுடையவன்போலக் கண்ணன் அருளிச்செய்தது கேட்டு அவனது திருக்குணங்களினாலே மனமிழுக்கப்பட்டவளாய் "அழகனே! நான் நைகவக்கிரை யென்பவளென்றும் கம்ஸனாலே சந்தநாதிப் பூச்சுக்கள் ஸித்தஞ் செய்யும் வேலையில் வைக்கப்பட்டவளென்றும் நீ அறியாயோ?" என்ன; கண்ணன் 'எங்கள் திருமேனிக்கு ஏற்ற வெகு நேர்த்தியான இந்தப் பூச்சை எங்கட்குக் கொடுக்கவேண்டும்' என்று சொன்னவுடனே, அவள் 'அப்படியே திருவுள்ளம் பற்றுங்கள்' என்று மிக்க அன்போடு ஸமர்ப்பிக்க, அப்பூச்சைத் திருமேனியில் அணிந்து ஸ்ரீ கிருஷ்ணன் இவளிடத்தில் மிகவும் ப்ரஸந்நனாய், நடுவிரலும் அதன் முன்விரலுங் கொண்ட நுனிக்கையினாலே அவளை மோவாய்க்கட்டையைப் பிடித்துத் தன் திருவடிகளினால் அவள் கால்களை அமுக்கி இழுத்துத் தூக்கிக் கோணல் நிமிர்த்து அவளை மகளிரிற்சிறந்த உருவினளாக்கி யருளினன். .... .... *

## 114. கம்ஸனது வில்லைமுறித்துக் குவலயாபீட யானையைக்கொன்று மல்லர்களை மடித்துக் கஞ்சனைக் கொன்ற வுபந்யாஸம்.

வடமதுரையில் கம்ஸனுடைய படைச்சாலையை விசாரித்து அங்குச்சென்று அவனது வில்லை யெடுத்து முறித்தெறிந்து கம்ஸனது அரண்மனையை நோக்கிச் செல்லுகையில் வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீட மென்னும் மதயானை கோபித்துவர: அவ்யாதவவீரர் அதனை எதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை எடுப்பதுபோல எளிதிற்

பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அவற்ருல் அடித்து அவ்யானையை உயிர் தொலைத்து விட்டு உள்ளே செல்லுகையில், அவர்களை எதிர்த்துப் பொருது கொல் லும்படி கம்ஸனுல் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்து எதிர்த்து உக்ரமாகப் பெரும்போர் செய்ய, அவர்களை யெல்லாம் அவ்யாதவ வீரர் இருவரும் மற்போரினுலேயே கொன்றுவென்றிட்டுப் பிறகு மஞ்சத்தின்மீது வீற்றிருந்த கம்ஸன்மேல் வேகமாக எழும்பி அவனது கிரீடம் கழன்று கீழே விழும்படி அவனைத் தலைமயிர்பிடித்துத் தரையில் தள்ளி அவன்மேல் தான் விழுந்து அவனைக் கொன்றிட்டனன் கண்ணபிரான். .... .... .... *

## 115. பௌண்ட்ரகவாஸுதேவனைப் பரிசழித்த வுபந்யாஸம்.

பௌண்ட்ரகவாஸுதேவன் என்பானொரு அரசன் பிறந்திருந்தான்; பல் மூடர்கள் திரண்டு 'நீதான் வாஸுதேவன்' என்று அவனைப் புகழ்ந்து கொண்டிருந் தார்கள். அதனுல் அவனும் 'நானே வாஸுதேவன்' என்று மயங்கி மார்பு நெறித்துச் சங்கு சக்கரம் கிரீடம் முதலியவற்றைச் செய்வித்துத் தானணிந்துகொண்டு, தூதனை யழைத்து "நீ கிருஷ்ணனிடம் போய் என் பெயரைச் சொல்லி இன்னுன் வாஸு தேவனுயிருக்க, நீ அவனுடைய சங்கு சக்கரங்களைத் தரிக்கக்கூடாது! இன்று முதல் விட்டுவிடவேண்டியது; இல்லையாகில் அவனேடு யுத்தஞ்செய்து அவனை வென்ரு யாகில் தரிக்கலாம்' என்று சொல்ல வேண்டியது" என்று சொல்லியனுப்ப, அங்ஙனமே அந்தத் தூதன் வந்து கிருஷ்ணனிடம் அச்செய்தியைச் சொல்ல, கண்ண பிரான் சினமுற்றுப் பெரிய திருவடியின்மீதேறிச் சென்று போர் செய்து அப் பௌண்ட்ரகனைத் தனது திருவாழியினுல் தலையறுத்துக் கொன்றெழித்தனன்.... *

## 116. வாணன் தோள்களைத்துணித்து வாணனுக்கருள்புரிந்த வுபந்யாஸம்.

பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற்பிறந்த பாணஸுரனுடைய பெண்ணுகிய உஷையென்பவள், ஒரு நாள் ஒரு புருஷனேடு தான் கூடியிருந்ததாகக் கனக்கண்டு. முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிகுந்த ஆசைபற்றியவளாய், தன் உயிர்த்தோழியான சித்ரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள்மூலமாய் அந்தப்புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்னனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு 'அவனைப் பெறுவதற்கு உபாயஞ்செய்ய வேண்டும்' என்று அத்தோழியையே வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமை யினுல் துவாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தப்புரத் திலே விட, உஷை அவனேடு போகங்களை அநுபவித்து வர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த அந்தப் பாணன் தன் சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினுலே பொருது நாகாஸ்திரத்தினுற் கட்டிப்போட்டிருக்க, துவாரகையிலே அநிருத்தனைக் காணுமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது, நாரதமுனிவ னுல் நடந்த வரலாறு சொல்லப் பெற்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான், பெரிய திருவடியை நினைத்தருளி, உடனே வந்து நின்ற அக்கருடாழ்வானது தோள்மேலேறிக்கொண்டு பலராமன் முதலானுரோடுங்கூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந் தருளும்போதே, அப்பட்டணத்தின் ஸமீபத்திற் காவல்காத்துக்கொண்டிருந்த

சிவபிரானது பிரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து, பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்றுகால்களும் மூன்று தலைகளு முள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும் பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தை உண்டாக்கி, அதன் சக்தியினாலே அதனைத்துரத்திவிட்ட பின்பு, சிவபிரானது அநுசரராகையாற் பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்து கொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து, பாணாஸுரனோடு போர்செய்யத்தொடங்க, அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போராட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்திரத்தைப் பிரயோகித்துச் சிவனை ஒன்றுஞ் செய்யாமற் கொட்டாவிவிட்டுக்கொண்டு சோர்வடைந்துபோம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் உங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர் அநேக மாயிரஞ் சூரியர்க்குச் சமானமான தனது சக்ராயுதத்தை யெடுத்துப் பிரயோகித்து, அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாகவிருக்கையில், பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத்தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக மணம்புரிவிக்க, அதன்பின் மீண்டுவந்தனன். ... .... *

## 117. நரகாசுரனை நாசஞ்செய்து கற்பகங் கொணர்ந்த வுபந்யாஸம்.

எம்பெருமான் வராஹாவதாரஞ் செய்து பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்த பொழுது எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமிதேவிக்குக் குமாரனாய்ப் பிறந்த வனும் அஸமயத்திற் சேர்ந்து பெறப்பட்டதனால் அஸுரத்தன்மை பூண்டவனுமான 'நரக' னென்பவன் ப்ராக்ஜோதிஷ மென்னும் பட்டணத்திலிருந்துகொண்டு ஸகல பிராணிகளையும் நலிந்து தேவஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் பற்பல ரைப் பலாத்காரமாய் அபஹரித்துக் கொண்டுபோய்த் தான் மணம் புணர்வதாகக் கருதித் தன் மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரி சிகர மான ரத்நபர்வதத்தையும் தேவர்களின் தாயான அதிதிதேவியின் குண்டலங்களையும் கவர்ந்து போனதுமன்றி இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக்கொண்டு போகச் சமயம் பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரன் வேண்டு கோளால் கண்ணபிரான் கருடனை வரவழைத்துப் பூமிதேவியின் அம்சமான ஸத்திய பாமையுடனே தான் கருடன்மேலேறி அந்நகரத்தை யடைந்து சக்ராயுதத்தைப் பிரயோகித்து அவனது மந்த்ரியான 'முரன்' முதலிய பல அஸுரர்களையும் இறுதியில் அந்த நரகாஸுரனையும் அறுத்துத் தள்ளி அழித்து அவன் பல திசை களிலிருந்து கொண்டு வந்து சிறைப்படுத்தியிருந்த பதினாறாயிரத்தொரு நூறு கன்னி கைகளையும் ஆட்கொண்டு நரகனால் முன்பு கவரப்பட்ட (இந்திரன் தாயான அதிதி தேவியின்) குண்டலங்களை அவ்வதிதிதேவிக்குக் கொடுக்கும் பொருட்டு ஸத்யபாமை யுடனே கருடன் தோள்மேலேறிக்கொண்டு தேவலோகத்துக்குச் செல்ல, அங்கு இந்த்ராணி ஸத்யபாமைக்கு ஸகல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்கே உரிய

பாரிஜாத புஷ்பம் மானிடப் பெண்ணாகிய இவளுக்குத் தகாதென்று ஸமர்ப்பிக்க வில்லையாதலின், அதனைக்கண்டு பாமை விருப்பமற்றவளாய் நாதனை நோக்கி 'பிராண நாதனே! இந்தப் பாரிஜாத தருவை த்வாரகைக்குக் கொண்டுபோகவேண்டும், என்றதைக் கண்ணபிரான் திருச்செவிசாத்தி உடனே அந்த வ்ருக்ஷத்தை வேரோடு பெயர்த்துத் தோளின்மேல் வைத்தருளி, அப்பொழுது இந்திராணி தூண்டிவிட்டதனால் வந்து மறித்துப் போர் செய்த இந்திரனை ஸகல தேவஸைந்யங்களுடன் சங்க நாதத்தினாலே பங்கப்படுத்தி, பின்பு பாரிஜாத மரத்தை த்வாரகைக்குக் கொண்டு வந்து ஸத்யபாமை வீட்டுப்புழக்கடைத் தோட்டத்தில் நாட்டி யருளினன். ... *

## 118. ஆமையாய்க் கங்கையாய்.........தானுமான வுபந்யாஸம்.

பெரியாழ்வார் திருமொழியில் (4-9.5) *ஆமையாய்க் கங்கையாய் ஆழ்கடலாயவனியாய் அருவரைகளாய், நான்முகனாய் நான் மறையாய் வேள்வியாய்த் தக்கணையாய்த் தானுமானான் * என்கிற பாசுரத்தில் ஓர் அற்புதமான வரலாறு அநுஸந்திக்கப்பட்டுள்ளது. மேலெடுத்த பாட்டின் மூன்றாமடியில்*சேமமுடை நாரதனார் சென்றுசென்று துதித்திறைஞ்ச * என்றிருப்பதனால் நாரதமஹர்ஷி செய்த துதியின் அநுவாதமிது வென்று தெரியவரும். ஸ்ரீக்ருஷ்ணபகவான் ரைவதக மலையில் எழுந்தருளியிருந்த போது, ஸ்ரீ நாரதமஹர்ஷி வந்துவணங்கி ஸ்ரீக்ருஷ்ணபகவானை நோக்கி "ஸர்வ தேவர்களிற்காட்டிலும் நீர் ஆச்சரியகரரும் தன்யரு (தன்யன்—க்ருதார்த்தன்) மாக இராநின்றீர்; இங்ஙனிருப்பார் இவ்வுலகில் வேறு யாருமில்லை" என்று விண்ணப்பஞ் செய்ய, கண்ணபிரான் அதைக் கேட்டுப் புன்முறுவல் செய்து, முனிவனே! தக்ஷிணைகளோடு கூட நான் ஆச்சரியனாகவும் தன்யனாகவும் சொல்லப்பட்டவன்" என்றருளிச் செய்ய, அதனைக்கேட்ட முனிவன் மிகவும் மனமகிழ்ந்து, "பிரானே! தேவரீர் அருளிச்செய்த வாக்கியத்தினால் அடியேன் மிகவும் மகிழ்வுற்றேன்; இனி வந்த வழியே விடை கொள்ளுகிறேன்" என்று விண்ணப்பஞ் செய்து போக நினைத்த வளவில், அங்குக் கண்ணனைப் புடைசூழ்ந்திருந்த அரசர்கள் இப்படி ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் நாரதமுனிவற்கும் நடந்த ஸமவாதத்தின் உட் பொருளைத் தாங்கள் அறியாமையாலே ஸ்ரீக்ருஷ்ணனுடைய திருமுக மண்டலத்தை நோக்கி நாரத முனிவன் தேவரீரைக் குறித்துச் சொன்ன வாக்கியமும், அதற்கு உத்தரமாக தேவரீர் அருளிச் செய்த வாக்கியமுமாகிற இந்த மஹாரஹஸ்யம் எங்களுக்கு இன்னதென்று விளங்கவில்லை, இதனை விரித்துரைக்க வேணும்" என்று பிரார்த்திக்க, கண்ணபிரானும் அம்முனிவன்றன்னையே கூறுமாறு நியமித்தருள, அம் முனிவன் அவ்வரசர்களை நோக்கி இவ்வண்ணம் கூறத் தொடங்கினான். நான் ஒருகால் கங்கைக் கரையிலே த்ரிஷவணஸ்நாநாதிகளைப் பண்ணிவர்த்தியா நிற்கச்செய்தே. ஒருநாள் இரவு கழிந்து சூரியனுதித்த வளவில், கூப்பிடுவழியளவு அகலமும் அதில் இரட்டி நீளமுமாய் நீரினுள்ளே நனைந்து உடம்பு முழுதும் பாசிபற்றிக் கண்ணுக்கு இனிதாயிருப்பதொரு ஆமையைக் கண்டு "இப்படி நீரினுள்ளே ஒன்றையும் சிந்தியாமல் சங்கையற்றுத் திரியாநின்ற நீ அற்புதமான சரீரத்தையுடையனாகா நின்றாய், தந்யனாகா நின்றாய் என்று அறுதியிட்டிருக்கிறேன்" என்று நான் சொல்ல; அதனைக் கேட்ட அந்த ஆமை என்னைப் பார்த்து, ஒரு மனுஷ்யன் சொல்லுவதுபோல, "வாரீர்

முனிவரே! என்னிடத்தில் ஆச்சரியமேது? நான் எங்ஙனே தன்யனாகா நின்றேன்? என்னைப்போன்ற பதினாயிரம் ஸத்வங்கள் ஸஞ்சரிக்கப்பெற்ற கங்காநதி யன்றோ அங்ஙனவது" என்று சொல்ல, பிறகு நான் அக்கங்கையைக் குறித்து அங்ஙனே சொல்ல; அதுகேட்ட அக்கங்கையானது ஒரு வடிவுகொண்டு நின்று ஆமையைப் போலவே சொல்லி "என்னைப்போற் பல்லாயிரம் நதிகள் சென்று சேர்தற்கிடமான கடலன்றோ ஆச்சரியமும் தந்யமுமாவது" என்று சொல்ல, பிறகு நான் அக்கடலை நோக்கி அங்ஙனே சொல்ல, அக்கடல் என்னைப்பார்த்து "நீ சொன்னவை யிரண்டும் எனக்கில்லை; யாதொரு பூமியின் மேல் நான் வாஸம் பண்ணு நிற்கிறேனோ அப் பூமிக்சுன்றோ அவையிரண்டுமுள்ளது" என்ன; பிறகு நான் பூமியை நோக்கிப் புகழ்ந்து கொண்டு "ஆச்சரிய பூதையாகா நின்றாய், தந்யை யாகா நின்றாய்" என்று சொல்ல, அதுகேட்ட பூமி "யான் அங்ஙனுள்ளவளல்லள், எனக்கு ஆதாரமாயிருக் கின்ற பர்வதங்களன்றோ அப்படிப்பட்டவை" என்ன, பிறகு நான் அப்பர்வதங் களைக் கிட்டி அங்ஙனே சொல்ல, அவை என்னைப் பார்த்து "அப்படிப்பட்டவை நாம் அல்லோம், ப்ரஜாபதியான பிரமனன்றோ இவை யிரண்டையு முடையான்" என்ன, பிறகு நான் பிரமனைச் சென்று கிட்டி அடைவுபட அநுவர்த்தித்துப் புகழ்ந்துகொண்டு "பிரமனே! ஆச்சரியனாகா நின்றாய், தந்யனாகா நின்றாய், உன்னை யொப்பார் ஆருமில்லை என்ன; அதைக்கேட்ட பிரமன் என்னைப் பார்த்து "இங்ஙனே என்னைப் புகழ்வதென்? ருக், யஜுஸ், ஸாம, அதர்வணம் என்னும் பெயரையுடை யனவும் தத்துவங்களை உணர்த்துவனவும், உலகங்களையும் என்னையும் தரியாநின்ற னவுமான வேதங்களன்றோ அப்படிப் பட்டவை" என்ன, பிறகு நான் வேதங்களைக் கிட்டி "நீங்களன்றோ ஆச்சரிய பூதரும், தந்யரும்" என்ன, அந்த வேதங்கள் என்னைப் பார்த்து "நாங்கள் யஜ்ஞார்த்தமாகப் படைக்கப்பட்டவர்களாதலால் எமக்குப் பராயணங்களான [பராயணம்—சிறந்த கதி] அந்த யஜ்ஞங்களன்றோ அப்படிப்பட்டவை" என்ன, பின்பு நான் 'அந்த யஜ்ஞங்களைப் பார்த்துப் புகழ்ந்து "உலகத்தில் உங்களிற் காட்டில் ஆச்சரியங்களுமில்லை, தந்யங்களுமில்லை" என்ன, அந்த யஜ்ஞங்கள் என்னைப் பார்த்து ஆச்சரிய சப்தமும் தந்ய சப்தமும் எங்கள் பக்கலில் இல்லை. விஷ்ணு விடத்தில் அவை உள்ளன; அவ்விஷ்ணுவே எங்களுக்குச் சிறந்த கதி; தீயில் ஹோமம் பண்ணப்பட்டு எம்மால் ஸ்வீகரிக்கப்படும் நெய்யை அவ் விஷ்ணு தானே கொடுக்கிறார்" என்ன, அதனைக்கேட்ட யான் பூமியில் வந்து உங்கள் திரளின் நடுவே யெழுந்தருளியிருக்கிற ஸ்ரீக்ருஷ்ண பகவானைக் கண்டு ஸேவித்து "நீர் ஆச்சரியருமாகா நின்றீர், தந்யருமாகா நின்றீர்" என்று நான் விண்ணப்பஞ் செய்ததற்கு உத்தரமாக—தக்ஷிணைகளோடு கூட நான் ஆச்சரிய னாகவும் தந்யனாகவுஞ் சொல்லப்பட்டவன் என்று கண்ணபிரானருளிச் செய்த வார்த்தை என்னை மகிழ்வித்தது.

எங்ஙனே யென்னில்—எல்லா யஜ்ஞங்களுக்கும் தக்ஷிணையோடே கூடியிருந் துள்ள ஸர்வேச்வரன் கதியாகையாலே, "தக்ஷிணையோடு கூட நான் ஆச்சரியனாகா நின்றேன், தந்யனாகா நின்றேன்" என்று கண்ணபிரான் அருளிச்செய்த இவ்வாக்

யெத்தினல் என்னுடைய ப்ரச்நம் நிறைவேறிற்று என்று சொல்லி, முதலில் ஆமையிடத்துச் சொல்லப்பட்டு, அநந்தரம் பரம்பரையாக இவ்வளவும் வந்த "ஆச்சரியனுகாநின்றாய், தந்யனுகா நின்றாய்" என்ற வாக்கியம் தக்ஷிணையோடு கூடின இக்கண்ணபிரானைக் குறித்து என்னல் பிரதி பாதிக்கப்பட்டது. இந்த ரஹஸ்யார்த்தத்தை உங்கட்கு நான் சொல்லித் தலைக்கட்டினேன். இனி நான் வந்த வழியே போகிறேன் என்று ஸ்ரீஹரிவம்ச—விஷ்ணு பர்வத்தில் நூற்றுப் பதினேராவது அத்தியாயத்தில் சொல்லப்பட்ட கதை இப்பாட்டிற் சுருங்க அருளிச்செய்யப்பட்டதென்க. ... *

## 119. காண்டவ வனத்தைத் தீமூட்டிவிட்ட வுபந்யாஸம்.

ஒருநாள் அக்நிபகவான் ஒரு அந்தணவேடம் பூண்டு, அர்ஜுநனும் கண்ணபிரானும் கூடியிருக்குமிடத்திலே வந்துசேர, அவ்வந்தணனைக் கிருஷ்ணர்ஜுநர்கள் நன்கு உபசரிக்க, அவன் உணவு வேண்ட, 'வேண்டிய உணவை அளிப்போம்' என்று அவ்விருவரும் உறுதிமொழி கூற, உடனே அவ்வந்தணன் தான் இன்னுனென்று உண்மை தெரிவித்துக் காண்டவவனத்தைத் தனக்கு இரையாக அளிக்குமாறு வேண்ட அவர்களும், 'பல கொடிய அசுரர்களும் அரக்கர்களும் துஷ்டமிருகங்களும் நிரம்பியிருக்குமிந்தக் காடு அழிந்தொழிவது நன்றே' என்று நிச்சயித்து அக்நிபகவானை நோக்கி 'அங்ஙனமே உண்பாயாக' என்று அனுமதிதந்ததின் பேரில் அக்நி அக்காடு முழுவதையும் ஆக்ரமித்துப் பூர்ணதிருப்தியாக உண்டனன் என்ற கதை மஹாபாரதத்தில் ஆதிபருவத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ளது. மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தவனை கண்ணபிரான் தனது அன்பனை இந்திரன் வருந்தும்படி அவனது காட்டை யழிக்குமாறு அநுமதித்தது அவதாரப்ரயோஜனம் நிறைவேறுதற்காக வென்க; அக்காட்டிலுள்ள அளவற்ற துஷ்ட ஜந்துஸமூஹங்கள் தொலைந்தொழியும் முகத்தால் பூமியின் பாரத்தைக் குறைத்தருளினனென்றுணர்க. இவ்வனத்தின் தன்மையைப்பற்றி வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தில் காண்டவவனதகனச் சருக்கத்தில்—"மிடைந்த நால்வகை மகீருகங்களு நெடு வெற்பினங்களுந்தன்றி, அடைந்த தானவரரக்கர் பேருரகருக் காலயங்களுமாகிக், குடைந்துசோரி கொள்வாளுகிரரி முதற்கொடு விலங்கினமிக்குக், கடைந்த கூரெயிற்றல் தக்ககனும் வாழ் கானனமது கண்டீர்" என்ற செய்யுள் இங்குக் குறிக்கொள்ளத் தக்கது. .... ... ... *

## 120. துரியோதனனிட்ட பொய்யாஸனத்தினுள் மல்லரை முடித்த வுபந்யாஸம்.

கண்ணபிரான் பாண்டவர்கட்குத் தூதனுய்த் தன்னிடம் வரப்போகிருனென்பதை யறிந்த துரியோதனன் எவ்வகையினலேனும் க்ருஷ்ணனை முடித்து விடுவதே கருமமென்று துணிந்து ரஹஸ்யமாகத் தனது ஸபாமண்டபத்தில் மிகப் பெரிய நிலவறை யொன்றைத் தோண்டுவித்து அதில் அநேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளே யிருக்கவைத்து அப்படுகுழியைப் பிறர் அறிய வொண்ணுதபடி மூங்கிற்

பிளப்புக்களால் மேலே மூடி அதன்மேற் சிறந்த ரத்நாஸந மொன்றை யமைத்து அவ்வாஸநத்தின்மீது கண்ணபிரானை வீற்றிருக்கச் சொல்ல, கண்ணன் அங்ஙனமே அதன்மேலேறின மாத்திரத்திலே மூங்கிற் பிளப்புக்கள் முறிபட்டு ஆஸனம் உள்ளிறங்கிப் பிலவறையிற் செல்லுமளவில் மல்லர்கள் எதிர்த்துவர, பெருமான் மிகப் பெரிதாக விசுவரூபமெடுத்துப் பல கைகளையுங் கால்களையுங்கொண்டு எதிர்த்து அந்த மல்லர்களை மடிவித்தான். இக்கதையைத் திருமங்கையாழ்வாரொருவரே இரண்டு மூன்றிடங்களில் அநுஸந்திக்கிறார். பெரியதிருமொழி (9-1-8) *அரவுநீள் கொடியோனவையுளாசனத்தை அஞ்சிடாதேயிட, அதற்குப் பெரியமாமேனி அண்ட மூடுருவப் பெருந்திசை யடங்கிட நிமிர்ந்தோன்* என்கிற பாசுரத்தில் விச்வரூப மெடுத்த கதையையிட்டு மருளிச்செய்தார். திருக்கடன்மல்லைப் பதிகத்தில் (2-5-5' "தூதிற் சென்று அப் பொய்யறைவாய்ப் புகப்பெய்த மல்லர் மங்கக் காய்ந்தானை') என்றவிடத்து அப்போது செய்த மல்லவதத்தை யநுஸந்தித்தார். ஸ்ரீகாஞ்சீபுரியில் பாடகத்தெம்பெருமான் மிகப்பெரிய திருமேனியோடு ஸேவைஸாதிப்பது துரியோதனனிட்ட பொய்யாஸனத்தினுள் விச்வரூபமெடுத்த ஸந்தர்ப்பமென்று உணர்க.

## 121. பார்த்தன் தேரில் பாகனாய் நின்று கீதையோதிய வுபந்யாஸம்.

கண்ணபிரான், பாண்டவர் துரியோதனாதியர் என்ற இருவகுப்பினரையும் ஸந்தி செய்விக்கைக்காகத் துரியோதனாதியரிடம் தூதாகச் சென்று 'பாண்டவர் களும் நீங்களும் பகைமை கொள்ள வேண்டாம்; ராஜ்யத்தில் இருவகுப்பினர்க்கும் பாகமுண்டு; ஆதலால் ஸமபாகமாகப் பிரித்துக்கொண்டு ஸமாதானமாக அரசாட்சி செய்து வாழுங்கள்" என்று பலவாறாக அருளிச்செய்ய, அவர்கள் நல்வார்த்தை கட்குச் சிறிதும் உடன்படாமல் 'பராக்ரம மிருந்தால் போர் செய்து ஜயித்துக் கொள்ளட்டும்; இந்தப் பூமி வீரர்க்கே உரியது' என்று மிக்க செருக்குக் கொண்டு சொல்லவே, தான் பாண்டவபக்ஷபாதியாயிருந்தும் அவர்கட்கே வெற்றி யுண்டாக் கும் பொருட்டுப் பார்த்தன் தேரில் பாகனாய் நின்றனன். அங்ஙனம் பாகனாய் நின்ற போதன்றோ கீதோபதேசம் செய்தருள ப்ராப்தமாயிற்று. அப்போது யுத்தம் செய்ய மிகுந்த உத்ஸாஹத்தோடு வந்த அர்ஜுனன் தான் யுத்தம் பண்ண முடியா தென்று சொல்லும்படி அவனுக்கு மதிவிப்ரமத்தைக் கண்ணபிரான் விளைத்து, அவன் வாயினால் "சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்" என்று சொல்லு வித்து அவனைத் தெளிவிக்கும் வியாஜமாக கீதா சாஸ்த்ரத்தை யவதரிப்பித்தது பரம கருணையினாலாகும். கண்ண்பிரான் கீதா சாஸ்திர மருளிச் செய்ததை ஸுஸ்பஷ்டமாகக் கூறியவர் திருமழிசைபிரான். இவர் தமது திருவந்தாதியில் "சேயனணி யன் சிறியன் மிகப்பெரியன், ஆயன் துவாரைக்கோனாய் நின்ற மாயன் அன்றோதிய வாக்கு" என்றருளியது காண்க. .... ... ... *

## 122. ஆழியால் இரவியை மறைத்து ஜயத்ரதனை மடித்த வுபந்யாஸம்.

மஹாபாரத யுத்தத்திற் பதின்மூன்றாநாளிலே அர்ஜுன புத்திரனை அபிமன்யுவைத் துரியோதனனது உடன்பிறந்தவள் கணவனான ஸைந்தவன் கொன்றுவிட, அங்ஙனம் தன்மகனைக் கொன்ற அந்த ஜயத்ரதனை மற்றைநாள்

ஸூர்யாஸ்தமனத்திற்குள் தான் கொல்லாவிடின் தீக்குதித்து உயிர்விடுவதாக அர்ஜுநன் சபதஞ்செய்ய, அதனையறிந்த பகைவர்கள் பதினான்காநாட் பகல் முழுவதும் ஜயத்ரதனை வெளிப்படுத்தாமல் ஸேனையின் நடுவே நிலவறையில் மறைத்து வைத்திருக்க, அர்ஜுநனது சபதம் பொய்த்துவிடுமேயென்று சிந்தித்த கண்ணபிரான் ஸூர்யனை அஸ்தமிப்பதற்குச் சில நாழிகைக்கு முன்னமே தன் சக்ராயுதத்தால் மறைத்துவிட, அப்பொழுது எங்கும் இருள் மிடைந்ததனால் அர்ஜுநன் அக்நி பிரவேசஞ் செய்யத் தொடங்க, அதனைக்களிப்போடு காணுதற்குத் துரியோதனாதியருடனே ஜயத்ரதன் வந்து எதிர்நிற்க, அச்சமயத்திற் கண்ணன் திருவாழியை வாங்கிவிடவே, பகலாயிருந்ததனால் உடனே அர்ஜுநன் ஜயத்ரதனைத் தலைதுணித்தனன்.

## 123. ஸாந்தீபிநிபுத்திரனை மீட்டுக்கொடுத்த வுபந்யாஸம்.

ஸ்ரீக்ருஷ்ணன் கம்ஸனைக்கொன்று உக்ரஸேநனுக்கு முடிசூட்டியபின்பு, அவந்திநகரத்திலிருந்து ஸாந்தீபிநியென்னும் ப்ராஹ்மணோத்தமர் பக்கல் சென்று ஸகல சாஸ்த்ரங்களையும் அத்யயநம் பண்ணிப் பிறகு குருதக்ஷிணை ஸமர்ப்பிக்கப் பார்க்கிறவளவிலே, அவ்வாசிரியர் கண்ணனுடைய சக்திவிசேஷத்தை யறிந்தவராகையால் 'பன்னிரண்டு வருஷத்திற்குமுன்பு மேல்கடலில் ப்ரபாஸதீர்த்த கட்டத்திலே நீராடும்போது முழுகியிறந்துபோன என்புத்திரனைக் கொண்டுவந்து தரவேண்டும்' என்று அபேக்ஷிக்க, கண்ணபிரான் 'அப்படியே செய்கிறேன்' என்று சொல்லிக் கடற்கரை சேர்ந்து, சங்கினுருவங்கொண்டு ஸமுத்ர ஜலத்தில் வசிக்கின்ற பஞ்சஜநனென்கிற அசுரனே அவ்வந்தணச்சிறுவனைக் கொண்டுபோயினனென்பதை அங்கு வருணன் சொல்லக்கேட்டுக் கடலில் ப்ரவேசித்து அவ்வசுரனைக்கொன்று அவனுடலாகிய பாஞ்சஜந்யத்தையெடுத்து வாயில்வைத்து முழக்கிக்கொண்டே யமபட்டணத்திற்கு எழுந்தருளி, அங்கு யாதனையிற்கிடந்த அக்குமாரனைப் பூர்வ தேஹத்தில் சிறிதும் பேதமில்லாதபடி கொணர்ந்து கொடுத்தருளினன். [இங்கே சங்காபரிஹாரங்கள்.] இடைப்பிள்ளையான கண்ணபிரான் ஸாந்தீபிநியிடத்தில் வேதமோதினனென்பதும் உபநயநசமஸ்காரம் பெற்றனனென்பதும் எங்ஙனே சேருமென்று சிலர் சங்கிப்பர்; *ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவிலொருத்திமகனாயொளித்துவளர்ந்தவனான கண்ணன் க்ஷத்ரிய ஜாதியிற் பிறந்தவன். பிராமணர் க்ஷத்ரியர் வைசியர் என்னும் மூன்று ஜாதியாரும் தோஹோத்பத்தியாகிய இயற்கைப் பிறப்புடனே செயற்கைப் பிறப்பாக உபநயநமென்கிற ஸம்ஸ்காரத்தாலாகும் ஜ்ஞாநஜந்மத்தையுங் கொண்டு இருபிறப்பாளராய் 'த்விஜர்' எனப்படுவரென்க.

## 124. வைதிகன்பிள்ளைகளைக் கொணர்ந்து தந்த வுபந்யாஸம்.

ஒரு பிராமணனுக்கு முறையே பிறந்த மூன்றுபிள்ளைகள் பிறந்த அப்பொழுதே பெற்றவளுமுட்பட முகத்தில் விழிக்கப்பெறாதபடி இன்னவிடத்திலே போயிற்றென்று தெரியாமல் காணவொண்ணாது போய்விடுகையாலே நான்காம் பிள்ளையை மனைவி ப்ரஸவிக்கப் போகிறவளவிலே அந்த அந்தணன் கண்ணபிரானிடம் வந்து 'இந்த ஒரு பிள்ளையையாயினும் தேவரீர் பாதுகாத்துத் தந்தருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, க்ருஷ்ணன் 'அப்படியே செய்கிறேன்' என்று அநுமதி செய்தபின்பு, ஒரு யாகத்திலே தீக்ஷிதனாயுள்ள கண்ணபிரான் எழுந்தருளக்

கூடாதென்பதுபற்றி அர்ஜுநன் 'நானேபோய் ரக்ஷிக்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞை பண்ணி, ப்ராஹ்மணனையுங் கூட்டிக்கொண்டுபோய், ப்ரஸவிக்கிற க்ருஹத்தைச் சுற்றும் காற்றுமுட்படப் பிரவேசிக்கவொண்ணுதபடி சரக்கூடங்கட்டிக் காத்துக் கொண்டு நிற்கையில் பிறந்த பிள்ளையும் வழக்கப்படியே பிறந்தவளவிற் காண வொண்ணுதே போய்விடவே, ப்ராஹ்மணன் வந்து அர்ஜுநனை மறித்து 'க்ஷத்ரியா தமா! உன்னுலேயன்றே என் பிள்ளை போம்படியாயிற்று; க்ருஷ்ணன் எழுந்தருளிக் காப்பதை நீயன்றே தடுத்தாய்!' என்று நிந்தித்துக் கிருஷ்ணன் பக்கலிலே இழுத்துக் கொண்டுவர, கண்ணபிரான் கண்டு புன்சிரிப்புக்கொண்டு 'அவனை விடு; உனக்குப் பிள்ளையை நான் கொண்டுவந்து தருகிறேன்' என்றருளிச் செய்து, ப்ராஹ்மணனை யும் அர்ஜுநனையும் தன்னுடன் கொண்டு தேரிலேறி, அர்ஜுநனைத் தேர்செலுத்தச் சொல்லி, அத்தேர்க்கும் அவர்கட்கும் திவ்யசக்தியைத் தனது ஸங்கல்பத்தால் கற்பித்து, இவ்வண்டத்துக்கு வெளியே நெடுந்தூர மளவுங் கொண்டு போய், அங்கு ஓரிடத்தில் தேருடனே இவர்களை நிறுத்தி, தேஜோரூபமான பரமபதத்திலே தன் நிலமாகையாலே தானேபோய்ப் புக்கு, அங்கு நாச்சிமார் தங்கள் ஸ்வாதந்திரியங் காட்டுகைக்காகவும் கண்ணபிரானது திவ்ய ஸௌந்தர்யத்தைக் கண்டு களிக்கைக் காகவும் அழைப்பித்து வைத்த அந்தப் பிள்ளைகள் நால்வரையும் அங்குநின்றும் பூர்வரூபத்தில் ஒன்றுங்குலையாமற் கொண்டுவந்து கொடுத்தருளினன். ... *

## 125. துரியோதனன் சபையில் நிலேதடுமாறினது

கண்ணபிரான் பாண்டவ தூதனுய்த் துரியோதனனிடமெழுந்தருள, அக் கண்ணனது வருகையை ஏற்கெனவே அறிந்திருந்த துரியோதனன் ஒருபெருஞ் சபையைக் கூட்டி அதில் அரசர்களையெல்லாம் நாற்காலிகளில் வீற்றிருக்கச் செய்து தானும் சிங்காசனத்திலமர்ந்திருந்து அரசர்களை நோக்கி 'ஓ அரசர்களே! இப்போது க்ருஷ்ணன் இங்கு வரப்போகிறுன், அவன் வரும்போது ஒருவருமெழுந்து மரியாதை செய்யக்கூடாது; செய்தால் என்னுடைய நிக்ரஹத்திற்கு இலக்காவீர்கள்' என்று கடுமையாக நியமித்துத் தானும் உறுதியுடனிருந்தான். உடனே கண்ணபிரானும் அவ்வாறே எழுந்தருளியாயிற்று. "ஆனைவரும் பின்னே, மணியோசை வரும் முன்னே" என்னுமாபோலே கண்ணனுடைய சோதிச் சுடர்விளக்கம் முன்னமே வந்துலவ, அவ்வளவிலேயே ஸபையிலிருந்த அரசர்களனைவரும் பரவசர்களாய் எழுந்துவிட்டார்கள். அதுகண்ட துரியோதனன் தானும் துடைநடுங்கி யெழுந்து விட்டான். தானெழுந்தது தனக்குத்தெரியாமல் அரசர்களைநோக்கி 'என்கட்டளையை மீறி ஏன்எழுந்தீர்கள் என்றுகேட்க, 'பிரபு எழுந்ததனுல் நாங்களெழுந்தோம்' என்று அவர்கள்கூற, 'அப்படியா? நானெழுந்தேனு என்ன?' என்று சொல்லிக் கொண்டே ஆசனத்திலுட்கார்ந்துகொண்டான். [இவ்வரலாறு மஹாபாரதத்தில் *யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவசாః ப்ரதிபேதிரே* என்று தெரிவிக்கப்பட்டது. பெரியாழ்வார் (1-8-5) * கழல்மன்னர் சூழக் கதிர்போல் விளங்கி, எழலுற்று மீண்டேயிருந்துன்னை நோக்கும், சுழலைப் பெரிதுடைத் துச்சோதனன் * என்கிற பாசுரத்தில் இதனை யநுஸந்தித்தார். இதற்கு அடுத்தபடியாக நடந்த வரலாறு துரியோதனன் பொய்யாஸனமிட்டுப் பரிபவப்பட்டது. அது 120ஆம் உபந்யா ஸத்தில் (பக்கம் 14ல்) காணத்தக்கது.] .... .... .... .... *

## 126. தேரின்மேல் முன்னின்று மோழையெழுவித்தது

கண்ணபிரான் பாண்டவர்களைத் தேரில்இருத்தித் தான் ஸாரதியாய்த் தேரை யோட்டிக்கொண்டு குருக்ஷேத்திரத்திற்குச் செல்லும் வழியில் தண்ணீர் காணக் கிடைக்காத கொடிய பாலைநிலமாயிருக்க, பாண்டவர்களும் விடாய்த்துத் தேர்க் குதிரைகளும் விடாய்த்து நகரமாட்டாத நிலைமைநேர, பாண்டவபக்ஷபாதியான கண்ணபிரான் கடினமான ஸ்தலத்திலும் நீர் நரம்பு அறியவல்லவனாகையாலே அங்கு வாருணாஸ்திரத்தைப் பிரயோகித்துக் கீழுள்ளநீரை வெளிக்கிளப்பிக் குதிரை களைவிட்டு நீரூட்டிப்புரட்டி யெழுப்பிக்கொண்டுவந்து தேரிலேபூட்டி நடத்தினன். [இக்கதையை பெரியாழ்வாரொருவர்மட்டும் * மன்னர்மறுக மைத்துன்மார்க்கொரு தேரின்மேல் முன்னங்குநின்று மோழையெழுவித்தவன் * (4-2-7)என்கிறபாசுரத்தில் அநுஸந்தித்தார். இந்தஸ்தலம்இற்றைக்கும்'பாணகங்கா' என வழங்கப்பெறுகின்றது.

## 127. மருமகன்றன் சந்ததியை உயிர்மீட்டுக் கொடுத்தது

பாரதப்போரில் அர்ஜுனன் மகனான அபிமந்யுவின் மனைவியாகிய உத்தரை கர்ப்பிணியாயிருக்க, அவளுடைய கருவை நோக்கி அச்வத்தாமா பிரயோகித்த அபாண்டவாஸ்திரத்தினால் அக்கருவிலிருந்த சிசு [பரிக்ஷித்து] நீறாகியொழிய அச் சிசுவை மீண்டும் உயிர்பெறுத்தவேணுமென்று ஸுபத்திரையினால் பிரார்த்திக்கப் பட்ட கண்ணபிரான் தனது செந்தாமரைமலர்போன்ற திருவடியினால் அச்சிசுவை அடிதொடங்கி முடியீறாக ஸ்பர்சித்து "நான் அஸ்கலித ப்ரஹ்மசர்யனும் ஸத்ய வாதியும் அவ்யாஹதைச்வர்யனுமாயின் இக்குழந்தை உயிர்பெறுக" என்று சொல்லுகையில் உத்தரக்ஷணத்திலேயே அச்சிசு உயிர்பெற்றுக் கருக்குழியில் சேர்ந்து ப்ராப்தகாலத்தில் ப்ரஸவம்பெற்றது. [இதுவும் பெரியாழ்வாரொருவரே அநுஸந்தித்த கதை. மஹாபாரதத்தில் ஆச்வமேதிக பருவத்துக்கு உள்ளீடான அநுகீதாபருவத்தில் 66 to 70 அத்யாயங்களில் பரக்கக்காண்க.] .... .... *

## 128. பார்த்தன் தெளிந்தொழிந்த பெருமை யுபந்யாஸம்

மஹாபாரத யுத்தத்தில் அர்ஜுனனுக்குப் பாசுபதாஸ்த்ரம் வேண்டியிருந்தது; சிவபிரானை ஆராதித்து அதனைப் பெறவேணுமென்று அவன் முயன்றவளவில் இவனுக்கு இத்தனை பரிச்ரமம் ஏதுக்கென்று கருணைகொண்ட கண்ணபிரான் அவ்வர்ஜுனனை நோக்கி "ருத்ரனிடத்தில் நீ செய்ய நினைத்திருக்கிற ஆராதனையை என் காலிலே செய்து அபேக்ஷிதம் பெறுவாயாக" என்று கட்டளையிட்டுத் தனது முழந்தாளைக் காட்ட, அங்கே அவன் சில புஷ்பங்களை யிட்டு அர்ச்சிக்க, அற்றை யிரவு கனவிலே உருத்திரக்கடவுள் அந்த புஷ்பங்களைத் தனது தலையிலே அணிந்து கொண்டுவந்து காட்சிதந்து அஸ்த்ரத்தைத் தந்து போனான். * பார்த்தோ விஜேதா மதுஸூதநஸ்ய பாதாரவிந்தார்ப்பித சித்ரபுஷ்பம், ததர்ச கங்காதர மௌலிமத்யே புநவ வீரः க்ருதநிச்சிதார்த்தः.* என்கிற ச்லோகம் ஆசாரியர்களால் உதாஹரிக்கப் பட்டுள்ளது காண்க. .... .... .... .... .... *

குறிப்பு :—கண்ணபிரானுடைய கதைகள் அனந்தங்களா யிருந்தாலும் திவ்யப்பிரபந்தங்களில் அநுஸந்திக்கப்பட்டுள்ள கதைகள்மட்டும் இங்கு இருபத்தெட்டு உபந்யாஸங்களாக விளக்கப்பட்டன. இவற்றில் சில ரஸாநுபவங்கள் செய்யக்கருதி அவ்வநுபவத்திற்கு மூலமாக இக்கதைகள் விளக்கப்பட்டன வென்றுணர்க. அவ்வநுபவம் இராமபிரானுக்கும் கண்ணபிரானுக்கும் சரித்திர வகைகளால் ஒற்றுமை நயம் காட்டுவதும் கண்ணபிரானுக்கு ஏற்றம் காட்டுவதுமாகும். அதை ஒரு சுலோகத்தினால் முன்னம் பிரதிஜ்ஞை செய்கிறேன். அந்த சுலோகமாவது :

# 129. ஸ்ரீராமக்ருஷ்ணஸாம்ய நிர்வாஹோபந்யாஸம்

நத்யாஃ கூலேவதீர்ணௌ பித்ருவசநபரித்ராயகௌ ப்ரேமவச்யௌ
ஆபால்யாத் வைரிப்ருந்தக்ஷபணபடுதரௌ ப்ராப்த காந்தாரயாத்ரௌ,
மோக்ஷைச்வர்யப்ரதௌ சாபி அவரகுலஜ ஸௌஹார்த்ததந்யௌ ஸுரம்யௌ
பாரம்யே நிர்வ்யபேக்ஷௌ அதிமநுஜக்ருதீ ராமக்ருஷ்ணௌ நமாமி.

[இங்கே சுருக்கமான உரைகாட்டி மேலே 130 முதலாகப் பத்து உபந்யாஸங்கள் விரித்துரைப்போம்.]

1. நத்யாஃ கூலே அவதீர்ணௌ—*இராமபிரான் ஸரயூநதிக்கரையிலும் கண்ணபிரான் யமுனையாற்றங்கரையிலும் அவதரித்தவர்கள்.*

2. பித்ரு வசந பரித்ராயகௌ—* *பிதுர் வசநநிர்தேசாத்* * *இத்யாதிப்படியே இராமபிரான் பித்ருவாக்ய பரிபாலகனென்பது ப்ரஸித்தம்; கண்ணனும்* * *உபஸம்ஹர விச்வாத்மந் ரூபமேதத் சதுர்ப்புஜம்* * *என்கிற பித்ருவாக்யத்தை உடனே பரிபாலித்தவன்.*

3. ப்ரேமவச்யௌ—*இராமபிரான்* * *மநஸ்வீ தத்கதஸ் தஸ்யா நித்யம் ஹ்ருதி ஸமர்ப்பிதஃ* * *என்னும்படி பிராட்டி பக்கலிலே ப்ரேமவசம்வதர். கண்ணபிரான்* * *அணியாய்ச்சியர் சிந்தையுள் குழகனார்.*

4. ஆபால்யாத் வைரிப்ருந்தக்ஷபணபடுதரௌ-*இராமபிரான்* **நாவிஜித்ய நிவர்த்ததே* **என்னும்படி இளமையிலேயே வைரிகளை வென்றுவெற்றிபெற்றவன். கண்ணபிரான் தொட்டில்பருவமே பிடித்துத் தீப்பப்பூடுகளடங்க வுழக்கினவன்.*

5. ப்ராப்தகாந்தாரயாத்ரௌ—*இராமபிரான் தண்டகாரண்ய யாத்திரை செய்தவன்; கண்ணபிரான் விருந்தாவன யாத்திரை செய்தவன்.*

6. மோக்ஷைச்வர்யப்ரதௌ-*இராமபிரான் பெரியவுடையார்க்குமோக்ஷைச்வர்யமளித்தவன்; கண்ணபிரான் ததிபாண்டாதிகளுக்களித்தவன். மோக்ஷமாகிறஐச்வரியமென்கிற பொருள்தவிர மோக்ஷமும் ஐச்வரியமுமென்கிற பொருளும் தகும். இராமன் ஸுக்ரீவ விபீஷணாதிகளுக்கு கிஷ்கிந்தைச்வர்ய லங்கைச்வர்யாதிகள் அளித்தவன். கண்ணன் குசேலாதிகளுக்கு* **தத்தேஸ்ம ஸித்தேசதாம்**

7. அவரகுலஜஸௌஹார்த்ததந்யௌ—இராமன் குஹன் முதலான கீழ்மக்களோடு தோழமை கொண்டவன். கண்ணன் தானே தாழ்ந்த குலத்திலே பிறந்து தாழ்ந்தாருடனே போது போக்கினவன்.

8. ஸௌந்தர்யௌ—அழகில் ப்ரஸித்தி இருவர்க்குமொக்கும்.

9. பாரம்யே நிர்வ்யபேக்ஷௌ—இராமன் * பவாந் நாராயணோ தேவ: * என்றால் அதற்கு இசையாதே * ஆத்மாநம் மாநுஷம் மந்யே * என்றவன். கண்ணன் கோவர்த்தநோத்தரணத்தில் வியந்த கோவலர்கள் 'தேவோ வா த்வம்' என்ன, அதற்குச்சீறி * அஹம் வோ பாந்தவோ ஜாத: * என்றவன்.

10. அதிமநுஜக்ருதீ—இராமன் கடலில் அணைகட்டினது முதலான அதிமாநுஷ காரியங்கள் செய்தவன். கண்ணன் ஸாந்தீபநி புத்ராநயன வைதிக புத்ராநயனுதிகளான அதிமாநுஷ க்ருத்யங்கள் பலபல செய்தவன்.

ஆகஇப்படி இருவர்க்கும் ஸாதர்மியம்நிரூபித்தது தவிர,இச்சரிதைகளிலேயே கண்ணனுக்கு மிக்கஏற்றமும் மேலே 133 முதலானஉபந்யாஸங்களில் விரிவாகநிரூபிப்போம்.

## 130. ஸம்பந்தஜ்ஞானமே ஸகலநன்மைகளுக்கும் மூலம்

எம்பெருமான், சேதனர்களையும் அசேதநங்களையும் சரீரமாகக் கொண்டவன். அவன் பெருமையில் தலைநின்றவன். நாம் சிறுமையில் தலை நிற்பவர்கள். நாம் அப்பெருமானை வழிபடுவதற்கு உரியோம். அப்பெருமான் திறத்து நாம் செய்யக் கூடிய வழிபாடுகள் பலவகைப்பட்டிருக்கும். அவற்றைப்பற்றின விரிவுகள் சாஸ்திரங்களில் விசதமாகக் காணக்கிடைக்கும். அந்த வழிபாடுகளெல்லாம் ஒருபுறமிருக்கட்டும். அவாப்த ஸமஸ்தகாமனை பெருமானுக்கு நாம் செய்யும் வழிபாடுகள் என்ன பயனைத் தரப்போகின்றன! நம்முடைய ஸ்வரூபம் நிறம் பெறுதற்காகவே நாம் வழிபடுவோமத்தனை. எம்பெருமான் அல்ப ஸந்துஷ்டன். அநாதி காலமாக அவனோடு எதிரம்பு கோக்கின்ற (அதாவது—விவாதப்படுகின்ற) கொடிய ஸம்ஸாரிகள் நாம். இந்நிலைமையில் நின்றும் நாம் நீங்கி அவனோடு நமக்குண்டான ஒழிக்க வொழியாத உறவுகளைத் தெரிந்துகொண்டோமாயின் இதுவே பரம பூஜையாகும். ஸம்பந்தஜ்ஞான மாத்திரமே நமக்கு, மேலான நன்மைகளுக்கு எல்லை; அஃது உண்டானால் நாம் எம்பெருமானோடு விவாதப்படமாட்டோம். விவாதம் தொலைந்ததென்னில் எவ்விதமான பணிவிடைகளும் நாம் செய்தோமாவோம்.

மநுஸ்ம்ருதியில் (8—92) "யமோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவைஷ ஹ்ருதி ஸ்தித:, தேந சேத் அவிவாதஸ் தே மா கங்காம் மா குரூந் கம:" என்று சொல்லிற்று. இதன்கருத்தாவது:—ஸர்வநியாமகனையும் தண்டதரனையும் (அல்லது ஸூர்யவம்சத்திற் பிறந்தவனையும், அல்லது ஆதித்யமண்டலவாஸியாயும்) எல்லார்க்கும் இனியனையுமிருக்கிற எம்பெருமான் உனது உள்ளத்தினுள்ளேயுளன்; அவனோடு விவாதம் நெடுநாளாக அநுவர்த்தித்துக்கொண்டு வருகிறது; அதாவது, இந்த ஆத்ம வஸ்துவை அவன் தன்னுடையதாக அபிமானித்தால் அதற்கு இசையாதே 'இது என்னுடை

யது தான்' என்று செருக்கியிருப்பதுவே விவாதம். இது தொலைந் தொழியுமாகில், கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களில் குடைந்தாடப் போகவும் வேண்டா; குரு க்ஷேத்ரம் முதலிய புண்ய க்ஷேத்ரங்களை ஸேவிக்கப் போகவும் வேண்டா. அஹங் கார மமகாரங்களை உள்ளே வைத்துக்கொண்டு பிராயச்சித்தம் பண்ணுகையாவது ஒரு பாத்திரத்தினுள்ளே அசுத்த வஸ்துவை யிட்டுவைத்து மேலே பளபளவென்று சுத்தி செய்வது போலாதலால், உள்ளே எம்பெருமானோடு விவாதத்தை வைத்துக் கொண்டே க்ஷேத்ர தீர்த்த யாத்திரை செய்வது எதற்கு? அந்த விவாதம் தொலைந்து விடின் இருந்தவிடத்திலேயே பரம சுத்தியுண்டாதலால் ஒரு க்ஷேத்திரத்தையும் ஒரு தீர்த்தத்தையும் தேடிப்போக வேண்டா என்றபடி. ஆகவே விவாதம் நீங்குமளவே வேண்டுவது. கூரத்தாழ்வானும் வரதராஜஸ்தவத்தில் "த்வத்தாஸ்யமஸ்ய ஹி மம ஸ்வரஸப்ரஸக்தம் தச்சோரயந்நயமஹம் கில சஸ்கல ப்ராக்! த்வம் மாமகீந இதி மாம் அபிமம்யஸேஸ்ம ஹஸ்தீச! சம்ஸமய நஸ் தமிமம் விவாதம்"—என்ற ச்லோகத்தினால் இதனைத் தெரிவித்தருளினர். ஸம்பந்தவுணர்ச்சி உறைப்பாக உண்டாவதுதான் விவாதம் தொலைந்தபடியாகக் கருதத்தக்கது. ஸம்பந்தஜ்ஞான முண்டான வளவி லேயே நாம் வாழ்ச்சி பெற்றோமாவோம். இதுபற்றி ஈடு முப்பத்தாறுயிரப்படியில் (1-2-7) ஒரு இதிஹாஸம் காட்டப்பட்டுள்ளது. அதனைத் தெளிய உரைப்போமிங்கு:

ஒரு நகரத்தில் ஒரு வணிகர் தலைவனிருந்தனன். அவன் வெளி நாடுகளில் நீண்ட காலம் வஸித்து வர்த்தகஞ் செய்து விசேஷமாகப் பொருள் படைக்க விரும்பி த்வீபாந்தர யாத்திரை செய்ய முயன்றான். அத்தருணம் அவனது மனைவி கருவுற் றிருந்தாள். அப்போதே அவன் புறப்பட்டு த்வீபாந்தரம் சென்று சேர்ந்தனன். பிறகு இரண்டொரு மாதங்கடந்த பின் அவனது மனைவி ஊரில் ஒரு புதல்வனை யீன்றாள். அம்மகன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகச் சுக்கில பக்ஷச் சந்திரன் போன்று வளர்ந்து வருகின்றான். த்வீபாந்தரத்தில் வர்த்தகஞ் செய்து வாழ்ந்து கொண்டிருக்கும் அவ்வணிகன் மகப்பேறு உண்டான செய்தியை யறிந்து பெருமகிழ்ச்சி கொண்டு விரைவிலேயே ஊர்வந்து சேர்தற்குப் பெருமுயற்சி செய்தும், மேன்மேலும் வர்த்தகத்தில் மீதூர்ந்து சென்ற மிலைப்பினால் கடுக மீண்டுவர முடியாமல் நெடுங்காலம் அங்கேயே தங்கி விட்டான். மகன் தானும் உரிய வயது வாய்ந்தவளவில் தனது குலத் தொழிலாகிய வர்த்தகத்தையே கைப்பற்றி வந்தான். வயது முதிர்ந்த வளவிலும் இவனது தகப்பன் த்வீபாந்தரத்திலேயே வாழ்கிறான். பின்பொரு நாள் அவ்வணிகனது மகன் தொழில் முறையில் வெளி நாட்டிற்குச் சென்றிருந்து பல சரக்குக்களுடன் கடல் வழியாய் ஊர்த்துறை முகம் வந்து சேர்ந் தான். அவன் வந்த கப்பலிலேயே அவனது தந்தையும் த்வீபாந்தரத்திலிருந்து பல மூட்டைகளுடன் ஊர் வந்தனன். அந்தக் கப்பல் துறைமுகஞ் சேர்ந்தவுடனே குமாரன் தனது மூட்டைகளை இறக்குவதாக உத்தேசித்த ஓர் இடத்திலேயே தகப் பனும் தான் கொணர்ந்த மூட்டைகளை இறக்க நினைத்தனன். இவ்விருவரும் தங்க ளுக்குள்ள பித்ரு புத்ரபாவ ஸம்பந்தத்தை அறியாதவர்கள்; 'இவன் நம் மகன்' என்று தந்தை அறியான். 'இவர் நம் தகப்பனார்' என்று மகனுமறியான். உண் மையில் இவர்கட்கு இவ்வுறவுமுறை தெரிவதற்கு ப்ரஸக்தியில்லையே. இக்குமாரன் பிறப்பதற்கு முன்னமே யன்றோ அவ்வணிகன் வெளிநாடு சென்றிட்டான்.

ஆகவே 'இவன் வெளிநாட்டு வர்த்தகன் என்று மகன் பாவிக்கலானான். தந்தையும் மகனை அங்ஙனமே பாவித்தான். இறக்குமதியிடத்தைப்பற்றிய விவாதம் இவர்கட்கு முற்றிவிட்டது. 'இவ்விடத்தை நானே முதலில் உத்தேசித்தேன்' என்று இருவரும் நெடும்போதாக வாதாடுகின்றனர். அப்போது இவ்விருவருடையவும் உறவுமுறையை உணர்ந்திருப்பானொரு கிழவன் கண்டு 'அந்தோ! உறவு அறியாமல் இது என்ன விவாதம்?' என வருந்தி 'இவன் உன் தந்தை, நீ அவனது மகன்; ஆயிருக்க ஏதுக்கு இங்ஙனே வீண்விவாதம்?' என்றறிவித்தனன். அதன்பிறகு அங்கு என்ன நடந்திருக்க வேணும்! ஸம்பந்த உணர்ச்சி யுண்டானவுடனே கீழிழந்த நாளைக்குச் சோகித்து, இருவர்சரக்கும் ஒருசரக்காய், தந்தை ரக்ஷகனாய்,மகன் ரக்ஷ்யனாய் விவாதம்தொலைந்து பரமரஸம் தலைப்பற்றி வாய்க்கொண்டவாறு பேச்சுக்கு நிலமாமோ?

அதுபோலவே நாமும் நிருபாதிக பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய "உன்றன்னோடுறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது" என்னும்படியான உறவின் உறுதியை உற்று நோக்கி ஈச்வரன் "த்வம் மே" [நீ எனக்கு அடியன்] என்றால், "அஹம் மே" (நான் எனக்கே உரியேன்) என்னும் விவாதத்தை விட்டொழித்தால் "பொன்னுலகாளீரோ புவனி முழுதாளீரோ" என்னும்படியாக உபய விபூதியும் நாம் தாராளமாக அநுபவிக்கும் செல்வமாகுமன்றோ.

மாலைப்பொழுதில் விஹாரார்த்தமாக வெளியே சென்ற ராஜகுமாரன் அழகிய தொரு தோட்டத்தைக்கண்டு உள்ளே புகுந்து இளைக்க நினைத்தும் கட்டுங்காவலுமாயிருந்தது கண்டு அஞ்சி நிற்குமளவில் 'இஃது உன் தகப்பனுடைய தோட்டங்காண்' என்று ஒரு பெரியார் தெரிவிக்கவே, பிறகு தேங்காதே புக்கிருந்து இளைக்கலாயிற்று என்றவொரு கதையையுங் காட்டியருளினர் நம்பிள்ளை. ... .... *

## 131. நவவிதஸம்பந்த விவரணோபந்யாஸம்

எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள ஸம்பந்தம் ஒன்றன்று, இரண்டன்று; ஒன்பது வகையான ஸம்பந்தங்கள் திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்திலிருந்து கிடைக்கின்றன. அத்திருமந்திரம் நமக்கு மங்கலஸூத்ரம் போன்றது என்று ஆசார்யர்கள் அருளிச் செய்கிறார்கள். உலகில் ஒரு கன்னிகையின் கழுத்தில் தாலி ஏறினவாறே தம்பதிகளுக்கு பர்த்ரு பார்யாஸம்பந்தம் என்ற ஒரு உறவு ஏற்பட்டதாகும். திருமந்திரமாகிற தாலி நமது கழுத்தில் ஏறினவாறே ஒரு உறவு அல்ல; ஒன்பது உறவுகள் ஏற்பட்டனவாகும்.

எங்ஙனே யென்னில்; அதில் முதல் பதம் ப்ரணவம். அது அகாரமென்றும் உகாரமென்றும் மகாரமென்றும் [மூன்றக்ஷரமான] மூன்று பதங்கொண்டது. முதற்பதமான அகாரத்தில் மூன்று உறவுகள் தோன்றும். 1. பிதாபுத்ரபாவம். 2. ரக்ஷ்ய ரக்ஷகபாவம். 3. சேஷசேஷிபாவம். அந்த ஒரு அக்ஷரத்தில் இந்த மூன்று உறவுகள் எங்ஙனே தோன்றுகின்றன வென்னில்; அகாரத்திற்கு ப்ரக்ருதி சக்தியென்றும் தாதுசக்தியென்றும் இரண்டு வகையான சக்திகளுண்டு. "அகாரோவை ஸர்வா வாக்" என்றும் "அகர முதலவெழுத்தெல்லாம்" என்றும் சொல்லுகிற

படியே அகாரமானது எல்லா எழுத்துக்களுக்கும் முதன்மையாயிருந்துகொண்டு, தனக்கு அர்த்தமான எம்பெருமான் உலகுக்கெல்லாம் முதல்வன் என்று காட்டுத லாகிறவிது ப்ரக்ருதி சக்தியெனப்படும். "ஆதிபகவன் முதற்றேயுலகு" என்ற குறளும் இதனையே காட்டிற்றாகும். ஆகவே, அகாரத்தில் ப்ரக்ருதிசக்தியினால் ஏற்பட்ட உறவு. கார்ய காரண பாவம் (அல்லது) ஜந்ய ஜநகபாவம், (அல்லது) பிதா புத்ரபாவம்.

அந்த அகாரமானது (அவ-ரக்ஷணே) என்கிற தாதுவிலிருந்து தேறினதாகை யாலே எம்பெருமான் ஸர்வரக்ஷகன் என்றதாகும். இதனால் (2) ரக்ஷ்ய ரக்ஷகபாவ மாகிற உறவு தேறிற்றாகிறது. இதுதான் தாது சக்தி ஸித்தமெனப்படும்.

இந்த அகாரத்தின்மேல் வியாகரண சாஸ்த்ரப்படி (வைதிக ப்ரக்ரியையில்) சதுர்த்தீ விபக்தியிருந்து லோபித்ததாகக் கொள்ளப்படுகிறது. இல்லாவிடில் அந் வயிக்கவே மாட்டாது. அந்த விபக்தியானது 'அவனுக்கு சேஷப்பட்டது' என்கிற பொருளைக்காட்டுதலால் (3) சேஷ சேஷி பாவம் என்கிற உறவு தேறிற்று.

இனி அடுத்துள்ள உகாரமானது அவதாரணப் பொருளதாய் எம்பெரு மானுக்கே சேஷப்பட்டது என்று காட்டுதலால் "கண்டாரிகழ்வனவே காதலன் தான் செய்திடினும், கொண்டானையல்லா லறியாக்குலமகள் போல்" (பெருமாள் திரு மொழி) என்கிறபடியே (4) பதிபத்நீபாவமாகிற உறவு தேறுகின்றது.

அதற்கு அடுத்துள்ள மகாரமானது "மந-ஜ்ஞானே" "மந-அவபோதநே" என்கிற தாதுக்களிலிருந்து நிஷ்பந்நமாகி ஜ்ஞாதாவான ஆத்மாவைச் சொல்லுத லால் (5) ஜ்ஞாத்ருஜ்ஞேய பாவமென்கிற உறவு தேறிற்று. எம்பெருமான் அறியப் படுமவன், ஆத்மா அறிகின்றவன் என்றவாறு. "ஒண்தாமரையாள் கேள்வனொரு வனையே நோக்குமுணர்வு" என்கிற பொய்கையார் பாசுரம் இங்கு அநுஸந்தேயம்.

அதற்குப்பிறகு உள்ள நம: பதத்தினால் தன்னை ரக்ஷித்துக் கொள்வதில் தனக்கு எவ்விதமான உரிமையும் இல்லையென்று காட்டுகிற முகத்தினால் ஆத்ம வர்க்கமெல்லாம் எம்பெருமானுடைய ஸொத்து என்று காட்டுதலால் (6) ஸ்வஸ்வாமி பாவம் என்கிற உறவு தேறிற்று.

இனி நாராயண பதத்தையெடுத்துக்கொண்டால் இதற்குத் தத்புருஷ ஸமாஸ மென்றும் பஹுவ்ரீஹி ஸமாஸமென்றும் இருவகையான வ்யுத்பத்தி மார்க்கங்கள் கொள்ளப்பட்டு, நாரபதார்த்தமான ஸகல வஸ்துக்களுக்கும் எம்பெருமான் ஆதார மென்றும், அந்த ஸகல வஸ்துக்களையும் தான் ஆதாரமாகவுடையவனென்றும் தெரிந்துகொள்ளுகிறோம். ஆதலால் நாராணாம் அயநம் என்கிற தத்புருஷனால் (7) ஆதாராதேயபாவமென்கிற உறவு தேறுகின்றது. நாரா: அயநம் யஸ்ய ஸ: என்கிற பஹுவ்ரீஹியால் (8) சரீரசரீரிபாவமென்கிற உறவு தேறுகின்றது. நாரங் கள் பகவானிடத்திலே யிருக்கின்றன என்பது தத்புருஷ ஸித்தம். நாரங்களிலே பகவானுளன் என்பது பஹுவ்ரீஹி ஸித்தம். அவற்றிலே இவனிருப்பதாவது அவற்றை உடலாகக்கொண்டு தான் அவற்றுக்கு உயிராக இருப்பதேயாதலால் இதனால் சரீராத்மபாவம் ஸித்தித்ததென்னக் குறையில்லை.

இனி அந்த நாராயண பதத்திலுள்ள சதுர்த்தியானது, காகாக்ஷிந்யாயத்தாலே முன்னும் பின்னும் தன்னிடத்திலும் அந்வயிக்கின்ற நமஸ்ஸினால் பரிஷ்காரம் பெற்று, நாராயணனுக்குச் செய்யப்படுகின்ற கைங்கரியத்தின் போகமும் அவனுக்கேயன்றி இந்த ஜீவனுக்கில்லையென்று நிஷ்கர்ஷித்துக் காட்டுதலால் (9) போக்த்ரு போக்யபாவம் என்கிற உறவைத் தெரிவிக்கின்றது. எம்பெருமான் போக்தா, ஜீவாத்மா போக்யன் என்றவாறு. ஜீவாத்மாவை போக்தாவாகவும் எம்பெருமானை போக்யனாகவும் கொள்வதும் ஒருபுடையுண்டெனினும் திருமந்திரத்தில் வடிக்கட்டின பொருள் முந்துறப் பணித்ததேயாகும். ஆகத் திருமந்திரத்தினால் நவவித ஸம்பந்தங்கள் தெரியவந்தன. இவற்றைச் சிந்தையில் பதியவைத்துக் கொள்வதற்காக "பிதா ச ரக்ஷகச் சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி:। ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தா சாத்யமநூதித:॥" என்கிற ச்லோகத்தைப் பெரியார் காட்டியுள்ளார். *

## 132. நம்பெருமாள் திருமஞ்சனத்தில் பட்டருடைய ஈடுபாடு

எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள நவவித ஸம்பந்தங்களையும் நாம் உணரப் பெறாவிடினும் "அவன் சேஷி, நாம் சேஷபூதர்" என்று இத்தனையேனும் அறிய ப்ராப்தம். இவ்வளவையே எம்பெருமான் எதிர்பார்த்திராநின்றான். கூரத்தாழ்வான் திருக்குமாரராகிய ஸ்ரீபராசரபட்டர் கோயிலில் வாழும் நம்பெருமாளுடைய திருமஞ்சனங்களை ஸேவிக்குங் காலங்களில் அந்த ஸந்நிவேசத்தில் ஈடுபட்டும் வடிவழகில் ஈடுபட்டும் சமத்காராதிசயம் பொலியப் பலச்லோகங்களை அருளிச்செய்திருக்கிறார். அவை நாளைக்கும் அவருடைய திருவம்சஸ்தர்களால் திருமஞ்சன ஸமயங்களில் விண்ணப்பம் செய்யப்பட்டு வருகின்றன. அவற்றுள் "த்வம் மேஹம் மே" என்கிற ஒருச்லோகம் மிகவும் அற்புதமாக அமைந்தது. இதனை நம் ஆசாரியர்கள் வ்யாக்கியான க்ரந்தங்களிலே கையாண்டு வருகின்றனர். இதன் அரிய பெரிய பொருள் இங்கு விவரிக்கலாகிறது. ஸ்ரீரங்கநாதன் தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையையுடையனாய்த் திருமஞ்சனம் கொண்டருள ஸந்நத்தராயிருக்கும்படியைப் பார்த்தால் பிரமாணம் செய்ய ஸித்தராயிருக்கிறாரோ! என்று உத்ப்ரேக்ஷிக்கலாம்படியுள்ளது என்று பட்டர் திருவுள்ளம் பற்றுகிறார். உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் துளசி மாலையையணிந்து கொண்டு ஒரு முழுக்குப்போடுவது வழக்கமாதலால் எம்பெருமானும் அங்ஙனே செய்கிறானே என்று உல்லேகிக்கிறார். பிரமாணம் செய்யவேண்டிய ஆவச்யகதை எம்பெருமானுக்கு என்ன வந்தது என்னில், உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் எதற்காகச் செய்வது வழக்கம் என்று பார்த்தால், ஒருவன் தன்னுடைய ஸொத்தைப் பிறன் கொள்ளை கொண்டால் அதைத் தனக்கு ஸ்வாதீனப்படுத்தித் தரவேணுமென்று நியாயாலயத்தில் விண்ணப்பம் செய்துகொண்டு உண்மையில் அந்த ஸொத்து யாருடையது என்று தெரிந்துகொள்வதற்காக ஸாக்ஷி விசாரணை முதலியன செய்யப்படுங்காலத்திலே தகுந்த ஆதாரங்களைக்கொண்டு உண்மையை ஸ்தாபித்துக்கொள்ள முடியாமல் அந்தோ! நம்முடைய ஸொத்தை அநியாயமாய் இழந்துவிட நேருகின்றதே! என்கிற அநுதாபமுடையார் கடைசியாக

ஒரு வார்த்தை சொல்லுவது—" இது என்னுடைய சொத்துதான் என்று பிரமாணம் செய்ய நான் துளசிமாலையணிந்து முழுக்கிட்டுவிடுகின்றேன்; நியாயாதிபதிகள் அது கொண்டாவது உண்மையுணரவேண்டும்" என்பர்கள். நியாயாதிகாரிகளும் அதனை ஆதரித்துத் தீர்ப்புக்கொடுப்பதுண்டு. இது இன்னமும் வழக்கத்திலுள்ளது. இவ்விதமாகவே எம்பெருமானுக்கும் பிரமாணம் செய்யவேண்டிய ஆவச்யகதை நேர்ந்துவிட்டதாம். அது ஏதெனில், சேதநவர்க்கம் என்கிற ஸொத்து எம்பெருமானுடையது; ஆனல் அந்த ஸொத்தை "கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்றும் "பண்டேயுன் தொண்டாம் பழவுயிரை யென்னதென்று கொண்டேன்" என்றும் சொல்லுகிறபடியே ஸம்ஸாரிகள் கொள்ளை கொண்டார்கள். இந்த ஸொத்து என்னுடையது என்கிறான் எம்பெருமான். ஸம்ஸாரிகளோ 'இது உன்னுடையதல்ல, எங்களுடையதே' என்கிறார்கள். விவாதம் முற்றிவிட்டது. ஸம்ஸாரிகள் அடாவடியில் பலிஷ்டர்களாகையாலே அவர்களுடைய வாதமே மேம்பட்டு எம்பெருமானுடைய வாதம் தோல்வியடையும்படியான நிலைமையிலே வந்துவிட்டது. அந்தோ! அநியாயமாய் நம்முடைய ஸொத்தை இழந்துவிட நேருகின்றதே! என்கிற பரிதாபம் எம்பெருமானுக்கு உண்டாய்விட்டது. 'இந்த ஸொத்து என்னுடையதுதான்' என்று பிரமாணம் செய்தாகிலும் இதனை நாம் இழவாமல் அடைந்தே தீரவேண்டும்' என்கிற அபிநிவேசம் எம்பெருமானுக்கு உண்டாய் விட்டது. அது துளசிமாலையணிந்து முழுக்கிட்டுச் செய்யவேண்டிய காரியமாதலால் இந்தத் திருமஞ்சனமென்கிற வியாஜத்தாலே அது செய்யப்படுகிறது போலும் என்று பட்டருடைய உல்லேக சமத்காரம். ஈச்வரனுக்கும் சேதநனுக்கும் நடந்த விவாதம் ஒரு ஸம்வாத ரூபமாக இந்த ச்லோகத்தில் அழகாய்க் காட்டப்படுகிறது. ச்லோகம் வருமாறு:—

> த்வம் மேஹம் மே குதஸ் தத் ததபி குத இதம் வேதமூலப்ரமாணாத்
> ஏதச்சாநாதிஸித்தாதநுபவவிபவாத் ஸோபி ஸாக்ரோச ஏவ!
> க்வாக்ரோசঃ கஸ்ய?, கீதாதிஷு மம விதிதঃ, கோத்ர ஸாக்ஷீ?, ஸுதீঃஸ்யாத்
> ஹந்த த்வத்பக்ஷபாதீ ஸ இதி ந்ருகலஹே ம்ருக்ய மத்யஸ்தவத் த்வம்.

இதன் பொருள் சுருக்கமாகக் காட்டப்படுகிறது. த்வம் மே— இது எம்பெருமான் ஸம்ஸாரிசேதநனை நோக்கிச் சொல்லும் வார்த்தை. 'சேதநா! நீ என்னுடைய சரக்கு' என்றானெம்பெருமான். அதாவது நீ எனக்கு அடிமைப்பட்டவனென்றபடி. சேதநன் ஸ்வாதந்திரியம் பாராட்டி வணங்காமுடி மன்னனாய்க் கிடந்தபடியாலே எம்பெருமான் இவ்வார்த்தை சொல்லவேண்டியதாயிற்று.

(ஸம்ஸாரி)—அஹம் மே—நான் உனக்கு அடிமைப்பட்டவனல்லேன், எனக்கு நானே அரசன் என்றான். (இங்கே கவனிக்க.) எம்பெருமான் 'த்வம் மே' என்றாப்போலே ஸம்ஸாரியும் பதிலுக்கு 'த்வம் மே' என்னலாமே; அதாவது, 'நானா உனக்கு அடிமைப்பட்டவன், நீதான் எனக்கு அடிமைப்பட்டவன்' என்று ஸம்ஸாரி சொல்லியிருக்கலாமே; ஏன் அங்ஙனம் சொல்லவில்லை என்னில், இப்படிப்பட்ட பதில் ஸம்ஸாரி சொல்லியிருந்தானாகில் எம்பெருமான் பெறாப்பேறு பெற்றானவனே;

தான் சேஷியாயிருப்பதிலுங் காட்டில் சேஷபூதனாயிருக்கு மிருப்பிலே மிகவும் குதூஹலமுடையானன்றோ அவன். ஏதேனுமொருபடியாலே சேதநனோடு தனக்கு ஸம்பந்தம் ஏற்பட்டால் போதும் என்று பாரிப்பவனன்றோ அவன்; சேஷியாகவே தானிருக்கவேணுமென்கிற எண்ணம் இல்லையே அவனுக்கு. ஸம்ஸாரிகள் தன்னோடு உறவை அறுத்துக்கொண்டு போகாமல் தன்னை அடியானாகக் கொண்டு பரிமாறினாலும் பரமதிருப்தி பெறுபவனன்றோ அவன். அது தோற்றவன்றோ 'த்வம் மே' என்று ஸாவசேஷமாய்க் கிடக்கிறது. த்வம் மே தாஸ: என்றோ த்வம் மே ப்ரபு: என்றோ விவக்ஷித்துச் சொன்னபடி. ஏதேனுமொருபடிக்கு ஸம்ஸாரி இசைந்திடுவனோ என்று பார்த்தான் எம்பெருமான். ஸம்ஸாரி மஹாசதுரனாகையாலே 'இவனோடு நமக்கு எவ்விதமான உறவும் தேவையில்லை; அவன் நமக்கு அடியவனாக இருக்க இசைந்தாலும் அதற்கும் நாம் இசையவே கூடாது; அடியவன்போல் இருந்து காலக்ரமத்தில் நம்மையே அடிமைப்படுத்திக் கொள்ளவல்ல கிறியான் இவன்; ஆதலால் இவனுடைய எல்லையிலும் நாம் செல்லாமல் இருந்து விடுவதே நமக்குத் தகுதி' என்று ஸம்ஸாரி நினைத்தானாகையாலே 'அஹம் மே' என்று எம்பெருமானுக்குப் பிடிகொடாமலே விடையளித்துவிட்டான். இவனும் 'த்வம் மே' என்று பதில் சொல்லியிருந்தானாகில் அவ்வளவோடு விவாதம் சாந்தமாயிருக்குமே; எம்பெருமான் வெற்றிபெற்றானாய் விடுவனே. அந்த பாக்கியமில்லையவனுக்கு.

(எம்பெருமான்)—குதஸ் தத் (தத் குத:?) 'அஹம் மே' என்று சொன்ன ஸம்ஸாரியை நோக்கி எம்பெருமான் கேட்கிறான். எதனால் அப்படிச் சொல்லுகிறாய்?

(ஸம்ஸாரி)—தத் அபி குத:?—நீ, த்வம் மே என்று சொன்னாயே, அது நீ எதைக்கொண்டு சொன்னாய்?

(எம்பெருமான்)—இதம் வேதமூலப்ரமாணாத்—சேதநனே!, வேதமாகிற மூலப்பிரமாணத்தைக்கொண்டு நான் 'த்வம் மே' என்று சொன்னேன். *பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்* *க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:* இத்யாதிப்ரமாணங்கள் இங்குக் கொள்ளத்தக்கன.

(ஸம்ஸாரி)—ஏதச்ச அநாதிஸித்தாத் அநுபவவிபவாத்—நீ சொல்லுகிற ப்ரமாணம் ஓலைப்படாப்ரமாணமாகையாலே வெளிக்கு வரமாட்டாதது; "அஹம் மே" என்று சொன்ன எனக்கு ஸாதகமான ப்ரமாணம் அப்படிப்பட்டதன்று. அநாதிகாலமாக நான் ஸ்வாதந்திரியத்தை அனுபவித்துக்கொண்டு வருவதால், அநுபவமே ப்ரபல ப்ரமாணமாகையால் இதனால் உன்னுடைய வேதம் அடிபட்டொழிந்ததுபோ என்றான். உலகத்திலும் ஒரு க்ருஹம் ஒருவனுடையதென்று சாஸநபத்திரங்கள் இருந்தாலும் நெடுநாளாக அந்த க்ருஹத்தை வேறொருவன் அநுபவித்து வந்தால் அவனே அதற்குச் சொந்தக்காரனாய்விடுவன் என்றும், உண்மையான உடையவன் இழந்து போய்விடுவன் என்றும் காண்கிறோம். அதுபோல் எம்பெருமானே உடையவன் என்று சாஸநமிருப்பினும் அநாதியான அநுபவம் ஸம்ஸாரியினுடையதாகையாலே அந்த சாஸநம் துர்ப்பலமாக இதனால் நிரூபிக்கப்பட்டது. ஸம்ஸாரியும் கிரமமான வழியிலேயே வழக்காடுகிறான் போலும்,

(எம்பெருமான்)—ஸோபி ஸாக்ரோச ஏவ—சேதநா! உனக்கு ஸ்வாதந்திரிய அநுபவமுண்டென்பது உண்மையே; அதை நான் அபலபிக்கவில்லை. ஆனால் அந்த அநுபவம் நிராக்ஷேபமாக இருந்தாலன்றோ செல்லும். அப்படியில்லையே. உனது அநுபவம் ஆக்ஷேபத்தோடு கூடியதாயிற்றே. அதனை நீ சொல்லிக்கொள்வதனால் லாபமில்லையே! என்றானெம்பெருமான். உலகத்திலும் ஒருவனுடைய கிருஹத்தை இன்னொருவன் நெடுநாளைய அநுபவத்தில் வைத்திருந்தாலும் அந்த அநுபவத்தை அடிக்கடி ஸொந்தக்காரன் ஆக்ஷேபித்துக் கொண்டிருப்பதாகப் புலப்பட்டுவிட்டால் அவ்வநுபவம் செல்லமாட்டாதென்பது ப்ரஸித்தம்.

(ஸம்ஸாரி)—ஆக்ரோசஃ க்வ? கஸ்ய ஆக்ரோசஃ?—என்னுடைய ஸ்வாதந்திரியாநுபவம் ஆக்ஷேபத்தோடு கூடியதென்று சொன்னாய்; அப்படிச் சொல்லிவிட்டால் போதுமா? ஆக்ஷேபம் செய்திருப்பது யார்? ஆக்ஷேபம் எவ்விடத்தில் செய்யப்பட்டிருக்கிறது? அதையெல்லாம் விசதமாகச் சொன்னாலல்லவோ உனது வாதம் ஏறும்.

(எம்பெருமான்)—கீதாதிஷு மம விதிதஃ—(இது எம்பெருமானுடைய மறுமொழி.) 'க்வ' என்று கேட்டதற்கு 'கீதாதிஷு' என்பது பதில். கஸ்ய என்று கேட்டதற்கு 'மம' என்பது பதில். சேதநா! பகவத்கீதை முதலானவற்றிலே (உன் ஸமூஹத்தில் தலைவனான அர்ஜுனனென்கிறவொருவனை வைத்துக்கொண்டு) சேதநஸ்வாதந்திரியத்தை நான் ஆக்ஷேபித்திருக்கிறேனென்பதை நாடு நகரமும் நன்கறிந்ததே. என்றைக்கோ ஒருநாள் ஏதோவொரு மூலையிலே நீ ஆக்ஷேபித்திருந்தால் அது செல்லுமோ? என்று ஸம்ஸாரி சொல்லுவதற்கு இடமில்லாதபடி 'விதிதஃ' எனப்பட்டது. கீதை நடையாடாத இடமில்லை; கீதைக்கு ப்ரசாரமில்லாத காலமுமில்லை; கீதையைத் தெரிந்துகொள்ளாத வ்யக்தியுமில்லை என்ற அபிப்ராயங்கள் இச்சொல்லில் பொதிந்துள்ளன.

(ஸம்ஸாரி)—அத்ர கஃ ஸாக்ஷீ—வ்யவஹாரம் என்று வந்துவிட்டால் ஸாக்ஷி விசாரணை இருந்தே தீரவேண்டும். எத்தனை சாஸநபத்திரங்கள் இருந்தாலும் ஸாக்ஷிகளைக்கொண்டு நிரூபிக்கவேண்டியது முறைமை. உனக்கு ப்ரமாணமான வேதங்களும் கீதை முதலியனவும் கிடக்கட்டும். பெட்டியின்மீது ஏறிச்சொல்லுவதற்கு ஒரு ஸாக்ஷி வேணுமே. யார் ஸாக்ஷி? என்கிறான் ஸம்ஸாரி. எம்பெருமான் தவிர மற்ற எல்லா சேதநர்களும் ஸம்ஸாரிகளேயாதலால், அவர்களும் அஹம் மே என்றிருப்பவர்களே யாதலால் இவனுக்கு ஸாக்ஷிகள் எங்ஙனே கிடைக்கப்போகிறார்களென்பது சேதனனுடைய எண்ணம். எம்பெருமானுடைய பாக்யத்தாலே ஸம்ஸாரிகளினிடையே முமுக்ஷுக்களும் சிலர் இருப்பதால் அவர்கள் தனக்கு ஸாக்ஷிகளாக இருக்கத்தகுதியுடையார் என்று எண்ணின எம்பெருமான் "ஸுதீஸ் ஸ்யாத்" என்றான். ஞானிகளெல்லாரும் என் பக்ஷத்தில் ஸாக்ஷிகளாக நிற்கக்கூடும் என்றபடி. (ஸுதீஃ என்பதை ஜாத்யேகவசநமாகக் கொள்க.) அஸ்தி என்று உறுதியாய்ச் சொல்லாமல் ஸ்யாத் என்று சொன்னது ஏனெனில், இவ்விருள் தருமாஞாலமானது ப்ரஹ்லாதாழ்வானையுமுட்பட எதிரம்புகோக்கப் பண்ணினதாகையாலே ஞானிகளும் ஸமயத்திலே நம்மைக் கை விடும்படி நேர்ந்து விடுமோ; என்னவோ! என்கிற அதிசங்கை தோன்றி அதை ஸ்யாத் என்பதனால் காட்டினனென்க. "விண்ணுளார் பெருமாற்கு அடிமை

செய்வாரையும் செறும் ஐம்புலனிவை" ஆதலால் யாரையும் நம்புவதற்கில்லையே என்றெண்ணினன் போலும் எம்பெருமான்.

(ஸம்ஸாரி)—ஹந்த! த்வத்பக்ஷபாதீ ஸ:—ஸாக்ஷிகள் மத்யஸ்தர்களாக இருக்க வேணும். உறவினர்களையே கொண்டு சொல்லுவிக்கப்படுகிற ஸாக்ஷியம் உபயோகப்படாது. ஞானிகளை ஸாக்ஷியாகச்சொன்னது பொருந்துமோ? "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்று கீதையில் நீயே சொல்லியிருக்கிறாயே; உனது உயிர்நிலையாக வன்றோ ஞானிகள் இருப்பது. வாதியே ஸாக்ஷி என்று சொன்னதாகத் தேறிற்றேயல்லது பிறனொருவன் ஸாக்ஷியாகக் கூறப்பட்டானில்லையே (என்றான் ஸம்ஸாரி.)

இதற்குமேல் எம்பெருமான் என்ன செய்வன்? ஸம்ஸாரிகள் யாவரும் பிரதிவாதியாக ஆய்விட்டபடியால் அவர்களில் ஒருவரும் ஸாக்ஷிகளாக நில்லார். முமுக்ஷுக்களோ தன் வகுப்பில் சேர்ந்து விட்டபடியாலே அவர்களுடைய ஸாக்ஷியம் அப்ரயோஜநமென்று கண்ணழிக்கப்படுகிறது. அப்படிப்பட்ட ஸம்ஸாரிகளையும் விடமாட்டிற்றிலன். வ்யவஹாரத்திலே தான் தோல்வியடைய வேண்டியவனாக முடிந்து விட்டது. 'நம்முடைய சரக்குகளை நாம் அநியாயமாய் இழந்துவிடுவதா!' என்று பரிதபிக்கின்றான். இந்த நிலைமையில் தைவாதீநமாய் ஒரு உபாயம் ஸ்புரித்ததாம்; அதாவது ஸம்ஸாரியினுடைய வாயாடித்தனத்தினால் நமக்கு வ்யவஹாரத்தில் பழுது ஏற்பட்டாலும் ஸொத்து நம்முடையதேயென்பது திண்ணமாதலால், கடைசியாக ப்ரமாணம் பண்ணிக்கொடுத்து ஸொத்தைப் பெற்றுக்கொள்வதான முறைமையும் அரசாங்கத்தில் இருப்பதால் அந்த வகையில் நாம் வெற்றிபெறக்கடவோம் என்று தோன்றிற்றாம் எம்பெருமானுக்கு. [இதி ந்ருகலஹே ம்ருக்யமத்யஸ்தவத் த்வம்]

இதி—இவ்விதமாக, ந்ருகலஹே—சேதநனோடு விவாதமுண்டாகித் தனக்குத் தோல்வி விளைந்த வளவில், த்வம் ம்ருக்யமத்யஸ்தவத் (ப்ரகாசஸே)—தேவரீர் ப்ரமாணம் செய்ய ஸந்நத்தர்போலே விளங்காநின்றீர். "ப்ரமாணம் கர்த்து முத்யுக்தோ ம்ருக்யமத்யஸ்த உச்யதே" என்பது நிகண்டு.

துளபமாலை யணிந்துகொண்டு தீர்த்தமாடுவதை நோக்குமிடத்தில் 'சேதநர்களெல்லாரும் என்னுடைய ஸொத்துக்களே' என்று பிரமாணம் பண்ணுவான் போலேயிருந்ததென்கிற விதனால், அஹம்மே என்று இறுமாந்து கிடக்கிற ஸம்ஸாரிகளுங்கூடத் தோற்று ஈடுபடும்படியாயுள்ளது திருமஞ்சனஸேவையென்கை.

இந்த உத்ப்ரேக்ஷையினால் நமக்குக் கிடைக்கும் பொருள் யாதெனில்; எம்பெருமானோடு நாம் விவாதப்படாமல் இருக்குமளவே போதுமென்பதும், எவ்வகையினாலேனும் நம்மை அடிமைப்படுத்திக்கொள்ள அவன் வழிதேடுகின்றவன் என்பதும், நாமெல்லாம் அவனுடைய உடைமையாதலால் நம்மை ஆட்படுத்திக்கொள்வதிலேயே நோக்குடையனான அவனது திருவருளை நினைத்து நாம் மார்பிலே கைவைத்துறங்கலா மென்பதுமாம். .... .... ... .... .... *

---

குறிப்பு:—கீழே பக்கம் 19 (~~27~~ல்) ராமக்ருஷ்ண ஸாம்ய நிர்வாஹபரமாகக் காட்டியுள்ள சுலோகம் இனி விரிவாக வியாக்கியானிக்கப்படுகிறது.

# 133. நதீதீராவதார குதூஹலோபந்யாஸம்

(* நத்யா: கூலேவதீர்ணௌ * என்கிற ராமக்ருஷ்ணஸாம்ய ச்லோகத்தின் முதல் விசேஷணத்தின் விவரணம்.)

இராமபிரானுக்கும் கண்ணபிரானுக்கும் நதீதீரத்தில் அவதரிப்பதிலுள்ள குதூஹலத்தைப்பற்றின உபந்யாஸமிது. இதில் கண்ணபிரானுக்குள்ள ஏற்றமும் உபந்யஸிக்கப்படும். உலகத்தில் நதீதீரவாஸம் ஸமுத்ரதீரவாஸம் பர்வதாதி உத்துங்கஸ்தலவாஸம் இத்யாதிகள் பரமபாக்ய விசேஷங்களாகச் சொல்லப்படுகின்றன. ஸமுத்ரதீரவாஸத்திற் காட்டிலும் நதீதீரவாஸம் மிகச் சிறந்தது. ஏனென்றால், கடல் கண்ணுரைக் காண்பதற்கு மட்டும் அழகிதாயிருக்குமேயல்லது கடல்நீரை ஒரு விதமாகவும் உபயோகங்கொள்ள ப்ராப்தியில்லையன்றே. நதீதீர்த்தம் அப்படிப்பட்டதன்றே. ஸகலவிதமான உபயோகங்களுக்கும் ப்ராப்தியுண்டே. நதீதீரவாஸம் பண்ணப்பெற்றவர்கள் பயணமெடுத்துப் போமிடங்களிலும் நதீதீரவாஸத்தையே கணிசிப்பார்களாயிற்று. ஸ்ரீமந்நாராயணன் விரஜாதீரவாஸம்பண்ணிக் களித்தவனுகையாலே இந்நிலவுலகத்தில் திருவவதரிக்கத் திருவுள்ளம் பற்றும்போதும் நதீதீரத்தைத் தேடுகிருனாயிற்று. ஆகவேதான் ராமனுக அவதரித்தது ஸரயூதீரத்திலும், கண்ணனுக அவதரித்தது யமுநாதீரத்திலுமாயிற்று. ஆக நதீதீராவதார குதூஹலம் இருவர்க்கு மொக்குமென்று இவ்வகையாலே ஸாதர்மியம் கொள்ளக்கடவது. இனி இதில் கண்ணனுக்குண்டான ஏற்றம் கேண்மின்.

இராமபிரான் ஸரயூதீரத்தில் அவதரித்தானேலும் அவனுடைய சரித்திரத்தில் ஸரயூஸம்பந்தலேசமும் காணப்படவில்லை. கடைசியாகத் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளும்போது ஸரயுவில் இறங்கினுரென்பது தவிர வேறு விதமாக ஸரயூப்ரஸ்தாவம் நிகழவில்லை. சக்ரவர்த்தி திருமகனுகத் திருவவதரித்தபடியாலே ராஜகுமாரர்களுக்குப் போல உஷ்ணோதகஸ்நானந்தான் இராமனுக்குக் கிடைத்திருக்கும். பரதாழ்வானைப்பற்றி இளையபெருமாள் நிர்வேதத்தோடு சொல்லும்போது * அத்யந்த ஸுகஸம்வ்ருத்தஸ் ஸுகுமாரஸ் ஸுகோசித:, கதம் நு அபரராத்ரேஷு ஸரயூமவகாஹதே.* [ஆரண். 16-30] என்றதை ஆழ்ந்து நோக்குங்கால் 'குளிர் நீரைத் தொடாமல் வெந்நீரிலேயே ஸுகமாக வளர்ந்த பரதன் இப்போது உஷ்ணோதகம் பெறுவதற்கு ப்ரஸக்தியில்லாமையாலே எப்படித்தான் ஸரயுவில் குடைந்து நீராடுகிருனே!' என்கிற அவஸாதமும் தோன்ற நிற்கும். பரதாழ்வானுடைய ஸௌகுமார்யத்திற்குக் குறைந்ததன்றே இராமனுடைய ஸௌகுமார்யம். யசோதைப் பிராட்டி கண்ணனை நோக்கி "நீ பிறந்த திருவோணமின்று" என்று நிமித்த விசேஷத்தைச் சொல்லி *காய்ச்சின நீரொடு நெல்லி கடாரத்தில் பூரித்து வைத்தேன் * என்று வெந்நீர் காய்ச்சி வைத்திருப்பதாகவுஞ் சொல்லி நீராடவழைக்கிருள். இது நைமித்திக ஸ்நானமத்தனை. சக்ரவர்த்தி திருமகனுக்கு இதுதானே நித்ய ஸ்நானமாகவிருக்கும். ஆக, இராமன் ஸரயூதீரத்தில் அவதரித்தானென்பது மட்டுமேயுள்ளதென்று விளக்கப்பட்டது. இனி கண்ணனுக்கும் யமுனைக்குமுண்டான தொடர்பைப் பற்றிப் பேசப் புகுந்தாலோ வர்ஷசதம் பேசினுலும் போதாது.

கண்ணன் திருநாமமே * தூயபெருநீர் யமுனைத் துறைவனென்பதாம். யமுனையின் தீர்த்தத்திற்குத் தூய்மையை ஆசாரியர்கள் அற்புதமாக வருளிச்செய்கிருர்கள். அதைச் சிறிது விவரித்தாக வேண்டுமிங்கு; விவரிக்கிறேன். இராவணன் பஞ்சவடியினின்று பிராட்டியை அபஹரிக்கும்போது "ஹம்ஸ காரண்டவா கீர்ணாம் வந்தே கோதாவரீம் நதீம், க்ஷிப்ரம் ராமாய சம்ஸ த்வம் ஸீதாம் ஹரதி ராவண:" என்று கோதாவரியை நோக்கிக் கைகூப்பி 'தாயே! இப்படி ராவணன் என்னைக் கவர்ந்து போனுனென்று பெருமாளுக்குச் சடக்கெனச் சொல்லுவாயாக' என்று வேண்டிக்கொண்ட விடத்தும் ராவணபயத்தாலே சொல்லிற்றில்லை; ராவணனுடைய இருப்பிடத்திற்கும் கோதாவரிக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லாமையாலே அஸ்தாநே அஞ்சிற்றத்தனை. யமுனையோ வென்னில், கம்ஸன்மாளிகையின் கீழே பெருகாநின்ற தாகையாலே அவனிடத்து மிகவும் அஞ்சவேண்டியதுண்டு; அப்படியிருந்தும் அஞ்சாதே பகவத் விஷயத்தில் கிஞ்சித்கரித்து ஸத்தை பெற்று ஸ்வரூபம் நிறம் பெறவேணுமென்று கருதி, * யமுநாஞ்ச அதிகம்பீராம் நாநாவர்த்த ஜஷாகுலாம், வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ.* என்னும்படி, பிறந்தவன்றே கண்ணனை வஸுதேவர் திருவாய்ப்பாடியிலே கொண்டுபோய் விடுவதற்கு அவனையெடுத்துக்கொண்டு புறப்படுகையில் அப்போது வர்ஷாகாலமாகையாலே வானத்தை யளாவிப் பெருகாநின்ற யமுனை தன்னை முழங்காலளவாக வற்றுவித்து வழிதந்தது. இந்தத் தூய்மை வேறு எந்த நதிக்கும் கிடையாது. * வல்லவீவதநோச்சிஷ்டபவித்ராதர வித்ரும:* என்கிறபடியே க்ருஷ்ணனும் பெண்களுமாக ஜலக்ரீடைபண்ண ஒருவர்க்கொருவர் கொப்பளித்த தீர்த்தத்தை யுடைமையினுல் வந்த பரிசுத்தியையும் கொள்ளலாம். (தூய) என்றதற்கு மேலே (பெரு) என்று சொல்லப்படுகிற பெருமையாவது—பஞ்சலக்ஷங்குடிப் பெண்களும் கண்ணனுங்கூடி ஜலக்ரீடை பண்ணுவதற்கும் பெண்கள் விரஹதாபம் தீரக் குளிக்கைக்கும் போதும்படி மிகவிசாலமாயிருக்கை. ஆக இத்தகைய புகழ்பெற்றதாயிற்று யமுனையாறு.

ஜயதேவர் கீதகோவிந்தத்திற்கு மங்களாசரணம் செய்பவர் "மேகைர் மேதுரமம்பரம் வநபுவச் ச்யாமாஸ் தமாலத்ருமை: நக்தம் பீருரயம் த்வமேவ ததிமம் ராதே! க்ருஹம் ப்ராபய, இத்தம் நந்தநிதேசதச் சலிதயோ: ப்ரத்யத்வகுஞ்ஜத்ருமம் ராதாமாதவயோர் ஜயந்தி யமுநாகூலே ரஹ:கேலய:" என்று பரமாத்புதமான சுலோகமொன்று பணித்தார். கூரத்தாழ்வான் போல்வார் "தத்கீர்த்தநம் பரமபாவநம் ஆமநந்தி" என்னும்படியான கண்ணனுடைய தூர்த்தாயிதம் வஸ்துஸ்திதியில் பரமபவித்ரமாகையாலும், கண்ணனும் *ஜந்ம கர்ம ச மே திவ்யம்* என்னும்படி யிருக்கையாலும் மேலெடுத்த ஜயதேவ ச்லோகத்தைச் சிறிது விவரித்து அநுபவிக்கிறேன். ஒருநாள் திருவாய்ப்பாடியிலெல்லாரும் ஒரு விசேஷத்திற்காகக் கண்ணனையுங் கூட்டிக்கொண்டு நெடுந்தூரம் சென்றிருந்தார்கள். ஸூர்யாஸ்தமன ஸமயமாயிற்று. எல்லாரும் புறப்பட்டுத் திரும்புவதற்குச் சிறிது தாமதிக்கவேண்டி யிருந்தபடியால் சிறுவனுன கண்ணனைத் துணைகூட்டி இல்லத்திற்கு அனுப்பிவிட வேணுமென்று கருதிய நந்தகோபர் ராதையை நோக்கிச் சொல்லுகிருர் [மேகைர் மேதுரம் அம்பரம்] ஆகாசப்பரப்படைய மேகங்கள் மூடிக்கிடக்கின்றன. இதனுலுண்டான இருட்சிக்கு

மேலே [வநபுவ: ச்யாமாஸ் தமாலத்ருமை:] காடெங்கும் பச்சிலை மரங்கள் அடர்ந்து இருள் மூடிக்கிடந்தது. [நக்தம் பீரு: அயம்] கண்ணனோ அஸ்தமித்தவாறே அச்சம் குடிபுகுந்திருப்பவன். [இடையில் அடியேனுடைய சிறுபேச்சு; *தொத்தார் பூங் குழல் கன்னியொருத்தியைச் சோலைத் தடங்கொண்டு புக்கு, முத்தார் கொங்கை புணர்ந்து இராநாழிகை மூவேழு சென்றபின் வந்தாய்* என்று யசோதை சொன்ன தாகப் பெரியாழ்வார் ஸாதிக்கிறார்; 'நக்தம் பீருரயம்' என்று நந்தகோபர் சொன்ன தாக ஜயதேவர் சொல்லுகிறார். இவற்றில் எது உண்மையோ அறியோம்.] ஹே ராதே! தத் இமம் த்வமேவ க்ருஹம் ப்ராபய! = அம்மா ராதாதேவி! ஆகையினால் இவனை நீயே மனையிற் கொண்டுபோய்ச் சேர்த்துவிடு. [இத்தம் நந்தநிதேசதச் சலிதயோ: ராதாமாதவயோ:] இப்படி நந்தகோபர் தாமே கட்டளையிட, ராதையும் கண்ணனுமாய்ப் புறப்பட்டார்கள். எப்போது மனை சேர்ந்தார்களென்னில், அது தெரியாது; [யமுநாகூலே ப்ரத்யத்வகுஞ்ஜத்ருமம் (தயோ:) ரஹ:கேலய: ஜயந்தி] ப்ருந்தா வனத்தில் ஸேவாகுஞ்ஜமென்று ஓரிடமுண்டு; அஃது இற்றைக்கும் ஸுரக்ஷிதமாக வுள்ளது. யமுனைக்கரை வழியிலுள்ள குஞ்ஜங்கள்தோறும் ரஹ:கேலிகள் நடந்த தாக ஜயதேவர் அநுபவிக்கிறார். பரமபக்தமணியான இவர் இதை உட்கண்ணால் காணாமல் எழுதியிருக்க முடியாது. யமுநா கூலத்திற்கு வாய்த்த பரமபாக்யமன்றோ விது. ஸரயூதீரத்திற்கு இங்ஙனே ஒரு விசேஷம் ஏதேனுங் கேட்டதுண்டோ? *கூர்மழைபோல் பனிக்கூதலெய்திக் கூசிநடுங்கி யமுனையாற்றில், வார்மணல் குன்றில் புலரநின்றேன் வாசுதேவா வுன்வரவுபார்த்தே* (பெருமாள் திருமொழி 6-1.) என்னும்படி ஏமாற்றமடைகின்ற பாக்கியந்தான் ஸரயுவுக்கு உண்டோ? *இங்குத்தை வாழ்வை யொழியவே போய் எமுனைக் கரைக்கென்னை யுய்த்திடுமின்* என்றும், *காளியனுச்சியில் நட்டம்பாய்ந்து போர்க்களமாக நிருத்தம் செய்த பொய் கைக்கரைக்கென்னை யுய்த்திடுமின்* என்றும் ஆண்டாள் சொன்னதுபோல *சரயுக் கரைக்கென்னை யுய்த்திடுமின்* என்று சொன்னாருண்டோ? *காளிந்தீரஸிகாய* என்பது தசாவதார ஸ்தோத்ர ஸ்ரீஸூக்தி. *யமுநாஸாக்ஷிக யௌவநம் யுவாநம்* என்பது கோபாலவிம்சதி ஸ்ரீஸூக்தி. கண்ணன் திருவாய்ப்பாடியில் யமுனைக் கரையில் வளர்ந்த காலத்தில் யௌவனம் குடிபுகாமலிருக்க, இவனுடைய யௌவனத் திற்கு யமுனை எப்படி ஸாக்ஷியாகுமென்று சிலர் சங்கிப்பர்கள்; கண்ணனுடைய சைசவ பால்ய கௌமார யௌவனங்கள் ஏககாலத்திலே திருமேனியில் கலந்து பரிமாறுநிற்கும். இல்லையாகில் *பொன்போல் மஞ்சனமாட்டி யமுநாட்டிப் போனேன் வருமளவிப்பால், வன்பாரச் சகடமிறச்சாடி வடக்கிலகம் புக்கிருந்து, மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை வேற்றுருவம் செய்துவைத்த, அன்பா வுன்னை யறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே* என்று யசோதையின் பாசுரமாகப் பெரியாழ்வார் அருளிச்செய்தது பொருந்தாதே. சகடமிறச் சாடியது ஒரு பிராயத்திற்குள்ளே; கண்ணா! உனக்கு நான் ஸ்தந்யம் கொடுக்க அஞ்சாநின்றே னென்று சொல்லுகிற பதிகமாகையாலே முலைப்பாலுண்பதுமாறாத பருவமென்பதில் ஐயமில்லை. அப்போதே *வடக்கிலகம் புக்கிருந்து மின்போல் நுண்ணிடையாளொரு

கன்னியை வேற்றுருவம் செய்துவைத்தானென்றால் சைசவ பால்ய யௌவனங்கள் முப்புரியூட்டின திருமேனியென்னலாவது தவிர வேறுண்டோ? ஆக, இராமனவதரித்தவிடமான ஸரயூதீரத்திற்காட்டிலும் கண்ணனவதரித்தவிடமான யமுநாதீரம் பலவகையாலும் மேம்பட்டதென்று மூதலிக்கப்பட்டதாயிற்று. கீழே 105, 106, 108ஆம் உபந்யாஸங்கள் யமுனை யாற்றின் பாக்கியத்தைக் கையிலங்கு நெல்லிக் கனியாகக் காட்டுவனவாம். ... .... .... .... .... *

## 134. பித்ருவாக்யபரிபாலன குதூஹலோபந்யாஸம்

(* நத்யாஃ கூலேவதீர்ணௌ * என்கிற ச்லோகத்தில் இரண்டாவது விசேஷணத்தின் விவரணம்.)

எம்பெருமான் திருவவதாரங்கள் செய்தருளும்போது தன்னுடைய ஸ்வாதந்திரியம் முதலான பரத்வைகாந்திக குணங்களை அறவே விட்டிட்டு ஸர்வாத்மநா பாரதந்திரியத்தை ஏறிட்டுக்கொண்டுவந்து பிறக்கிறனுகையாலே "மாத்ருதேவோ பவ. பித்ருதேவோ பவ." இத்யாதிகளான உபநிஷதுபதேசங்களுக்குக் கட்டுப்பட்டுப் பித்ருவாக்யபரிபாலனத்தில் குதூஹலங் கொண்டிருக்குந்தன்மை ஸ்ரீராம க்ருஷ்ணர்களிருவர்க்கு மொக்கும். ராம லக்ஷ்மண பரத சத்ருக்நர்கள் நால்வரின் அவதாரத்திற்கு ப்ரயோஜனத்தை நிரூபிக்கப் புகுந்த நம் ஆசார்யர்கள், நால்வரும் நான்குவிதமான தருமங்களை யனுட்டித்துக் காட்ட அவதரித்தார்களென்று உண்மைகண்டு வெளியிடுகிறார்கள். கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியான ப்ரவேசத்தில் இது காணத்தக்கது. இளையபெருமாள் முதலான மூவருடைய தருமங்கள் கிடக்க; இராமபிரான் கைக்கொண்ட தருமம் எதுவென்றால் 'பெரியார் சொல்லிற்றைச் சிறியார் செய்யக் கடவர்கள்' என்றொரு ஸாமான்ய தருமமுண்டே அதுதான். இராமன் செய்த காரியங்களுக்கு ஹேது சொல்லுகின்ற வான்மீகி முனிவர் "விச்வாமித்ரஸ்ய சாஸநாத்" "பரத்வாஜஸ்ய சாஸநாத்" "அகஸ்த்யவசநாத்" "பிதுர் வசநநிர்தேசாத்" என்றிப்படி சொல்லியிருக்கக் காண்கிறோம். மஹான்களுடைய வாக்யபரிபாலனம் ஒருதட்டும் பித்ருவாக்ய பரிபாலனம் ஒருதட்டுமாயிருக்கும் இராமபிரானுடைய செய்கைகளில். இனி கண்ணபிரானுடைய செய்கைகளை யெடுத்துக் கொள்வோம்; இராமன் பிதா முதலியவர்களின் வசனத்தைப் பரிபாலனம் பண்ணினது பக்வனான பிறகு; (அதாவது) பன்னிரண்டாண்டுகளுக்குமேல். கண்ணனோவென்னில் அவதரித்த க்ஷணம் தொடங்கியே. இதனைச் சிறிது விவரிக்கிறேன். கண்ணன் அவதரிக்கும்போது சங்க சக்ர கதாதரனாய் அவதரித்தானென்பது ப்ரஸித்தம். உடனே தந்தையும் தாயுமான வஸுதேவ தேவகிகள் அந்த திவ்யாயுதங்களை மறைத்துக்கொள்ளுமாறு வேண்டினார்கள். * ஜாதோஸி! தேவதேவேச! சங்கசக்ரகதாதர!, திவ்யரூபமிதம் தேவ! ப்ரஸாதேந உபஸம்ஹர * என்பது வஸுதேவர் வசனம். * உபஸம்ஹர ஸர்வாத்மந்! ரூபமேதச் சதுர்ப்புஜம் * என்பது தேவகியின் வசனம். இருவருடைய சொல்லையும் கர்ப்பக்ருஹத்திலேயே பேணினவன் கண்ணபிரான். திவ்யாயுதங்களை மறைத்துக்

கொள்ளும்படி வேண்டினதற்கு இருவரும் ஒரேவிதமான காரணமே கூறினர். நீர் அவதரித்ததை ஆஸுரப்ரக்ருதியான கம்ஸன் தெரிந்துகொள்ள வேண்டா மென்று, இதைக்கண்ணன் ஏற்றுக்கொள்ளவேண்டிய அவசியமில்லை; நான் அவ தரித்தேனென்பதைக் கம்ஸன் தாராளமாகத் தெரிந்து கொள்ளட்டுமே; அத ஞல் நமக்கு என்ன ஹானிவிளைந்திடும்? வீணாக நீங்கள் அஞ்சுவது அநுசிதம்'' என்று சொல்லி, அவர்களது வசனத்தை மறுத்துவிடலாம். ஆனாலும் 'பிறக்கும் போதே தந்தைதாயர் சொல்லைப் பேணின பெருமை நமக்கு இருக்கவேணும்' என்றெண்ணியே சொன்னபடி கேட்டனன். அன்றே திருவாய்ப்பாடி சென்று சேர்ந்தகண்ணபிரான் மறுபடியும் அக்ரூரரால் மதுரைக்கு அழைத்துவரப்பட்டுக் கம்ஸ வதம் பண்ணியான பிறகு, மாதா பிதாக்களைத் தெண்டனிட்டு நிற்க, அப்போது தேவகியானவள் கண்ணனை நோக்கி.

குன்றினால் குடைகவித்ததும் கோலக்குரவை கோத்ததும் குடமாட்டும் *
கன்றினால் விளவெறிந்ததும் காலால் காளியன் தலை மிதித்ததும் முதலா *
வென்றிசேர் பிள்ளை நல்விளையாட்ட மனைத்திலும் அங்கென்னுள்ளமுள்குளிர *
ஒன்றுங்கண்டிடப் பெற்றிலேனடியேன் காணுமாறினியுண்டெனிலருளே.



P. B. A. தௌஹித்ரி ஸௌபாக்யவதி ஜயமணியின் திருமணம் 13—9—1965.

என்றாள். (அதாவது) கோவர்த்தநோத்தரணம், ராஸக்ரீடை, குடக்கூத்தாடல், வத்ஸ கபித்த க்ஷேபம், காளியமர்த்தனம் முதலாகத் திருவாய்ப்பாடியில் நடந்த லீலைகளைத் தான் கேள்விப்பட்டிருந்தவளாகையாலே அவற்றில் ஒன்றும் தான்காணப் பெறாத வருத்தத்தைத் தெரிவித்து, அவற்றை யெல்லாம் இப்போது இங்கு நான் காணும்படி செய்தருள வல்லையேல் செய்தருளப்பா' என்று வேண்டினாள். எப்படி மறுப்பன்; அம்மா! இது அஸாத்ய மன்றோ என்று எப்படிச் சொல்லுவன்? 'பூதநா சகட யமலார்ஜுந காளிய கோவர்த்தநாதிகள் இங்கில்லையே! எப்படிச்செய்து காட்டுவேன்!' என்றுதான் சொல்லுவனோ! ஸத்யஸங்கல்பனாகையாலே அவள் குறைதீர எல்லாம் செய்து காட்டியருளினன். இஃது இருக்கட்டும். திருவாய்ப்பாடியில் வாழ்ந்த காலத்தில் தாய்தந்தையர்க்கு அடங்காதவனாயிருந்தானென்று சில சரித்திரங்களினால்

தோன்ற நிற்கும். *தாயர்வாய்ச்சொல் கருமங்கண்டாய்* என்றும் *தாய்சொல்லுக்கொள்வது தன்மங்கண்டாய்* என்று முள்ள யசோதையின் வார்த்தைகளினால் கண்ணன் தாய்சொல்லைக் கேளாதவனு யிருந்தானென்று நினைக்கும்படியாயிருந்தாலும் அதுவொரு பால்யலௌல்யமாக நினைக்கத்தக்கதேயொழிய, உண்மையில் தன்னுடைய விதேயத்வத்தை எவ்வளவோ அழகாகக் காட்டியிருக்கிறானே. உரலினிடை யாப்புண்டிருந்ததொன்று போதுமே தாய் தாம்பினால் கட்டவொண்ணாதபடி தப்பித்துக்கொள்ள வல்லமை யில்லாதவனா? கட்டினகட்டை அறுத்தெறிந்து ஓடவல்லமையில்லாதவனா? இந்தச் சரிதையிலே ஈடுபட்ட ஆழ்வான் "யம் துர்க்ரஹம் ஸுமநஸோ மநஸாபி நித்யம் பந்தச்சிதம் பரமமீச முதாஹரந்தி" என்று முன்னமருளிச்செய்து, பின்னை "தாம்நா நிபத்த இதி சுச்ரும தம் பவந்தம்" என்றருளிச் செய்கிறார். தாய்க்கு அடங்கி நிற்பவனென்பதைக் காட்டவே யன்றோ தாமபந்தன சரித்திரமமைந்தது. .... ... (*)

## 135. ப்ரேமவச்யத்வ நிரூபணோபந்யாஸம்.

(*நத்யா:கூலே வதீர்ணௌ* என்கிற சுலோகத்தில் மூன்றாவது விசேஷணத்தின் விவரணம்.)

ப்ரேமவச்யத்வமாகிற குணம் இராமபிரானிடத்தில் விளங்கும்படியை முன்னம் நிரூபிக்கிறேன். 'ப்ரியஸ்ய பாவ: - ப்ரேமா' என்று வ்யுத்பத்தியாதலால் ப்ரியனாயிருக்குந்தன்மை ப்ரேமமெனப்படும். ப்ரீதிபாத்ரபூதனையும் ப்ரீதிகர்த்தாவையும் ப்ரியனென்று வழங்குவதுண்டு. அதாவது, ப்ரீதிசெய்பவனும் ப்ரியன், ப்ரீதியைப் பெறுபவனும் ப்ரியன் என்றபடி. ஆகவே சக்கரவர்த்தி திருமகன் பலருடைய ப்ரீதிக்குக் கொள்கலமாயிருந்ததும் பலரிடத்தில் ப்ரீதி வைத்திருந்ததும் இங்கு நிரூபிக்கத் தக்கதாகிறது. [ரமயதீதி ராம:] ஆகையாலே தன்னுடைய திருக்குணங்களால், இஷ்டர்கள் அநிஷ்டர்கள் உதாஸீநர்கள் என்கிற வாசியின்றிக்கே எல்லாரையும் ஆகர்ஷித்து அவரவர்களுடைய ப்ரீதிக்குக் கொள்கலமாயிருந்தான் இராமன். அவரவர்களிடத்திலே தான் வைத்திருந்த ப்ரீதியும் உள்ளும் புறமுமொத்து அளவுகடந்திருந்தது. சிலரை யெடுத்துக் காட்டுகிறேன். " நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ" (தயாசதகே) என்னப்பட்ட மூவரை மட்டும் எடுத்துக் கொள்ளுகிறேன். குஹப்பெருமாள் முதல்வர். இவர் இராமபிரானிடத்தில் வைத்திருந்த ப்ரீதி அதிகமா? இவரிடத்தில் இராமபிரான் வைத்திருந்த ப்ரீதி அதிகமா! என்று பார்க்குமளவில் ஒன்றுக்கொன்று தோற்றிராதென்றே சொல்லவேணும். இனி ஸுக்ரீவ மஹாராஜரையும் திருவடியையுமெடுத்துக்கொண்டால் இவர்கள் விஷயமும் அப்படியேதான். ஸுக்ரீவமஹாராஜருடைய ப்ரீதியைக் கண்டறிவதற்கு நல்ல இடமொன்று கேளீர். பரமபக்தர்களில் தலைவனென்று ப்ரஸித்தனாயிருந்த விபீஷணாழ்வான் ஆர்த்திமிகுந்து பெருமாளைத் தஞ்சமாகப் பற்றவருகிறான். அப்போது ஸுக்ரீவன் செய்யவேண்டிய காரியம் ஒன்றே; அதாவது, இராமபிரானிடத்தே வந்து 'ஸ்வாமிந்! இராவணனுடைய தம்பியாம்; விபீஷணனாம், நால்வருடனே வந்திருக்கிறான். அவன் இவ்விடத்து க்ருபைக்குப் பாத்ரமாகவேண்டி வந்திருக்கிறானென்று தெரிகிறது; திரு

வுள்ளமானபடி நியமிப்பது' என்று இவ்வளவே சொல்லியிருக்கவேண்டும். இதை விட்டு அதிகப்ரஸங்கம் செய்திருக்கிறனென்பது அனைவருமறிந்தது. விபீஷணனை சித்ரவதம் பண்ணவேணுமென்று பதைத்தான். இந்த ஸம்ப்ரமம் எதனுலென்று ஆலோசிக்கவேண்டும். பெருமாளுடைய ஆற்றலை அறியாதவனன்றே ஸுக்ரீவன். வெகு நன்றாக அறிந்துவைத்தும் "அதிஸ்நேஹ: பாபசங்கீ" என்கிற நியாயத்தாலே தான் பெருமாளிடத்தில் வைத்திருந்த அபரிமிதமான ப்ரேமத்தியாகக் கலங்கியன்றோ இங்ஙனே ஸம்ப்மித்தான். அவனிடத்தில் பெருமாள் வைத்திருந்த ப்ரேமமும் அபரிமிதம். அவன் வாலியினுடைய பராக்ரமாதிசயங்களையும் பெருமாளுடைய திருமேனியின் ஸௌகுமார்யத்தையுங் கண்டு இவர் வாலியை வதைக்கமாட்டாரென்று மாறாக நினைத்தபோது அரிய பெரிய காரியங்களைச் செய்து அவனுக்கு நம்பிக்கையை யுண்டாக்கினது அவனை விடாமல் கைக்கொள்ளவேணுமென்கிற ப்ரேமாதிசயத்தினுலன்றே. இனி சபரியினிடத்தில் பெருமாளுக்கும் பெருமாளிடத்தில் சபரிக்கு மிருந்த ப்ரேமம் விவரிக்கப்படவேண்டுமோ? ஆக இராமபிரானுடைய ப்ரேமவச்யத்வம் நிரூபிக்கப் பட்டது. இனி இதிற்காட்டிலும் விஞ்சியதான ப்ரேமவச்யத்வம் கண்ணபிரானிடத்தில் நிரூபிக்கப்படுகிறது.

அன்பர்கள் பக்கலில் கண்ணனுடைய ப்ரேமப்ரவாஹங்களைப்பார்க்குமிடத்து இராமனுடைய ப்ரேமம் ஸாமாந்யமாகவன்றே தோன்றும். தன்னுடைய ப்ரேமத்தைக்கல்வெட்டும் செப்பேடும்போலே கீதாசாஸ்த்ரத்தில் நீடூழிகாலம் விளங்கும்படியாகவன்றே பொறித்துவைத்தான். *ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய: * என்று கீதையிலே சொன்ன பதினுறெழுத்து போதுமே. இங்கு ஜ்ஞாநிந: என்று விசேஷித்துச் சொல்லியிருக்கையாலே அஜ்ஞாநிகளுக்கு ப்ரியனல்லன்போலும்' என்று சங்கிக்கவொண்ணுதபடி பிறந்தவன்றே தொடங்கி இடக்கை வலக்கையறியாதாரிடத்து ப்ரேமத்தையே யன்றே நிரூபகமாகக் கொண்டு அனுட்டானத்தில் காட்டிப்போந்தான் தாம்பினுல் உரலோடு கட்டுண்டு கிடந்தரனென்கிற ஒரு சிறு சரிதையில் தத்துவமறிந்த கூரத்தாழ்வான் "ப்ரேம்ணு அந தாமபரிணுமஜுஷா பபந்த [அதிமாநுஷஸ்தவே] என்றருளிச்செய்ததை நோக்கவேணும். * ஆநிரை மேய்க்க நீபோதி அருமருந்தாவதறியாய்* என்று தானே சொல்லும்படி அருமருந்தான கண்ணனை ஆய்ச்சி தாம்பினுல் கட்டியடித்தாளென்றால் இதை யாராவது நம்ப முடியுமாவென்று நினைத்த ஆழ்வான் [தாமபரிணும ஜுஷா ப்ரேம்ணு பபந்த] ப்ரேமந்தான் தாமமாக வடிவெடுத்ததென்கிறார். "உன்னை இளங்கன்று மேய்க்கச் சிறுகாலே யூட்டியொருப்படுத்தேன், என்னில் மனம் வலியாளொரு பெண்ணில்லை என் குட்டனே! முத்தந்தா" என்கிற யசோதைப்பிராட்டி கண்ணனைக் கன்றுகளின் பின்னே போகவிட்டதற்கே வயிறு பிடிக்குமவள் உரலிலே கட்டியுமடிப்பளா? இது ஸம்பாவிதமா? என்று சங்கிக்கவே நேரும். ப்ரேமமே தாமமாயிற்றென்றால் என்ன அர்த்தம்? 'முத்தம்தா' என்பது ப்ரேம கார்யமேயொழிய அடிப்பதா ப்ரேமகார்யம்? என்று கேட்டால் என்ன சொல்லுவது? எங்கள் கூரத்தாழ்வான் ஸாதித்திருக்கிறரென்றால் இதில் எல்லாரும் ஸமாஹிதர்களாவர்களோ? இங்கு விஜ்ஞாபிக்கிறேன் கேண்மின். கண்ணபிரான் தானே யசோதையை நோக்கிச் சொல்லுகிறன் "என்னை நான்மண்ணுண்

டேனுக அன்புற்று நோக்கி யடித்தும் பிடித்தும் அனைவர்க்கும் காட்டிற்றிலையே'' என்கிறுன். இது பெரியாழ்வார் திருவாக்காயிருந்தாலும், கண்ணபிரான் தானே சோதிவாய் திறந்துபேசின பாசுரமாகவே அடியேன் திண்ணமாக வெண்ணுகின்றேன். அன்புற்றுஎன்றது உயிரான வார்த்தை. 'தாயே நான்மண்ணுண்டதே கிடையாது;மண்ணுண்டதாகநீ ஆரோபித்துப்பிடித்ததும்அடித்ததும் அன்புற்று; அனைவர்க்கும் காட்டினதும் அன்புற்று. நமது பிள்ளை வயிற்றிலே வையமேழுமிருப்பதை எல்லாரும் காணவேணு மென்று அன்பு கொண்டு ஒவ்வொருவரையும் கூப்பிட்டு என் வாயைப் பார்க்கச் செய்தாய்; அதனுல் இவன் * அண்டரண்ட பகிரண்டத்தொருமாநிலமெழுமால்வரை முற்றுமுண்டகண்டன் என்று அவரவர்கள் தெரிந்துகொள்ளும்படி செய்தாய்; 'இப்படிப்பட்ட பராத்பரன் இவளொருத்திக்குக் கைவழி மண்ணுயிருக்கிருனே! இது என்ன ஆச்சரியம்!' என்று அவரவர்கள் உன்னைக் கொண்டாடுவதற்காகக் கட்டியடித்தாயத்தனை: அம்மா! நீ செய்ததெல்லாம் ப்ரேம கார்யந்தான்—என்ருனுயிற்று கண்ணன். ''கையைப் பிடித்துக் கறையுரலோடென்னைக் காணவே கட்டிற்றிலையே'' என்பதும் கண்ணனுடைய வார்த்தையே. இதில் (காண) என்றது—என்னுடைய ஸௌலப்யத்தை யெல்லாரும் காண என்றபடி. இதுவும் ப்ரேமத்தால் கட்டினதையே காட்டவற்று. (*)



## 136. ஆபால்யாத் விரோதிநிரஸநபடுத்வோபந்யாஸம்

(* நத்யா;கூலேவதீர்ணௌ * என்கிற சுலோகத்தில்
நான்காவது விசேஷணத்தின் விவரணம்.)

இளமை தொடங்கியே விரோதிவர்க்கங்களைக் கிழங்கெடுக்குந்தன்மையில் ஸ்ரீராமக்ருஷ்ணர்களிருவர்க்கும் ஸாம்யம். இராமபிரான் விச்வாமித்ரமுனிவரால் தம்து வேள்வியைக் காக்கும் பொருட்டு அழைத்துச் செல்லப்பட்டபோது இராமனுக்குப் பிராயம் பன்னிரண்டென்று நிஷ்கர்ஷிக்கப்பட்டுள்ளது. தசரத சக்ரவர்த்தி விச்வாமித்ர முனிவரை நோக்கிச் சொன்னவார்த்தையில் ''ஊநஷோடசவர்ஷோ மே ராமோ' ராஜீவ லோசந,'' என்று பதினறு பிராயம் நிரம்பாதவன் இராமன்' என்றிருக்கையாலே பதினன்கு பதினைந்து பிராயமிருக்கும்போது

என்று சிலர் நினைக்கலாயிருந்தாலும் அந்த சுலோகத்தின் வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளை ஆர அமர விமர்சங்களைச் செய்து பன்னிரண்டு பிராய மென்று ஸித்தாந்தம் செய்தருளியிருப்பது காண்க. ஆக, பெருமாள் தாடகா தாடகேயாதி நிரஸநம் பண்ணத் தொடங்கினது பன்னிரண்டாவது பிராயத்தி லென்றும், ராவண ஸம்ஹாரம் பண்ணித் தலைக்கட்டினது முப்பத்தெட்டாவது பிராயத்திலென்றும் நிர்ணீதமாக வுள்ளது. கரதூஷணுதிவதத்தில் ''அஸஹாய சூர!'' என்கிற விருதும் பெற்றனர் பெருமாள். க்ஷத்ரிய ஜாதியில் திருவவதரித்த பெருமாள் சத்ருநிரஸனங்களை எவ்வளவு செய்திருந்தாலும் அது வியக்கத்தக்க தன்று; இதைப்பற்றி விரிவாக எழுதவேண்டிய ஆவச்யகதையுமில்லை. கண்ண பிரானுடைய சத்ருநிரஸனபடுத்வம் இதிற்காட்டிலும் மிக விலக்ஷணமாயிருக்கும். பெருமாள் செய்த சத்ருநிரஸநம் பக்வரான பின்பு; கண்ணபிரான் தொட்டில் பருவமே பிடித்து இது செய்து போந்ததும் அதிலும் இடைச்சாதியிலே தோன் றிக் கோபாலனென்றும் ஆயர்கோமானென்றும் பேர்பெற்றுவைத்து இது செய் ததும் இவனுக்குத் தன்னேற்றம்.

பகவத்கீதையில் அவதாரப்ரயோஜனத்தைச் சோதிவாய்திறந்து தானே பணிக்குமிடத்து ''பரித்ராணுய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம். தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே,'' என்றருளினுன். இவற்றில் ஸாது பரித்ராணந்தான் முக்கியமென்று எம்பெருமானுர் திருவுள்ளம் பற்றினுர். அது அந்தரதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் விசதம் கீழே (42) கஜேந்த்ரமோக்ஷோபந்யாஸத் தில் (பக்கம் 64, 65-ல்) விவரிக்கப்பட்டிருப்பதால் இங்கு ஸம்க்ஷேபம். பூர்வபக்ஷி பரம்புருஷனுக்கு சரீரஸம்பந்தம் கிடையாதென்று ஒருவார்த்தையைக் கிளப்ப, அதைக்கண்டிக்கவெழுந்த பாஷ்யகாரர் விபவாவதாரங்களில் எம்பெருமான் *இச் சாக்ருஹீதா பிமதோரு தேஹனுயிருக்கிறபடியை நிரூபித்தருளுகையில்* பரித்ரா ணுய ஸாதூநாமித்யாதி கீதாவசனத்தை யெடுத்துக்காட்டி ''ஸாதுபரித்ராணமேவ உத்தேச்யம்; ஆநுஷங்கிகஸ் து துஷ்க்ருதாம் விநாச:;ஸங்கல்பமாத்ரேணுபி ததுப பத்தே'' என்றருளிச் செய்தார். இத்தால் ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதுதான் அவ தாரப்ரதாநோத்தேச்யமென்று ஸ்வாமியின் திருவுள்ளமாகத் தேறுகின்றது ஆனுல், ஸ்ரீ வசனபூஷணத்தில் நஞ்சீயருடைய திருவாக்காக எடுத்துக் காட்டப் பட்டிருப்பதாவது, (192) ''ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில் களெல்லாம் பாகவதாபசாரம் பொருமையென்று ஜீயரருளிச் செய்வர்'' என்று. இங்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியான திவ்யஸூக்தி—''ஸங்கல்பமாத்ரத் தாலே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வசக்தியான ஸர்வேச்வரன் தன்னை யழியமாறி இதரஸஜாதீயனுய் அவதரித்துக் கைதொடனுய் நின்று செய்த ஹிரண் யராவணுதி நிரஸநரூப அதிமாநுஷ சேஷ்டிதங்களெல்லாம் ப்ரஹ்லாதன் மஹர் ஷிகள் தொடக்கமான அவ்வோபாகவத விஷயங்களில் அவ்வவர் பண்ணின அப சாரம் ஸஹியாமையாலே யென்று ஆப்த தமரான நஞ்சீயரருளிச்செய்வரென்கை'' என்பதாம். இத்தால், ஸாதுபரித்ராணம் எப்படி ஸங்கல்பஸாத்யமன்றோ அப் படியே துஷ்க்ருத்விநாசநமும் ஸங்கல்பஸாத்யமன்று என்றதாகத் தேறும். இது

அந்தரதிகரண ஸ்ரீ பாஷ்யஸூக்தியோடு விரோதியாதோவென்று சங்கிக்க வேண்டா. *சாதுசனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ்சோதி யுருவை அங்குவைத்திங்குப் பிறந்த" என்றும் "மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்" என்றும் நம்மாழ்வாரருளிச்செய்த பாசுரங்களில் நோக்காக இப்படியும் நிர்வஹிக்கலாயிருந்தது. இத்தகைய சத்ருநிரஸனத்தை ஸ்ரீ ராமாவதாரத்திற்காட்டிலும் மேம்படச் செய்தது ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்திலேயாம். கண்ணன் பிறந்தவன்றே தொடங்கிச் செய்துபோந்தது தன்னேற்றம்.

## 137. ப்ராப்தகாந்தாரயாத்ரத்வோபந்யாஸம்.

[*நத்யா:கூலேவதீர்ணௌ* என்கிற சுலோகத்தில் *ப்ராப்தகாந்தாரயாத்ரௌ* என்கிற ஐந்தாவது விசேஷணத்தின் விவரணம்.]

வனவாஸம் செய்ததில் ஸ்ரீராமக்ருஷ்ணர்களிருவர்க்குமுள்ள ஸாம்யத்தை முன்னம் நிரூபித்து, இதில் கண்ணனுக்குள்ள ஏற்றம் பிறகு நிரூபிக்கப்படுகிறது. இராமபிரான் தந்தையின் மனோரதப்படியும் *இச்சாமோஹி மஹாபாஹூம் ரகுவீரம் மஹாபலம், கஜேந மஹதா யாந்தம் ராமம் ச்சத்ராவ்ருதாநநம்* என்ற ப்ரஜைகளின் குதூஹலத்தின்படியும் முடிபுனைந்து நாட்டையாள வெண்ணியிருக்க "ஆழிசூழுலகமெல்லாம் பரதனேயாள நீ போய்த் தாழிருஞ்சடைகள் தாங்கித் தாங்கருந்தவமேற்கொண்டு, பூழிவெங்கான நண்ணிப் புண்ணியபுனல்களாடி, ஏழிரண்டாண்டின் வாவென்று" கைகேயியிட்ட கட்டளையின்படி பதினாலாண்டு வனயாத்திரை செய்ய நேர்ந்தபடியால் ப்ராப்த காந்தார யாத்ரத்வம் இராமபிரானுக்கு ப்ரஸித்தமானது. இனி கண்ணபிரான்பாடு செல்வோம். "மதுரா நாம நகரீ புண்யா பாபஹரீ சுபா. யஸ்யாம் ஜாதோ ஜகந்நாத:" என்கிறபடியே *வளவெழுந்தவள்மாட மதுரைமாநகரந்தன்னில் பிறந்துவைத்தும், நகரவாஸத்தை வெறுத்து வனவாஸம் பண்ணவேணுமென்கிறகுதூஹலங்கொண்டே ஆயர்பாடிக் கணிவிளக்காகி "கற்றுத்தூளியுடை வேடர்கானிடைக் கன்றின்பின், எற்றுக்கென்பிள்ளையைப் போக்கினேன் எல்லே பாவமே!" "உடையுங் கடியனவூன்று வெம்பரற்களுடைக் கடியவெங்கானிடைக் காலடிநோவக் கன்றின்பின் கொடியேனென்பிள்ளையைப் போக்கினேனெல்லே பாவமே" என்று தாய் வயிறெரிந்து கதறியழும்படி கானகம்படியுலாவியுலாவினான் கண்ணன். ஆக, வனயாத்திரை ஸ்ரீ ராமகிருஷ்ணர்களிருவர்க்கு மொத்திருக்கும்படியைக் காட்டினோம். இனி வனயாத்திரையில் கண்ணபிரானுக்குண்டான ஏற்றத்தைக் காட்டுவோம். இராமபிரான் சென்ற தண்டகாரண்யமானது "பொருந்தார் கைவேல்நுதிபோல் பரல் பாய மெல்லடிக்கள் குருதிசோர, விரும்பாதகான்" என்று தயரதன் தான் புலம்பிய அப் புலம்பல்பதிகத்திலுள்ளபடி மிகக் கொடிதாகவே யிருந்தது; கண்ணபிரான் சென்ற விருந்தாவனமோவென்னில்; நெரிஞ்சிக் காடாயிருந்தவது, ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் (5-6-28) "ப்ருந்தாவனம் பகவதா க்ருஷ்ணேநாக்லிஷ்ட கர்மணா, சுபேந மநஸா த்யாதம் கவாம் வ்ருத்திமபீப்ஸதா." என்று கூறினபடியே கண்ணபிரான் தூய திருவுள்ளத்தினால் நினைத்தமாத்திரத்தில் மரதகப்பச்சையழுத்தின மாநிலமென்னும்படி [உத்பந்ந நவசஷ்பாட்ய] பசும்புற்காடாக விளங்கிற்று. இவ்

வளவேயோ ப்ருந்தாவனத்தின் சிறப்பு? *ஆஸாமஹோ சரணரேணுஜுஷாம் அஹம் ஸ்யாம் ப்ருந்தாவநே கிமபி குல்மலதௌஷதீநாம், யா: துஸ்த்யஜம் ஸ்வஜநம் ஆர்யபதஞ்ச ஹித்வா பேஜுர் முகுந்தபதவீம் ச்ருதிபிர் விம்ருக்யாம்.* என்றும் *பத்யு: ப்ரஜாநாமைச்வர்யம் பசூநாம் வா ந காமயே, அஹம் கதம்போ பூயாஸம் குந்தோ வா யமுநாதடே* என்றும் உத்தவர்போல்வார் ப்ருந்தாவனத்திலே ஏதேனுமொன்ருக ஜனிக்கப்பெறவேணுமென்ருர்களே; இப்படி தண்டகாவனத்தில் பிறவியை ஆசம்ஸித்தவர்களுண்டோ? [மேலே யெடுத்த இரண்டு சுலோகங்களின் பொருளாவது—வேதங்களும் தேடநின்ற க்ருஷ்ணன் போன வழியை யாவர் சில பெண்கள் குருஜனங்களேயுமுதறித்தள்ளிப் பின்தொடர்ந்தார்களோ, அவர்களுடைய பாதரேணுவோட்டை ஸ்பர்சமுள்ளனவாய் ப்ருந்தாவனத்திலுள்ளனவான சிறு செடிகள் கொடிகள் ஓஷதிகளுள் ஏதேனுமொன்ருகப் பிறக்கவேணும். (2) ப்ரஜாபதி பசுபதிகளினுடைய ஐச்வர்யத்தையும் வேண்டேன்; *பூத்தநீள்கடம்பேறி யென்றும் *பூங்குருந்தேறியிருத்தியென்றும் சொல்லுகிறபடியே யமுனேக்கரையில் அவன் திருவடிகளால் மிதித்தேறின கடம்பாதல் குருந்தாதல் பிறப்பேனுகவேணுமென்கை.] இதையடியொற்றிக் கூரத்தாழ்வானும் * ப்ருந்தாவநே ஸ்திரசராத்மககீடதூர்வா பர்யந்த ஜந்து நிசயே பத! யே ததாநீம், நைவாலபாமஹி ஜநிம் ஹதகாஸ்த ஏதே பாபா: பதம் தவ கதா புநராச்ரயாம:.* என்று நிர்விண்ணராய்ப்பேசினுர். இத்தகைய பெருமைவாய்ந்த வனத்திலன்ருே கண்ணபிரான் யாத்திரை ,செய்தது. இராமன் சென்றவனம் இத்தகைத்தோ ?.... ... ... .... .... *

## 138. மோக்ஷைச்வர்யப்ரதத்வோபந்யாஸம்.

[*நத்யா:கூலேவதீர்ணௌ* என்கிற ராமக்ருஷ்ண ஸாம்யச்லோகத்தில் ஆருவது விசேஷணத்தின் விவரணம்.]

"மோக்ஷைச்வர்ய ப்ரதௌ" என்கிற விசேஷணம் மோக்ஷமாகிற ஐச்வர்யத்தை [முக்திச் செல்வத்தை] அளிப்பவர் என்றும், மோக்ஷத்தையும் ஐச்வர்யத்தையும் அளிப்பவர் என்றும் பொருள் தரும். இருபொருளேயும் அடைவே விவரிக்கிறேன். இராமபிரான் பெரிய வுடையாரென்கிற ஜடாயு மஹாராஜர்க்கு சரம ஸம்ஸ்காரம் பண்ணுவதற்கு முன்னே ":யா கதிர் யஜ்ஞசீலாநாம் ஆஹிதாக்நேச் ச யா கதி:, அபராவர்த்திநாம் யா ச யா ச பூமிப்ரதாயிநாம். மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாந் அநுத்தமாந்." என்று சொல்லி நலமந்தமில்லதோர் நாட்டுக்கு விடை தந்தருளினுன். * அன்று சராசரங்களே வைகுந்தத்தேற்றி * என்பதுமொன்றுள்ளது. கண்ணபிரான் செய்தருளின மோக்ஷப்ரதானத்திற்கு அளவே கிடையாது. * சிந்தயந்தீ ஜகத்ஸூதிம் பரப்ரஹ்மஸ்வரூபிணம், நிருச்ச்வாஸதயா முக்திம் கதா அந்யா கோபகந்யகா * (ஸ்ரீவிஷ்ணுபு.) என்று விக்ரஹ வைலக்ஷண்யத்திலீடுபரடே உபாயமாக வீடுகொடுக்கப் பெற்ருள் சிந்தயந்தி; * தாயெடுத்த சிறுகோலுக்கு உளேந்தோடுமளவிலே தயிர்த்தாழியினுள்ளே தன்னே மறைத்திட்டுவைத்து 'மோக்ஷம் தாராவிடில் காட்டிக் கொடுப்பேன்' என்று வற்புறுத்தி வீடு பெற்ருன் ததிபாண்டன்; 'இதுக்கும் மோக்ஷம் தரவே

ணும்' என்று அவன் நிர்ப்பந்திக்க மோக்ஷம் கொடுக்கப் பெற்றது அவனுடைய தயிர்த்தாழியும். * வேண்டடிசிலுண்ணும்போது ஈதென்று பார்த்திருந்து நெடு நோக்குக் கொள்ளும் பக்த விலோசனத்தில் பக்திபுரஸ்ஸரமாக அடிசில்கொண்டு வந்திட்ட ரிஷிபத்தினிகளிலே ஒருத்தியை "தத்ரைகா வித்ருதா பர்த்ரா பகவந் தம் யதாச்ருதம், ஹ்ருதோபகூஹ்ய விஜஹௌ தேஹம் கர்மநிபந்தனம்." என்று தன்னளவில் ப்ராவண்யத்தாலே அப்போதே வீடுபெறுவித்தனன். இங்ஙனே கண்ணனுடைய மோக்ஷப்ரதானத்தைப் பன்னியுரைக்குங்கால் பாரதமாம். ஆனால் இதில் நெடுவாசியுண்டு; இராமபிரான் செய்த மோக்ஷப்ரதானத்தில் ஆக்ஷேப ஸமாதானங்கள் நடைபெற்றிருக்கின்றன. "*ஆத்மாநம் மாநுஷம் மந்யே* என்றிருந்த பெருமாள் பெரிய உடையார்க்கு எங்ஙனே மோக்ஷம் கொடுக்கத் தகும்?" என்கிற கேள்வியும், 'பரமபுருஷத்வப்ரயுக்தமான பெருமையினால் கொடுக் கவில்லை, *ஸத்யேந லோகாந் ஜயதி யென்ற பெருமையினால் கொடுத்ததென்கிற ஸமாதானமும் அவதரித்துள்ளது. இதன் விரிவை நம்பிள்ளை வைபவத்தில் காண்பது. கண்ணபிரான் செய்த மோக்ஷப்ரதானங்களைப் பற்றி சங்கையோ பரி ஹாரமோ ஏதும் உதிக்கவில்லை. கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்திலே * ப்ருச்சாமி கிஞ்சந யதா கில ராகவத்வே மாயாம்ருகஸ்ய வசகோ மநுஜத்வ மௌக்த்யாத், ஸீதாவியோகவிவசோ ந ச தத்கதிஜ்ஞ: ப்ராதாஸ் ததா பரகதிம் ஹி கதம் ககாய?* என்று இராகவனை நோக்கிக் கேள்விகேட்டாரேயொழிய, கண்ணனை நோக்கி இங்ஙனே கேட்டிலரே. ஆக ராமனுடைய மோக்ஷப்ரதானத் திற்காட்டிலும் கண்ணனுடைய மோக்ஷப்ரதானம் வீறுபெற்றதாயிற்று.

இனி ஐச்வர்யப்ரதானத்தை யெடுத்துக்கொள்வோம். இராமபிரான் * கொங்கைவன் கூனிசொற்கொண்டு குவலயத்துங்கக் கரியும் பரியுமிராச்சியமும் எங்கும் பரதற்கருளி * என்கிறபடியே அயோத்யைச்வர்யத்தை முழுதும் பரதாழ் வானுக்கே யருளினன். ஸுக்ரீவ மஹாராஜர்க்குக் கிஷ்கிந்தைச்வர்யத்தைக் கொடுத்தருளினன். விபீஷணாழ்வானுக்கு "என்னிலங்கு நாமத்தளவு மரசு" என்று சொல்லி ஒருநாளுமழியாத பெருஞ்செல்வத்தை யளித்தனன். கண்ண பிரான் ஐச்வர்யமளிப்பதற்குரிய க்ஷத்ரியகுலத்திலே பிறவாதிருக்கச் செய்தேயும் 'தாநாமுஷ்டிமுசே குசேல முநயே தத்தேஸ்ம வித்தேசதாம்" என்னும்படி குசேலமுனியை பூலோக குபேரனாக ஆக்கியருளினன். இதிலும் ராமனிற்காட் டிலும் கண்ணனுக்கு ஏற்றமுண்டு. பரதாழ்வானுக்குக் கொடுத்த செல்வம் பிறகு தனக்கேயாயிற்று. ஸுக்ரீவ விபீஷணர்களுக்குக் கொடுத்தது அவர்கள் தனக்கு உறுதுணைவராகவிருந்தனரென்றன்றோ? குசேலமுனிக்குக் கண்ணனளித்தது நிர்ஹேதுகமத்தனையே. .... .... ....

## 137. அவரகுலஜ ஸௌஹார்த்த தந்யத்வோபந்யாஸம்.

(*நத்யா: கூலே வதீர்ணௌ* என்கிற சுலோகத்தில்
ஏழாவது விசேஷணத்தின் விவரணம்.)

தாழ்ந்த ஜாதியிற் பிறந்தவர்களை அவரகுலஜ ரென்றும் ஜகந்ய ஜாதீய ரென்றும் சொல்லுவது. அவர்களோடே நேசங்கொள்வது அவரகுலஜ ஸௌ

ஹார்த்த மெனப்படும். சாஸ்த்ரங்களில் "ஹீநப்ரேஷ்யம்! ஹீநஸக்ய்யம் ஹீந கேஹநிஷேவணம்" என்று மூன்றும் உபபாதகமாகக் கூறப்பட்டுள்ளன. நீசர்களுக்கு வேலைக்காரனாகவிருப்பது, நீசர்களோடு நட்புகொள்வது, நீசர்களின் வீட்டுக்குள்ளே புகுவது என்னுமிவை மேம்பட்டவர்களுக்குத் தகாது. என்றிங்ஙனே நூற்கொள்கையிருக்க இதையொரு பெருமையாகவெடுத்துக் கூறலாமோவென்று சங்கையுண்டாகும். கேண்மின்; ஸ்வாபாவிகமாயும் ஒப்புயர்வற்றதாயுமுள்ள பெருமைபெற்றவர்களுக்கு இது இழிவாகாது என்பது மட்டுமன்றிக்கே மிகப் பெருமையுமாகு மென்று கொள்க. நம் போல்வாரிடத்துள்ள பெருமையானது ஸ்வாபாவிகமன்று; க்ஷணே க்ஷணே பங்கமடையக் கூடியதுமாகும். ஆகவே, வந்தேறியும் க்ஷணபங்குரமுமான பெருமை பெற்ற சிறியோமான நமக்கே ஹீநஜனஸக்ய்யம் அவத்யகரமாகும். *மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்குந் தேவாவோ* என்னும்படி பராத்பரனாயிருக்கின்ற பரம புருஷனுக்கு இது பெருமையை மிகமிக வளரச் செய்யும், ஸௌலப்யத்தை மஹாகுணமென்று கொண்டாடுகிறோம். பரத்துவத்தின் எல்லை நிலத்திலே நிற்கிற பரம புருஷனிடத்திற்காணும் ஸௌலப்யம் கொண்டாடப்படுகின்றதே யன்றி நீசத்தனத்தில் தலை நின்ற நம்போல்வாருடைய ஸௌலப்யமா கொண்டாடப் படுகிறது? இராமபிரான் நீசஜாதீயனை குஹனோடு தோழமை கொண்டதைத் திருமங்கையாழ்வார் எவ்வளவு ஆச்சரியமாகப் பாடுகின்றார்! *ஏழையேதலன் கீழ்மகனென்னாதிரங்கி மற்றவற்கு இன்னருள் சுரந்து, மாழைமான் மடநோக்கி உன் தோழி உம்பி யெம்பியென்றொழிந்திலை, உகந்து தோழன் நீ யெனக்கிங்கொழி யென்ற சொற்கள் வந்து அடியேன் மனத்திருந்திட* என்றன்றோ அவர் பாசுரமிருப்பது. மநுஷ்ய ஜாதியிற்காட்டிலும் இழிவான வானர ஜாதியிற் பிறந்தாரோடுமன்றோ கலந்துபழகினார் பெருமாள். அதையும் பாடுகிறார் திருமங்கையாழ்வார் தாமே 'வாதமாமகன் மற்கடம் விலங்கு மற்றோர் சாதி யென்றொழிந்திலை'' என்று. இராமபிரானுடைய இக்குணம் நிற்க; கண்ணபிரான் திறத்துச் செல்வோம்;



ஸ்ரீமான் உ. வே. விஞ்சிமூர் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி (வைகுண்டவாஸி. இன்ஸ்பெக்டர் ஸாமி ஐயங்காரென்று ப்ரஸித்தராய் திருநாங்கூரில் வாழ்ந்தவர். தையமாவாஸ்யை பதினொரு கருடோத்ஸவத்தை ஏற்பாடுசெய்த மஹானிவரே.

கண்ணனுடைய சரிதையில் தாழ்ந்தாரோடு கலந்து பரிமாறினது தான் மிகையாகக் கிடைக்கும். ''ததபி பரமம் தத்வம் கோபீஜநஸ்ய வசம்வதம்'' [யதிராஜஸப்ததி.] என்னும்படி ஆயரோடும் ஆய்ச்சியரோடுமே போதுபோக்கினன் பெரும்பாலும். பிற்காலத்திலே பாண்டவாதிகளோடே பழகினதுண்டாகிலும் ''பாண்டவதூத:'' ''பார்த்தஸாரதி:'' என்று அவர்களுக்குச் செய்த இழிதொழில் களை யிட்டுத் திருநாமம் ப்ரஸித்தமாயிரா நின்றதேயன்றி வேறில்லை. திருமங்கை யாழ்வார் பெரிய திருமொழியில் திருநீர்மலைப் பதிகத்தில் (பா. 9) ''மதியில் நீசரவர் சென்றடையாதவனுக்கிடம் மாமலையாவது நீர்மலையே'' என்றருளிச் செய்துள்ளார். 'மதியில்லாத நீசரவர்கள் சென்று அடையக் கூடாதவனுக்கு' என்கிற பொருள்தான் வியாக்கியான ஸம்மதம். அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையிலும் இங்ஙனேதான் பொருளுரைக்கப் பட்டுள்ளது. ஒருகால் ஒரு பெரிய ஸதஸ்ஸில் உபந்யஸிக்க நேர்ந்தபோது ''மதியில் நீசரவர் சென்றடை—யாதவனுக்கிடம்'' என்று பிரித்து நீசர்களுஞ் சென்று அடையும்படியான யாதவனுக்கு—யதுகுலோத்பவனுக்கு— என்று பொருள் கூறினேன்; 'இது பூருவர்களின் வியாக்கியானத்திற் காண்பதன்று; ஏதோ ரஸோக்தியாக விஜ்ஞாபித்தபடி' என்றும் சொன்னேன்; கேட்ட அனைவரும் 'இஃது இன்சுவைமிக்க பொருளே; பெரியவாச்சான்பிள்ளை கேட்டருளினால் திருவுள்ள முகந்தருள்வரே யொழிய விச்வாமித்ர ஸ்ருஷ்டி யென்று கருதார்' என்று கரகோஷத்துடன் கூறினர். ஒருவர் மட்டும் ''ஆழ்வார்கள் கண்ணனை யாதவனென்கிற சொல்லால் ஓரிடத்திலும் சொல்லியிருப்பதாகத் தெரியவில்லையே'' என்றார். உடனே பூதத்தாழ்வார் இரண்டாந் திருவந்தாதியில் (50) ''ஆயவனே யாதவனே யென்றவனை யார் முகப்பும்'' என்றருளிச் செய்திருப்பதை யெடுத்துக் கூறினேன்; ஸமாஹிதரானார்.



ஸ்ரீமதித்யாதி உபயவே. கோயில்கந்தாடை
திருமணி அப்பன்ஸ்வாமி (வைகுண்டவாஸி)

# 140. ஸௌந்தர்ய சாலித்வோபந்யாஸம்.

[*நத்யா: கூலேவதீர்ணௌ* என்கிற சுலோகத்தில் ''ஸௌரம்யௌ'' என்கிற எட்டாவது விசேஷணத்தின் விவரணம்.]

இராமபிரானுடைய அழகையும் கண்ணபிரானுடைய அழகையும் பேச வேணுமானால் எத்தனை யுகம் பேசினாலும் போதாது. அளவு கடந்து பேசியுமிருக்கிறேன். இங்கு மிகச் சுருக்கமாக வெழுதுகிறேன். இராமனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்ய நினைத்த தயரதமன்னவன் இராமனைத் தன்னிடம் வரவழைத்தான்; வந்து கொண்டிருக்கிற அவனை மன்னவன் தூரத்திலிருந்து பார்க்கும்போது அவன்றனுள்ளம் பூரித்தபடியை வான்மீகி பேசுகிறார்—*சந்த்ரகாந்தாநநம் ராமம் அதீவ ப்ரியதர்சநம், ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்..... ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிப:.* என்று. இங்கு (ரூபௌதார்யகுணை:) என்பதற்கு 'ரூபமென்ன, ஔதார்யமென்ன, மற்றுமுள்ள குணங்களென்ன இவற்றாலே—என்று பொருள் கூறுவர் சிலர்; ஆசாரியர்கள் உகக்கும் பொருள் இதுவன்று. திருவாய்மொழி (5—3—6) ஈட்டில் ''[ரூபௌதார்ய குணை:] ரூபமென்கிறது வடிவழகை; ஔதார்யமென்கிறது அத்தை எல்லாருமநுபவிக்கலாம்படி ஸர்வஸ்வதானம் பண்ணிக் கொண்டிருக்கை'' என்றருளிச் செய்திருப்பது காண்க. ரூப கமான ஔதார்யமென்றதாயிற்று. இதற்கு மேலே [பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்] என்றது வெகு அற்புதம். 'ஸர்வேஷாம்' என்று சொல்லவேண்டியிருக்க (பும்ஸாம் என்று) ஆடவர்களின் த்ருஷ்டிசித்தாபஹாரம் பண்ணுமவனென்கையாலே 'பெண்களை மயக்கும் வடிவழகில்லாதவன் இராமன்' என்று சில அரஸிகர்கள் பொருள் கூறுவர், கேண்மின். ஆண்களினழகைக் கண்டு ஆண்கள் மோஹிப்பதும்; பெண்களினழகைக் கண்டு பெண்கள் மோஹிப்பதும் மேட்டுமடை; [அஸம்பாவிதம்] இராமனழகைக் கண்டு ஆண்கள் மோஹிக்கின்றார்களென்றபோதே பெண்கள் படும்பாடு தண்டாபூபிகாந்யாயஸித்தம். விராட நகரத்தில் த்ரௌபதியினழகைக் கண்ட ஸ்த்ரீகள் ''பும்பாவம் மநஸா யயு:'' என்ன நின்றார்கள். இவ்வண்ணமாகவே கம்பராமாயணத்தில் ''ஆடவர் பெண்மையை அவாவுந்தோளினாய்!'' என்று இராகவனது தோளழகைக் கண்ட புமான்கள் பெண்மையை விரும்பும்படியிருந்ததெனப்பட்டது. வாலி இராமனெய்த அம்புபட்டு மாளுந்தருவாயில் சிறிது போது தர்க்கிக்கிறானன்றோ; அப்போது ''ஓவியத்தெழுத வொண்ணுவுருவத்தாய்!' என்று இராமபிரானை விளிக்கிறான். அவித்தவித்தெழுதப்படுகிற சித்திரத்திலும் இராமனுடையவுருவம் உள்ளபடி யெழுத வொண்ணாத தென்று தெரிவித்தபடி. பல சொல்லி என்? காதும் மூக்கு மறுப்புண்டு கதறியழுது கொண்டே கரதூஷணர்களிடம் செல்லுகின்ற சூர்ப்பணகை ''தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ, புண்டரீகவிசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ, கந்தர்வராஜப்ரதிமௌ பார்த்திவவ்யஞ்ஜநாந்விதௌ.......'' என்று பெருமாளுடைய வடிவழகையே சொல்லிச் சொல்லிப் புலம்பினளென்றால் இன்னமுஞ் சொல்லவேணுமோ? *ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம், தத்ருசுர் விஸ்மிதாகாரா ராமஸ்ய வநவாஸிந:* என்ற முரட்டாண்களின் விஸ்மயம் ஒரு புறம்; பங்கப்பட்ட சூர்ப்பணகையின் கதறல் ஒரு புறம். இது நிற்க.

கண்ணனுடைய அழகைச் சிறிது பேசுவோம். "உன்னைக் கண்டார் என்னநோன்பு நோற்றாள்கொலோ இவனைப் பெற்றவயிறுடையாள் என்னும் வார்த்தையெய்துவித்த இருடீகேசா!" என்கிறாள் யசோதைப்பிராட்டி. கண்ணன் தான் மேய்த்த பசுக்களை மீட்டுக் கொண்டு ப்ருந்தாவனத்தில் நின்றும் திரும்பும் போது ஒரு காதிலே சீலைக்குதம்பையையும் மற்றொரு காதிலே செங்காந்தட் பூவையுமணிந்து கொண்டு வருகிறான்; அப்போது "காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்து காணீர்" என்று தோழிமார்களெல்லாரையுமழைத்துக் காட்டிவிட்டு "ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர்! நானே மற்றாருமில்லை" என்று துணிந்து சொல்லுகிறாள். இவ்வநுபவம் கௌஸல்யைக்குஉண்டோ? கண்ணன் சிறுக்கனாய் எமுனைக்கரையிலே திரியும் போது அவன் வடிவழகைக் கண்டு மஹர்ஷிகள் பட்ட பாட்டை ஒரு மஹாகவி சொல்லுகிறார் - *மணிவிடம்பிநி தஸ்ய மநோஹரே வபுஷி மக்நமநா முனிமண்டலீ, ஜபமமுஞ்சத ஹோமமமுஞ்சத வ்ரதமமுஞ்சத வேதமமுஞ்சத.* என்று. கண்ணன் அங்கு உலாவும் போது சில முனிவர்கள்



கோயம்புத்தூர் ஸ்ரீவைஷ்ணவ மஹாஸபை. (1946)

ஜபம் செய்து கொண்டிருந்தார்கள்; சிலர் ஹோமஞ்செய்து கொண்டிருந்தார்கள்; சிலர் மௌனவ்ரதம் பூண்டிருந்தார்கள்; சிலர் வேதமோதிக் கொண்டிருந்தார்கள். கண்ணன் வடிவழகைக் கண்டவாறே ஜபம் முடிந்துவிட்டது; ஸ்வாஹா ஸ்வாஹாவென்று செய்யும் ஹோமமெல்லாம் ஹாஹாஹாஹாவென்று மோஹமாயிற்று; மௌனவ்ரதத்திலிருந்தவர்கள் வாய்திறந்து புகழத் தொடங்கி விட்டார்கள்; வேதமோதின்வர்களுக்கு வேதம் மறந்தே போயிற்று. வேதவேத்யனை நேரில்

கண்ட பிறகு வேதமேதுக்கு? ஸர்வயஜ்ஞஸமாராத்யனைக்கண்ட பிறகு யஜ்ஞமேதுக்கு? என்று எல்லாவற்றையும் விட்டொழித்தார்கள். இதெல்லாம் ஒருபுறமிருக்க, *யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவசா: ப்ரதிபேதிரே* என்னும்படி துர்யோதன ஸபையில் நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றுபோதுமே. அதை இவ்விரண்டாம் பகுதியில் நூற்றிருபத்தைந்தாமுபந்யாஸத்திற் காண்க. .... ... *

## 141. பரத்வே நிரபேக்ஷத்வோபந்யாஸம்.

[*நத்யா: கூலேவதீர்ணௌ* என்கிற சுலோகத்தில் ''பாரம்யே நிர்வ்யபேக்ஷௌ* என்ற ஒன்பதாவது விசேஷணத்தின் விவரணம்.]

பரத்வகந்தமேயில்லாத தேவதாந்தரங்களுக்குப் பரத்வாரோபணத்தில் பேராசையுள்ளது, பராத்பரர்களான ஸ்ரீராமக்ருஷ்ணர்களுக்குப் பரத்வம் வெறுக்கத்தக்கதாகவுள்ளது. விச்வாமித்ர முனிவர் தயரதமன்னவன் பக்கலிலே வந்து ''அஹம் வேத்மி மஹாத்மாநம் ராமம் ஸத்யபராக்ரமம்'' என்று இராமபிரானுடைய பரத்வத்தைப் பேசினுர். *வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்* என்று புருஷ ஸூக்த ஸித்தமான பரத்வத்தையன்றோ *அஹம் வேத்மி மஹாத்மாந மென்று பேசிற்று. அங்ஙனம் பேசினது இராமபிரான் திருவுள்ளத்திற்கு அத்ருப்திகரமென்று தெரிந்துகொண்டன்றோ மறுநாள் ஆற்றங்கரையில் திருப்பள்ளியெழுச்சி பாடுகையில் ''கௌஸல்யா ஸுப்ரஜாராம!.......உத்திஷ்ட நரசார்தூல!'' என்றனன் அம்முனிவன்தானே. நரசார்தூல! என்றவன் 'ஸுரசார்தூல' என்றுலாகாதோ? பரத்வஸாபேக்ஷனல்லனிவன் என்று தெரிந்துகொண்டன்றோ நரசார்தூல வென்று விளித்தது. பாலகாண்டகதை இருக்கட்டும்; இனி யுத்த காண்ட முடிவிற் செல்வோம். ராவண ஸம்ஹாரமானபிறகு இந்திரன் வருணன் சிவன் பிரமன் முதலான பலபல தேவர்கள் இலங்கையில் வந்து சேர்ந்து இராகவனை அபரிமிதமாகப் புகழ்கின்றனர் ''அனைத்துலகு மனைத்துயிரு மமைத்தளித்துத் துடைப்பவன் நீ காண்!'' என்றனர்; அப்போது அவர்களனைவரும் ஒருமிடருகச்சொன்ன பரத்துவம் தனக்கு அஸஹ்யமாய் ''ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்'' என்றனன் இராகவன். இங்கு (மந்யே) என்பதற்கு பஹுமந்யே என்று பொருள். கீதையில் ''அபிசேத் ஸுதுராசாரோ பஜதே மாம் அநந்யபாக். ஸாதுரேவ ஸ மந்தவ்ய:'' என்றவிடத்தில் நமது பாஷ்யகாரர் ''மந்தவ்ய:— பஹுமந்தவ்ய:'' என்றருளிச் செய்திருப்பதை நினைப்பது. 'எனக்கு நாராயணத்வமிருந்தாலும் அதில் விருப்பமில்லை; மநுஷ்யத்வமும் தசரதாத்மஜத்வமுமே எனக்கு பஹுமாநாஸ்பதம் என்றுனயிற்று. இனி கண்ணன்பாடு செல்வோம்; *ஆயிரங்கண்ணுடையிந்திரனுருக்கென்று ஆயர்விழவெடுத்த காலத்திலே 'நாம் பிறந்துவளருகிற வூரிலே நம்முன்னே வேறொரு தெய்வத்திற்குப் பூஜை செய்ய அதை நாம் கண்டிருப்பதென்று ஒன்றுண்டோவென்று அந்தப்பூசனைகளையெல்லாம் கோவர்த்தனமலைக்கே இடச்செய்து, பிறகு நேர்ந்த அதிவிருஷ்டியிலிருந்து கோகோபாலர்களைக் காப்பதற்காக ஏழுநாள் மலையைக் குடையாகவெடுத்துப் பிடித்து நிற்கிறுன் கோவிந்தன். அவ்வதிமாநுஷ சேஷ்டிதங்கண்டு ஆச்சரியப்பட்ட ஆயர்கள் *பாலத்வஞ்ச அதிவீர்யஞ்ச ஜந்மசாஸ்மாஸு அசோப

நம், சிந்த்யமாநமமேயாத்மந்! சங்காம் க்ருஷ்ண! ப்ரயச்சதி. தேவோ வா தான வோ வா த்வம் யக்ஷோ கந்தர்வ ஏவ வா* என்றூர்கள். இது புகழ்ச்சியுரையே யன்றி இகழ்ச்சியுரையன்றே. இதை ஸஹித்திலன் கண்ணபிரான். "நாஹம் தேவோ ந கந்தர்வோ நயக்ஷோ ந ச தாநவ:, அஹம் வோ பாந்தவோ ஜாதோ நைவ சிந்த்யமதோந்யதா" என்று நான் தேவனுமல்லேன் தானவனுமல்லேன்; இடையர்களுக்குள்ளே கடைகெட்ட இடையன் காண்மின்; வேறு விதமாக நினை யாதீர்களென்று வெருட்டினன். இராமபிரானை நோக்கித் தேவர்கள் "பவாந் நாராயணோ தேவ:" என்றபோது 'நாஹம் நாராயண:' என்று மறுத்திலன்; தன்னு டைய பரத்துவத்தை ஒருவாறு இசைந்திருந்தானென்றே சொல்லலாம். தேவத்வத்தை நிந்தையாக நினைத்து வெறுத்தது கண்ணபிரானுக்கு ஏற்றம்.

## 142 அதிமாநுஷக்ருத்ய நரணோபந்யாஸம்

(*நத்யா: கூலேவதீர்ணௌ* என்கிற சுலோகத்தில் கடைசி விசேஷணத்தின் விவரணம்.]

கூரத்தாழ்வான் தாமருளிச்செய்த பஞ்சஸ்தவத்தில் ஒரு ஸ்தவத்திற்கு அதிமாநுஷஸ்தவமென்றே திருநாமம் சாற்றியருளினர். அந்த ஸ்தவம் தொடங் கும்போதும் "அதிமாநுஷ சீலவ்ருத்தவேஷை: அதிவ்ருத்தாமரவிக்ரமப்ரதாபை:" என்றருளிச்செய்தார். எம்பெருமான் தன்னுடைய விபவாவதாரங்களில் செய்து போந்தவையெல்லாம் அதிமாநுஷங்களென்றூராயிற்று. அதிமாநுஷம் மட்டு மன்று; அதிதைவமுமாகுமென்கிறூர். தேவதைகளின்படியையும் அதிக்ரமித்தது அதிதைவம். மத்ஸ்ய கூர்மாத்யவதாரங்களிலெல்லாம் இதுகாணலாயிருந்தா லும் ராமகிருஷ்ணுவதாரங்களில் அபரிமிதமாகக் காணலாயிருக்கும். ஸ்ரீராமாவ தாரத்தில் தலையாகக் காட்டக்கூடிய அதிமாநுஷக்ருத்யம் கடலில் அணைகட்டின தொன்றும். மராமரமேழெய்தது முதலியவை இதற்கு ஈடாகமாட்டாவன்றே. ஆனல்: ஸேதுபந்தனமாகிற இவ்வதிமானுஷக்ருத்யத்தில் ஒரு குறையுண்டு; அதாவது, *குரக்கினப்படை கொடு குரைகடலின்மீதுபோய்* என்று திருமழிசை யாழ்வாரும், *குரங்குகள் மலையை நூக்கக் குளித்துத்தாம் புரண்டிட்டோடித் தரங்கநீரடைக்கலுற்ற சலமிலாவணில்* என்று தொண்டரடிப்பொடியாழ்வாரும், *யாந்தி ந்யாயப்ரவ்ருத்தஸ்ய திர்யஞ்சோபி ஸஹாயதாம்* என்று முராரிகவியும் கூறினபடியே இராமபிரான் செய்த ஸேதுபந்தனம் துணையின்றிக்கே செய்த தன்று. வானரவீரர்களைத் துணைகொண்டு செய்ததாக ப்ரஸித்திவந்து விட்ட படியால் ஸஸஹாயக்ருத்யமென்று குறைகூற இடமாயிற்று. இனி கண்ணனுடைய சேஷ்டிதங்களை யெடுத்துக்கொண்டாலோ அதிமாநுஷம் அதிதைவம் என்னும் படியான சேஷ்டிதங்களும் அபரிமிதம்; அவற்றில் ஒன்றுகூடப் பிறர் துணை கொண்டு செய்ததன்று. இவ்வுபந்யாஸ சதத்வயத்தில் கீழே (107) ஏழுநாள் குன்றைக்குடையாக வெடுத்து நின்றது 123 ஸாந்தீபநி புத்திரனை மீட்டுக்கொடுத் தது, 124 வைதிகன் பிள்ளைகளைக் கொணர்ந்துதந்தது, 127 மருமகன்றன் சந்த தியை உயிர்மீட்டுக் கொடுத்தது ஆகிய இவை அதிமாநுஷம் அதிதைவம் என்ப தேயல்லாமல் ஒரு துணையுமின்றிக்கே செய்தவையுமாம். இந்நான்கு சேஷ்டிதங் களின் விவரணத்தைக் கீழே 5, 16, 18 பக்கங்களிற்காண்பது. ... .... *

—:: ~~இதற்குமேல் திருமஞ்சனக்கட்டியங்கள் பன்னிரண்டும் 12 உபந்யாஸங்கள் 143 to 154~~ ::—

# 143. மணவாளமாமுனிகளின் திருநாவீறுபந்யாஸம்

[குறிப்பு:—மணவாள மாமுனிகளின் வைபவத்தை உபந்யஸிக்கவேணுமென்று சிலர் விரும்பினால் எதையோ சொல்லிப் போதைப் போக்கவேண்டாதபடிக்கு இந்த வியாஸம் உபஹரிக்கப் படுகின்றது. அடியேனுடைய பல வியாஸங்களின் ஸாரஸம்க்ஷேபமிது.]

நம்முடைய ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயமானது ஆழ்வார்களாலும் ஆசாரியர்களாலும் பெருமைபெற்றுப் பொலிகின்றது. இவ்வாழ்வாராசார்ய பரம்பரையானது பொய்(கை)யாழ்வார் தொடங்கிப் பொய்யிலாத மணவாளமாமுனிகளோடு தலைக்கட்டுகின்றது. இப்பெரியார்கள் நமக்குச் செய்தருளின மஹோபகாரங்களுக்கு நாம் செலுத்த வேண்டிய கைம்மாறு அவர்களுடைய புகழ்களை வாயாரச் சொல்லிப் போற்றுவதொன்றேயாம்.

நாமாகச் சில செய்யுள்களையோ சுலோகங்களையோ இயற்றிப் போற்றுவதிற் காட்டிலும் முன்னோர்கள் மொழிந்தவற்றைக் கொண்டு போற்றுவது மேம்பட்டதாம். ஆழ்வார்களில் நம்மாழ்வாரொருவர்க்கு மட்டுமே மதுரகவிகள் அருளிய கண்ணிநுண் சிறுத்தாம்புதுதியுள்ளது. மற்றுள்ள ஆழ்வார்களுக்கு அவரவர்களின் திவ்யப் பிரபந்தத் தனியன்களைத் தவிர வேறொரு துணுக்கையும் துதியாக அமைந்திலது.

இனி ஆசாரியர்களைப் பற்றிப் பேசப்புகுவோமாயின் எம்பெருமானாரொருவர்க்குத் தவிர மற்று எவர்க்கும் தோத்திர நூல் அமைந்திலது. இராமாநுச நூற்றந்தாதியானது ஸ்வாமியின் காலத்திலேயே அவதரித்து மேன்மை பெற்றது. யதிராஜ ஸப்ததி, யதிராஜ விம்சதி, யதிராஜ தண்டகம் முதலானவை பிற்காலத்தில் தோன்றியவை நிற்க, ஸமகாலத்தில் தோன்றிய துதிநூல் நூற்றந்தாதி யொன்றேயாம். வடுகநம்பி யென்பவர் யதிராஜ வைபவமென்றொரு வடமொழி நூல் பணித்தாரெனினும் அது சரித்திர நூலேயன்றித் தோத்திர நூலன்று. பல்கலையோர்தாம் மன்னவந்த விராமானுசன் திருவடிகளில் ஆச்ரயித்திருந்த ஆயிரக்கணக்கான ஸ்ரீ வைஷ்ணவர்களில் எழுபத்துநான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளென்று பரிகணிதரான மஹான்கள் ஒவ்வொருவரும் மிகச்சிறந்த பண்டிதோத்தமர்கள்; அவர்களுள்ளும் ஆழ்வான் ஆண்டான் பிள்ளான் அனந்தாழ்வான் அருளாளப் பெருமாளெம்பெருமானார் எம்பார்.........என்னுமிவர்கள் ப்ரசண்ட பண்டிதர்கள். இவர்கள் எதிராசர் திறத்துத் துதிநூல் பணித்ததாகத் தெரியவில்லை. இக்குறையை அமுதனார் நூற்றந்தாதியில் ஒரு பாசுரத்தில் காட்டியுமுள்ளார். "இந்நிலத்தே எனையாளவந்த விராமாநுசனை **இருங்கவிகள் புனையார்**" என்று. இதன் பொருளை நாம் விவரிக்க வேண்டுமோ?

இராமானுசர்க்கு அடுத்துள்ள எம்பார் ஆழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் திருவாய்மொழிப்பிள்ளையளவாகவுள்ள ஆசாரியர்களுக்கு ஒரு தோத்திர நூலும் திருவவதரிக்கக் கண்டிலோம். இதனால், தோத்திரம் செய்யக்கூடிய பெருமை அவ்வாசிரியர்கள் பக்கலிலே இல்லையென்று நாம் சொல்லுவதாகக் கருதலாகாது. பிரகிருதம் மணவாளமாமுனிகளைப் பற்றி நாம் விஜ்ஞாபிப்பதை மட்டும் குறிக்கொள்ள வேணும்.

"ஏராருமெதிராசரெனவுதித்தான்வாழியே" என்று வாழ்த்தப்பட்டு வருகின்ற நம் மாமுனிகள் எம்பெருமானாருடைய அபராவதாரர் என்பதில் ஐயமில்லை. இவ்வளவே யன்று; அவர்தம் அவதாரத்திற்காட்டிலும் மிக்க மேம்பாடுடையது மாமுனிகள் தம் அவதாரம். ஸ்வதந்திரமாகப் புதிய நூல்களை யருளிச்செய்வதில் விசேஷ விருப்ப மற்று வியாக்கியான ரூபமான க்ரந்தங்களை யருளிச்செய்வதிலேயே ஊக்கமும் ஊற்றமும் இருவர்க்கும் துல்யமானது. ஸ்ரீ பாஷ்யம் வேதாந்த தீபம் வேதாந்த ஸாரம் கீதா பாஷ்யம்



**P. B. A. ஷஷ்டியப்த பூர்த்திச் சிறப்புகள்.**

என்னுமிவை வியாக்கியான க்ரந்தங்களே யன்றோ. அப்படியே மாமுனிகளும், "சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசுபொலிந்திடு நாள்" என்கிறபடியே பிள்ளைலோகாசாரியருடையவும் அவரது திருத்தம்பியாருடையவும் அருமருந்தான திவ்விய ரஹஸ்ய நூல்களுக்கு வியாக்கியானங்களையருளிச் செய்தார். எம்பெருமானார் வேதார்த்த ஸங்க்ரஹம், கத்யத்ரயம், நித்யம் என்கிற ஸ்வதந்த்ர க்ரந்தங்கள் சிலவற்றையும் அருளிச் செய்தாப் போலே மாமுனிகளும் யதிராஜ விம்சதி, உபதேச ரத்தினமாலை முதலிய ஸ்வதந்திர நூல்களையுமருளிச் செய்தார்.

இவ்வகையாலே இருவர்க்கும் ஸாம்யமென்பது நிற்க. மாமுனிகளுக்கு எம்பெருமானாரிற் காட்டிலும் மிகுந்த ஆதிக்கியம் கேண்மின். "ஓராண் வழியாய்" என்கிற உபதேச ரத்தினமாலைப் பாசுரத்தின்படி எம்பெருமானார்க்கு ஒரு ஏற்றம் தெரிந்துகொள்ளுகிறோம். அதாவது, ஆளவந்தார் முதலான முன்னோர்கள் அர்த்தங்களின் சீர்மையைக் கண்டு மறைத்தொளித்துப் போந்தார்களென்றும், எம்பெருமானார் அங்ஙனன்றிக்கே 'பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறு'மென்று கட்டளையிட்டதாகவும் காண்பதேயாம். இப்படி பிறர்க்குக் கட்டளையிட்ட எம்பெருமானார், முன்னம் தாம் ரஹஸ்யார்த்தங்களை ஏடுபடுத்தி விளக்கியிருக்கவேண்டும். ப்ரஹ்ம ஸூத்ரத்திற்குப் பல வியாக்கியானங்களிட்டவர் ரஹஸ்யப்பொருள் விளக்கமாக ஒரு நூலும் பணித்திலர். அது அவர்க்குப் பெரிய குறையேயாம்.

அக்குறையைத் தீர்த்துக்கொள்வதற்காகவே அவர் தாமே மாமுனிகளாகத் திருக்கோலம் பூண்டார். இவ்வவதாரத்தில் செய்தருளின காரியங்களே மிகமிகப் புகழத்தக்கவையாயின. ஆனதுபற்றியே இவ்வவதாரத் தனியன், வாழிகளுக்கே நாடு நகரமும் நன்கறிந்த பெருமை விளைந்து அது சந்திர ஸூரியர்களுள்ள வரையில் விளங்குமதாயிற்று.

இம் மஹோபகாரத்தின் மாண்புகண்டே மாமுனிகளுக்குத் தோத்திர நூல்கள் மிகமிகத் தோன்றின. வடமொழியில் வரவரமுநி சதகமென்று இரண்டு சதகங்கள் எல்லையில்லாப் பேரின்பவெள்ளமே வடிவெடுத்தனவென்னும்படி தோன்றியுள்ளன. ஒன்று எறும்பியப்பா பணித்தது. மற்றொன்று அஸ்மத்குலகூடஸ்தர் பணித்தது. அன்றியும், பிள்ளைப் பெருமாளையங்கார் அஷ்டப் பிரபந்தங்கள் என்னுமாபோலே அஷ்ட திக்கஜாசார்யர்களின் அஷ்டப் பிரபந்தங்களும் தமிழில் தோன்றியுள்ளன. எறும்பியப்பா வென்னுமாசிரியர் வடமொழியில் வரவரமுநி சதகமொன்றேயன்றி வரவரமுநி காவியம் வரவரமுநி சம்பூ வரவரமுநி கர்ணாம்ருதம் அம்ருதத்வநி இத்யாதிகளான பல துதி நூல்களையும் பணித்துள்ளார்.

இத் துதிநூல்களெல்லாவற்றிலும் கூறப்பட்டுள்ள விஷயங்களை ஸாரமாக வெடுத்துரைப்போமாயின் 'மாமுனிகளின் திருநாவீறு பரம விலக்ஷணம்' என்பதொன்றே யாம். இராமாநுச நூற்றந்தாதியின் ஸாரப்பொருள் ஸ்வாமியெம்பெருமானார் புறச் சமயிகளின் வாதங்களை வேரறக் களைந்து வெற்றிபெற்றாரென்பது. *வாதியர்காள்! உங்கள் வாழ்வற்றதே—வாழ்வற்றது தொல்லை வாதியர்க்கு—தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும்......நீசரும் மாண்டனர்......* இத்தகைய பாசுரங்களே நூற்றந்தாதியில் அடுத்தடுத்துவரும். விரோதி நிரஸன காரியம் அவ்வவதாரத்தில் தலைக்கட்டிற்றாகை யாலே இவ்வவதாரத்தில் [மாமுனிகளான அவதாரத்தில்] தாம் மதுபானம் செய்தருள் வதும் தமர்களை மதுபானம் செய்வித்தருள்வதுமாய் நின்றது. இவ்விரண்டவதாரங்களையும் உற்றுநோக்குமளவில் உடையவரை ஸூர்யனாகவும் மாமுனிகளைச் சந்திரனாகவும் அறுதியிடலாம். ஆனால் ஆகாசத்திலுள்ள சந்திரனுக்குக் கலைகள் குறைவதும் ஏறுவது மாகவேயிருக்கும். மாதத்தில் ஒருநாள்தான் ஸகலகலா பரிபூர்ணனாகச் சந்திரனைப் பார்க்கமுடியும். ஸ்ரீமத் வரவரமுநி சந்திரனுக்கு எப்போதும் ஸகலகலா பரிபூர்ண

ஸ்திதியொழிய வேறில்லை. அந்த சந்திரனுக்குக் களங்க ஸம்பந்தமுள்ளது ப்ரஸித்தம், சாஸ்த்ரஸித்தமும். இந்த சந்திரனுக்கு எவ்விதமான களங்கப்ரஸக்தியுமில்லை.

பண்டிதர், வித்வான், வாக்மி......இத்யாதி விருதுகள் பலர்க்குக் கிடைக்கும், கிடைத்தும் வருகிறது. விசதவாக் சிகாமணியென்கிற விருது மாமுனிகளொருவர்க்கே அஸாதாரணம். கூறினது கூறல், மயங்கவைத்தல், நலிந்து பொருள்கொள்ளவைத்தல், இன்னது சொல்லிற்றென்று தெரியாதபடி பேசிவைத்தல், பிறர்மனம் நோவப் பேசுதல், வீணாக வளர்த்துதல், முன்னோர் மொழிந்த மொழிகளுக்கு மாறாகப் பேசுதல், முன்பின் முரண்படப் பேசுதல் முதலிய குற்றங்குறைகளை இதர ஆசிரியர்களின் நூல்களில் பார்க்க இயலும். இங்ஙனே சொல்லுதலால் அபசாரம் நேர்ந்தாலும் இதனை எம்பெருமானும் எம்பெருமானாரும் அபசாரமாகக் கொள்ளார்கள். 'ஸத்ய முக்தம்' என்று திருவுள்ளம் பற்றுவர்களென்பதில் ஐயமில்லை.

பகவத் விஷயத்திற்கு ஊற்றுவாயான நம்பிள்ளை தமது நித்ய காலக்ஷேபத்தை அரங்கன் திருமுன்பே நடத்தியிருந்தும் அவரை ஆசார்யராகக்கொள்ளவோ அவர்க்குத் தனியன் விஜ்ஞாபிக்கவோ மனங்கொண்டிலன் மதிளரங்கன். மாமுனிகள் பக்கலிலே சிஷ்யவ்ருத்தி பண்ணினது சந்திர ஸூரியர்களுள்ளவரையில் உலகில் ஓங்கி நிற்க உலகம் புகழும் தனியனை விண்ணப்பம் செய்தது மிகவற்புதம். அந்தத் தனியன் மானிட வாக்கன்று, தெய்வவாக்கே யென்பதை அடுத்த உபந்யாஸத்தினால் மூதலிக்கின்றேன்.

## 144. அழகியமணவாளனுடைய சிஷ்யத்வவைபவோபந்யாஸம்

தென்திருவரங்கம் கோயில்கொண்ட தெய்வசிகாமணி நம் மணவாளமாமுனிகளுக்குத் தான் சிஷ்யனாகி அவரைத் தனக்கு ஆசார்யனாகக்கொண்டு க்ருதார்த்தனாகக் குதூஹலித்தான். திருவாய்மொழிக்குச் சிறந்த வியாக்கியானமாக அமைந்த ஈடு முப்பத்தாறாயிரப்படியின் விசேஷார்த்தங்களை மணவாள மாமுனிகளின் திருவாக்கினால் கேட்கப்பெறவேணுமென்று ஆவல்கொண்டான். தனது திருக்கோயிலின் திருமுன்பே கருடமண்டபத்தில் எழுந்தருளியிருந்து ஸாதித்தருளவேணுமென்று கட்டளையிட்டனன். அதைக் கேட்டவுடனே மாமுனிகள்,

"**நாமார் பெரியதிரு மண்டபமார் நம்பெருமாள்**
**தாமாக வெம்மைத் தனித்தழைத்து—நீமாறன்**
**செந்தமிழ் வேதத்தின் செம்பொருளை நாளுமிங்கே**
**வந்துரையென் றேவுவதே வாய்ந்து.**"

என்று நைச்சியமாய் அநுஸந்தித்து மறுநாள் தொடங்கி ஓராண்டளவும் பகவத் விஷய ப்ரவசனம் நடத்திவந்தார்; அவ்வாண்டில் ஸகல உத்ஸவங்களும் நிறுத்தப்பட்டன. பிறகு ஸமாப்தி தினத்தில் ஸ்ரீ ரங்கநாதன் ஒரு சிறு குமாரனாய்த் திருவோலக்கத்திலே வந்து நின்று,

"**ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்,**
**யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.**"

என்கிற திவ்யபத்யத்தைக் கைகூப்பி நின்று விஜ்ஞாபித்தனனாக இதிஹாஸம் ப்ரஸித்தமாகவுள்ளது. இதுவொரு அதிசயோக்தியான இதிஹாஸமாயிருக்கலாமென்று சிலர் நினைக்கக்கூடும். மணவாளமாமுனிகளின் திருவடிகளிலும் அவருடைய வைபவங்களிலும் ப்ரதிபத்தியுள்ளவர்களுங்கூட இதுவொரு அதிசயோக்தியாயிருக்குமோவென்று நினைக்கக்கூடும். இத்தனியனில் சொற்கள் அமைந்திருக்கிற அமைப்பை ஆராயுமிடத்தில் இது தெய்வவாக்கேயன்றி மானிட வாக்காக இருக்கமுடியாதென்பதை ப்ராமாணிகர்கள் எளிதிலுணரலாம். ஏன்? **ஸ்ரீசைலேசதயாபாத்ர** மித்யாதி ச்லோகம் ஸாதாரணமாகவொரு வ்யுத்பந்நனால் இயற்றமுடியாததோ? இதைவிட இன்னமும் அதிசயித்ததாக இயற்றமுடியுமே. இது தெய்வவாக்காகவே யிருக்கவேணுமென்று எதுகொண்டு சொல்லுவது? என்னில்; அதை நன்கு நிரூபிக்கிறோம்.

இந்த ச்லோகமருளிச் செய்தவனாகச் சொல்லப்படுகிற அரங்கத்தம்மான்தானே பண்டு இராமபிரானாகவும் கண்ணபிரானாகவும் திருவவதாரம் செய்தருளியிருந்தவனென்பதில் ஒருவர்க்கும் ஸந்தேஹமில்லையே. "மாமுனி வேள்வியைக்காத்து அவபிரதமாட்டிய அடுதிறலயோத்தி யெம்மரசே அரங்கத்தம்மா!" என்றும், "கோவலனாய் வெண்ணெயுண்டவாயன் அண்டர் கோனணியரங்கன்" என்றும், "மதுரைமா நகரந்தன்னுள் கவளமால் யானைகொன்ற கண்ணனை யரங்கமாலை" என்றும் ஆழ்வார்கள் ஸ்ரீராம ஸ்ரீக்ருஷ்ணமூர்த்தியாகவே அரங்கநாதனை அருளிச்செய்திருப்பது அபலபிக்க முடியாததன்றோ.

அப்படி இராமபிரானாகத் திருவவதரித்திருந்த காலத்திலும் கண்ணபிரானாகத் திருவவதரித்திருந்த காலத்திலும் சில வியக்திகளிடத்தில் ஆச்ரயித்து, அவ்விடங்களில் திருவுள்ளத்திற்கு த்ருப்தியில்லாமலே முடிந்திருக்கிறது. ஒவ்வொருவரிடத்திலும் ஒவ்வொரு குறைகண்டு வெறுப்புடனிருக்க நேர்ந்தது. அந்த வெறுப்பெல்லாந்தீர இப்போது மணவாளமாமுனிகளை ஆச்ரயித்து "ஸதாசார்ய லக்ஷணபூர்த்தியுள்ள இவரை ஆச்ரயிக்கப் பெற்றோமே!" என்று மகிழ்ச்சிகொண்டமை இந்த ச்லோகத்தில் ஒவ்வொரு விசேஷணத்தினாலும் ஸ்புடமாகக் காட்டப்பட்டிருப்பதை நிரூபிக்கிறோங் காண்மின்:—

1. **ஸ்ரீசைலேசதயாபாத்ரம்** என்பது முதல் விசேஷணம். ராமாவதாரத்தில் சைலேசதயாபாத்ரமானவொரு வ்யக்தியை வணங்கிக் கெட்டேன்; இப்போது ஸ்ரீசைலேச தயாபாத்ரமான வ்யக்தி விசேஷத்தை வணங்கி வாழ்கிறேன் என்கிறது. ராமாவதாரத்தில் வணங்கப்பட்ட சைலேசதயாபாத்ரமான வ்யக்தி யாரென்னில்; ஸுக்ரீவன். சைலமாவது ரிச்யமூக பர்வதம். அதற்கு ஈசர்—மதங்கமுனிவர். அவருடைய தயைக்குப் பாத்ரபூதன் ஸுக்ரீவன் என்பது ஸ்ரீராமாயணம் கிஷ்கிந்தாகாண்டத்தில் பதினோராவது ஸர்க்கத்திலுள்ள கதையினால் ஸ்பஷ்டம். ஆயிரம் யானை பலங்கொண்டவனை **துந்துபி**யென்னு மரக்கன் எருமைக்கடா வடிவமெடுத்துக் கிஷ்கிந்தைக்குவந்து வாலியைச் சண்டைக்கழைக்க, இருவர்க்கும் பிரபலமான போர்நடந்து வாலியினால் துந்துபி சரீரம் முழுதும் மடியும்படி பிசையப்பட்டு அவ்வரக்கன் மரணமடைந்து தரையில்விழ, வாலி அவனுடைய வுடலை ஒரு யோசனை தூரம்போய் விழும்படி வீசியெறிய, அப்போது அவனது வாயிலிருந்து ரத்தத்துளிகள் காற்றினால் தள்ளுண்டு [சைலேசரான] மதங்கமாமுனிவரின் ஆச்ரமத்தில்போய்விழ, அதைக்கண்ட அம்முனிவர் மிகுந்த சீற்றங்கொண்டு தன்

ஞானத்ருஷ்டியினுல் இங்ஙனம் தீச்செயல் செய்தவன் வாலியென்றுணர்ந்து "பரிசுத்த மான எனது ஆச்ரமத்தை இவ்விதம் அபரிசுத்தமாக்கினவன் யாவனே அவனும் அவனன்பர்களும் இவ்வாச்ரம பரிஸரங்களில்வந்தால் உடனே மரணமடையக் கடவர்கள்" என்று சாபமிட்டு அச்சாபம் நடத்தைக்கு வருவதற்கு ஒருநாள் கெடு கொடுத்திருப்ப தாகவும் சொல்ல, உடனே அவ்வனத்திலுள்ள [வாலியைச்சேர்ந்த] வானரர்களெல்லாரும் ஓடிச்சென்றனர். சாபபயத்தினுல் வாலி அவ்விடம் வருவதற்கில்லாதபடியாயிற்று. அவனுடைய ஸம்பந்தமற்றவனுன ஸுக்ரீவன்மாத்திரம் தனது அன்பர்களுடன்



அவ்வாச்ரமத்திில் வாழ்ந்து வந்தனனுதலால் அவன் சைலேச தயாபாத்ரமாயினன். "**ஸுக்ரீவம் சரணம் கத:**" என்கிறபடியே அவனே வணங்கியிருந்த இராமன் பிறகு அவனேடே மனஸ்தாபப்பட நேர்ந்துவிட்டது. அவ்விஷயம் கிஷ்கிந்தாகாண்டம் முப்பதாவது ஸர்க்கத்தில் விளங்கியதே. அதாவது—மாரிகாலம் முடிந்தபின்பும் ஸுக்ரீவன் சேனைகளைத் திரட்டிக்கொண்டு வராமற்போகவே பெருமாள் இளையோனை நோக்கி 'லக்ஷ்மணு! இன்னமும் சுக்ரீவன் என்னை அடியோடு மறந்து வாளாகிடக்கின்றனன் காண்; செய்ந்நன்றிமறந்த காதகனன்றே சுக்ரீவன்; நீ உடனே அவனிடஞ்சென்று நான் சொன்னதாகச் சொல்லு; செய்ந்நன்றிமறந்த பாபிஷ்டன் புருஷர்களிற் கடையானவன்;

அவன் மரணமடைந்தால் அவனது உடலை மாமிசந்தின்னும் ஜந்துக்களும் தின்னமாட்டா. லக்ஷ்மணா! என் பராக்ரமத்தைச் சுக்ரீவன் நன்றாக அறிந்திருந்தும் சிறிதும் அச்சமில்லாமல் கிடக்கிறானே; வாலி சென்றவழி அவனுக்கும் திறந்திருக்கிறதென்று அவனிடம் கூறு. அவனை உற்றாருறவினரோடும் யமபுரமனுப்பச் சித்தமாயிருக்கிறேனென்று தெரிவி' என்று கூறியிருப்பதேயாம். "**ஸுக்ரீவம் நாதமிச்சதி**" என்றும் "**ஸுக்ரீவம் சரணம் கத:**" என்றும் ஈடுபட்டவிடத்திலே இப்படி மனஸ்தாபப்பட நேர்ந்துவிட்டதனால், முன்பு சைலேச தயாபாத்ர பூதனானவொருவனை வணங்கி வருந்தின குறைதீர இப்போது ஸ்ரீசைலேச தயாபாத்ர பூதரை வணங்கி வாழ்கின்றேனென்றதாயிற்று. திருமலையாழ்வாரென்கிற திருவாய்மொழிப் பிள்ளையின் இன்னருளுக்கு இலக்கான மாமுனிகளை வணங்குகின்றேனென்கை.

2. இனி இரண்டாவது விசேஷணம் **தீபக்த்யாதி குணார்ணவம்.** ஸ்ரீராமனாக அவதரித்திருந்த அக்காலத்திலே ஸுக்ரீவன் காலிலே குனிந்ததுபோலவே லவணார்ணவத்தின் காலிலும் குனிந்தமை யுத்தகாண்ட ப்ரஸித்தம். "ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி" என்ற விபீஷணாழ்வானுடைய வாக்கின்படி லவணார்ணவத்தை நோக்கிச் சரணாகதி பண்ணியிருந்து அங்கும் மநஸ்தாபம் மிகுந்தது. அக்கடலரசன் முகங்காட்டிற்றிலனாக, மிகவும் சீறிச் சிவந்து "**சாபமாநய ஸௌமித்ரே!......ஸாகரம் சோஷயிஷ்யாமி**"—லக்ஷ்மணா! வில்லையும் கொடிய அம்புகளையும் கொண்டுவா; இதோ கடலை வெறுந்தரையாக்கிவிடுகிறேன் என்று கூறி நிக்ரஹத்திலேயன்றோ துணிந்து நின்றது. சரணாகதி பண்ணினவிடத்திலே இது தகுமோ? அப்படியான குறைதீர அந்த லவணார்ணவத்தைவிட்டு தீபக்த்யாதி குணார்ணவத்தை அடிபணிந்து வாழப் பார்க்கிறபடி. ஞானபக்தி விரக்திகளுக்குக் கடலான மாமுனிகளை வணங்குகின்றேனென்கை.

3. இனி மூன்றாவது விசேஷணம் **யதீந்த்ரப்ரவணம்.** இப்போது ஸ்ரீரங்கநாதனாயிருக்கின்ற பெருமானே "மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றான் அரங்கத்தரவினணையான்" என்கிறபடியே திருவேங்கடமுடையானாகவும் நின்ற நிலையிலே எம்பெருமானார்க்கு [ஸ்ரீராமானுஜர்க்கு] சிஷ்யனாயினன். "அப்பனுக்குச் சங்காழியளித்தருளும் பெருமாள்" என்று போற்றப்படுகின்ற ஸ்ரீராமானுஜரிடம் திருமலையப்பன் திருவாழி திருச்சங்கு பெற்றதனால் அந்த யதீந்த்ரரிடத்தில் சிஷ்யவ்ருத்தி கொண்டிருந்தது ப்ரஸித்தம். ஆனால் அங்கு மநஸ்தாபமொன்றும் நேரவில்லையானாலும் இராமாநுச நூற்றந்தாதியில் "தன்னையுற்றாட்செய்யுந் தன்மையினோர்" என்கிற பாட்டைத் திருச்செவி சாத்தினபின்பு 'யதீந்த்ரரிடத்திலே சிஷ்யவ்ருத்தி செய்வதிற் காட்டிலும் யதீந்த்ரப்ரவணரானார் திறத்திலே சிஷ்யவ்ருத்தி செய்வதுதான் சிறந்ததென்று தோன்றிவிட்டது. அந்தப் பாசுரத்தில், தன்னையுற்றாட் செய்வதிற்காட்டிலும் தன்னையுற்றாட் செய்யுந்தன்மையினோர் மன்னுதாமரைத்தாள் தன்னையுற்று ஆட்செய்வாரே சிறந்தவரென்று எம்பெருமானார் திருவுள்ளம்பற்றியதாக வெளியிடப்பட்டுள்ளதன்றோ. அதனால் யதீந்த்ரப்ரவணரையிறைஞ்சுகின்றே னென்கிறதாயிற்று. மணவாளமாமுனிகளுக்கு யதீந்த்ரப்ரவணரென்ற திருநாமம் சிறப்பாகக் கிடைத்ததென்றுணர்க.

4. இனி ச்லோகத்தின் ஸமாப்தி ***வந்தே ரம்யஜாமாதரம் முனிம்.*** இராமனும் கண்ணனுமவதரித்த இரண்டவதாரங்களிலும் இரண்டு முனிகளிடத்திலே சிஷ்யவ்ருத்தி செய்திருந்தானெம்பெருமான். ராமாவதாரத்தில் விச்வாமித்ரமுனிவன் பக்கலிலும் க்ருஷ்ணாவதாரத்தில் ஸாந்தீபனிமுனிவன் பக்கலிலும் சிஷ்யவ்ருத்தி செய்திருந்து அவ்விருவரிடத்திலும் வெறுப்பேயாயிற்று எம்பெருமானுக்கு. எங்ஙனேயென்னில், விச்வாமித்திரர் ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடன் மிதிலையில் ஜனகசக்ரவர்த்தியினது வேள்விச் சாலையில் புகுந்தபின் கௌதம புத்திரரும் ஜநகபுரோஹிதருமான சதாநந்தர் [பாலகாண்டம் 51-ஆம் ஸர்க்கம் முதலாக] விச்வாமித்ரருடைய பழைய கதைகளைச் சொல்லத்தொடங்கி அவர் ரஜோகுண தமோகுணங்களுக்கு வசப்பட்டுச்செய்த செயல்களையெல்லாம் சொல்லிவர, அதெல்லாம்கேட்ட 'இராமன் இப்படிப்பட்ட வொருவரையா நாம் ஆசாரியனாகக் கொண்டோம்!' என்று வெறுத்திருக்க நேர்ந்தது. கிருஷ்ணாவதாரத்தில் அவந்திகாபுரியில் வாழ்ந்துவந்த ஸாந்தீபநிமுனிவரிடத்தில் அறுபத்துநான்கு கலைகளையும் பயின்ற கண்ணபிரான் "**ஆசார்யாய ப்ரியம்தநமாஹ்ருத்ய**" என்ற உபநிஷத்தின் கட்டளையிலே குருதக்ஷிணை ஸமர்ப்பிக்கநின்றவளவிலே அம்முனிவர் "மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான்" என்கிறபடியே என்றைக்கோ பிரபாஸ தீர்த்தத்தில் விழுந்து மாண்டு போன மகனை மீட்டுத்தரவேணுமென்று வேண்ட அப்படியே கொடுத்தனன். கண்ணபிரானை ஸாக்ஷாத் நாராயணமூர்த்தியென்று அறியாதவனல்லன் ஸாந்தீபநி முனிவன். அறிந்துவைத்தும் மோக்ஷபுருஷார்த்தத்தை விரும்பாதே மகனை மீட்டுத் தருகையாகிற க்ஷுத்ர புருஷார்த்தத்தை விரும்பினபடியால் அவன் பக்கலிலும் வெறுப்பேயாயிருந்தது. இப்படி வெறுப்புக்கு இலக்கான இரண்டு முனிகளையும்விட்டு ஸமஸ்தகல்யாண குணக்கடலாய் விரக்தாக்ரேஸரரான ரம்யஜாமாத்ருமுனியை வணங்கி வாழ்கின்றேனென்றதாயிற்று.

இவ்வளவு அர்த்த விசேஷங்களைக்கொண்ட இந்த ச்லோகம் எம்பெருமான்தானே சொல்லியிருக்கவேண்டுமேயொழிய ஒரு மனுஷ்யனால் கவிசெய்திருக்க இயலாதன்றோ. எம்பெருமானது ஹ்ருதயந்தன்னிலே உறையும் விஷயங்களன்றோ இவை. இவற்றை ஏறிட்டுக்கொள்ளவும் முடியாதே பிறரொருவர்க்கு. ஆகவே இந்தத் தனியன் தெய்வ வாக்கே என்பது திண்ணமாயிற்று. ... ... ❋

# 145. மாமுனிகளின் வியாக்கியான வைபவோபந்யாஸம்

வியாக்கியான மருளிச்செய்வதில் மாமுனிகளின் திறமை ஒப்புயர்வற்றது. ஸூத்ரம் போன்ற ஸ்ரீ லோகாசார்ய திவ்யஸூக்திகளுக்கு அவதாரிகையிடுகிற அழகும், மூலத்திற்கு அர்த்தமருளிச் செய்கிற வைகரியும், ஆங்காங்கு அர்த்தங்களைப் பிண்டீகரித்து நிகமித்தருளுகிற சைலியும், மதாந்தரங்களைக் கண்டித்தெழுகினாலும்கூட ஒருவருடைய மனமும் நோகாதபடிக்கும் வீணான தூஷண பரிஹாஸங்கள் சிறிதும் புகாதபடிக்கும் எந்த இடத்தை யெடுத்தாலும் சாஸ்த்ரார்த்தமே கைகொள்கனியாம் படிக்கும் 'ஸகல சாஸ்த்ர ஸாகர பாரங்கதர் இவரொருவரே' என்று திண்ணமாக எண்ணும்படிக்கும்

மயங்கவைத்தல் முதலிய குற்றங்களுக்குச் சிறிதுமிடமில்லாதபடிக்கும் ஸ்ரீ ஸூக்திகளருளிச் செய்தவர் மாமுனிகளொருவரே.

உண்மையில், இவ்வாசிரியருடைய ஸ்ரீ ஸூக்திகளை ஸேவித்தபின்பு இன்னொருவரது வாக்கில் வாயை வைத்தால் சுவைக்கேடு தோன்றியே தீரும். பல சொல்லியென்? மற்றையோருடைய நூல்களைக்காணும்போது அவரவர்களது ஞானத்தை அளவிட்டு அறியும்படியாகவுள்ளது. மாமுனிகளின் வியாக்கியானங்களை ஸேவிக்குமளவில் மாருதியை நோக்கி இராமபிரானருளிய வாசகமே நினைவுக்கு வருகிறது. *நாந்ருக்வேத விநீதஸ்ய நாயஜுர்வேததாரிண:, நாஸாமவேதவிதுஷ: சக்யமேவம் ப்ரபாஷிதும்* நூநம் வ்யாகரணம் க்ருத்ஸ்நம் அநேந பஹுதா ச்ருதம்* இத்யாதி.

நம்மாழ்வார் தம்முடைய பெருமையைத் திருவாய்மொழியில் "துவளில் மாமணி மாடம்" "உண்ணுஞ்சோறு பருகுநீர்" முதலான பதிகங்களில் தாமே வெளியிட்டுக் கொண்டவாறுபோல, மாமுனிகள் தாமும் ஆர்த்திப்பிரபந்தத்தில் ஒரு பாசுரத்தினால் தமது பெருமையைத் தாமே அருளிச் செய்யும்படியாயிற்று நம்போல்வார் நிச்சலும் அநுஸந்தித்து உய்வதற்காக. அந்தப்பாசுரம் கேண்மின்:—

தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப் பெற்றோம்
  தேவனுறை திருப்பதியே யிருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன் கலையுணவாகப் பெற்றோம்
  மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம்
  முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்
பின்னையொன்றுதனில்நெஞ்சு பேராமற் பெற்றோம்
  பிறர்மினுக்கம் பொறுமையிலாப் பெருமையும் பெற்றோமே.

இச்செய்யுளமுதத்தை நம்முரைகொண்டு விரித்துரைத்து அன்பர்கள் நிச்சலும் களிப்பாராக.

## 146. மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்திதத்வப்ரதர்சநோபந்யாஸம்

உலகில் பேசுவதெல்லாம் பேச்சல்ல, எழுதுவதெல்லாம் எழுத்தல்ல. பட்டர் ஸ்ரீ குணரத்நகோசத்தில் "**அநாக்ராதாவத்யம் பஹுகுணபரீணாஹி**" என்று ஆரம்பித்து ஐந்து விசேஷணங்களிட்டு வாக்விலஸிதம் இப்படி இருக்கவேணுமென்றருளிச்செய்கிறார். அப்படிப்பட்ட வாக்விலஸிதம் மணவாளமாமுனிகளினுடையதேயாகும். "**பதாநாம் ஸௌப்ராத்ராத் அநிமிஷநிஷேவ்யம் ச்ரவணயோ:**" என்று அந்த ச்லோகத்தில் பட்டர் பணித்த அதிசயம் மாமுனிகளின் திவ்ய ஸூக்திகளில் தவிர வேறெங்கும் காணக் கிடைக்காது. **சொல்லமைப்பென்பதொன்றுண்டே** அது மற்றையோருடைய வியாக்கியானங்களில் ஸாதாரணமாகவேயிருக்கும். மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களில் அது **ஆச்சரியம் அற்புதம் அந்யாத்ருசம்** என்றே சொல்லத்தக்கதாக விளங்கும். இதைத் தெரிந்து கொள்வது எல்லார்க்கும் எளிதன்று. முராரி யென்கிற வொரு மஹாகவி

**“ அப்திர் லங்கித ஏவ வானரபடை: கிந்த்வஸ்ய கம்பீரதாம் ஆபாதாலநிமக்நபீவரதநுர் ஜாநாதி மந்தாசல:”** என்கிறுன். வானர முதலிகள் கடலைக் கடந்துவிட்டார்களானாலும் மேலெழச்சென்ற வவர்களுக்குக் கடலின் ஆழம் சிறிதும் தெரியாதென்றும் மந்தரமலை யொன்றே அதனையறியவல்லதென்றும் இந்த ச்லோகத்தில் கூறப்பட்டிருப்பதுபோல, ஸாரஸ்வதஸாரத்தை உட்புகுந்து மர்மஸ்பர்சியாக உணரப்பெற்றவர் கடல்சூழ்ந்த மண்ணுலகுக்குள் மணவாளமாமுனிகளொருவரேயென்று குடப்பாம்பில் கையிட் டுரைப்பர் அவருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் நன்கு ஆழ்ந்தவர்கள்.

அஸூயையினாலும் த்வேஷத்தினாலும் பலர் அவருடைய ஸ்ரீஸூக்தியமுதக் கடலில் அவகாஹிக்கப்புகுவதில்லை. அவகாஹிக்கும் பாக்யம் பெற்றவர்களிலும் பலர்



‘மணிப்ரவாள ஸ்ரீஸூக்திதானே’ என்று ஸாமான்யமாக நினைத்து மேலெழப்பார்த்துச் செல்வர்கள். **“தோஷாவலோக்ய க்ருதிந: பரிபஞ்ஜதே தம்”** என்று பட்டர் அருளிச் செய்தபடி அநுபவபாக்ய பரிபாகமுள்ளவர்கள் யாரோசில ஸூக்ருதிகளேயாவர்.

மாமுனிகளின் திவ்யக்ரந்தங்களுக்குள் தத்வத்ரய வியாக்கியானமொன்றை ஸேவிக்குங்கால்—“ஸகலசாஸ்த்ரங்களிலும் ஸ்ரீபாஷ்ய ஸூதாநிதியிலும் ஆழ அவகாஹித்த மஹாஜ்ஞானநிதி இவரல்லது வேறு எவருமில்லை” என்று சபதமிட்டுரைக்க லாம். ஞானம் என்பது வேறு, **வ்யுத்பத்தி** என்பது வேறு. அந்த வ்யுத்பத்தியானது

ஸகலதந்த்ரங்களிலும் மணவாளமாமுனிகளுக்கு மிகவும் அதிசயிக்கத்தக்கது. இதை நிரூபிக்க அவருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் பலபலவிடங்களிருந்தாலும் ஓரிடந் தன்னையே இங்குக் குறிப்பிடுகிறேன். தத்வத்ரயமென்னும் ஸ்ரீலோகாசார்ய க்ரந்தத்தில் ஈச்வரப்ரகரணத்தில் (22) "இதுக்கு ப்ரயோஜனம் கேவலலீலை" என்றொரு சூர்ணை யுள்ளது. எம்பெருமானது ஜகத்ஸ்ருஷ்டியாகிற வியாபாரத்திற்கு வெறும் லீலையே ப்ரயோஜனம் என்றபடி. ஸ்ரீபாஷ்யத்திலும் (ஸூ. 171.) ***லோகவத்து லீலா கைவல்யம்*** என்கிற ஸூத்ரத்தின் பாஷ்யத்திலே "**ஜகத்ஸர்கே லீலைவகேவலா ப்ரயோஜநம்**" என்றும் ***பரஸ்ய ப்ரஹ்மணோ லீலைவ ப்ரயோஜநம்*** என்றும் ஸ்ரீஸூக்தி விந்யாஸமுள்ளது. இதில் எந்த வித்வானுக்கும் எவ்விதமான விசிகித்ஸையும் எளிதாகத் தோன்றமாட்டாது. ஆனால் இங்கு மணவாளமாமுனிகளின் ப்ரஜ்ஞாவிசேஷம் ஆராய்ச்சி செய்யப்புகுந்தவிதம் ஊன்றி நோக்கத்தக்கது. லீலையாவது என்ன? என்று கேட்டால் அதற்குப் பொருள் சொல்லவேண்டுமே. ஒரு காரியம் செய்யுமிடத்து அப்போதுண்டாகு மொரு மனோவிநோதமொழிய பிற்பாடு வருவதொரு பலனைக் கணிசியாமல் பண்ணும் வியாபாரத்திற்கு லீலையென்று பெயர். சிறுவன் லீலைசெய்கிறானென்றால் விளையாடல் என்கிறவொரு வியாபாரத்தைச் செய்கிறானென்பதன்றோ பொருளாகிறது. ஆகவே லீலையென்பது ஒரு வியாபாரமென்று முடிந்தது. "ஸ்ருஷ்டிக்கு லீலை ப்ரயோஜநம்" என்றால் இந்த வாக்யம் ஸமந்விதமாகிறதாவென்று பார்க்கவேணும். ஸ்ருஷ்டியும் வியாபாரமாயிற்று. ஸ்ருஷ்டியாகிற வியாபாரத்திற்கு லீலையாகிற வியாபாரம் ப்ரயோஜன மென்றதாகத் தேறுகின்றது. 'ஸ்ருஷ்டிதான் லீலை' என்று ஸமாநாதிகரணமாகச் சொல்ல வேணுமேயொழிய 'ஸ்ருஷ்டிக்கு லீலை ப்ரயோஜநம்' என்று வ்யதிகரணமாக வாக்விந் யாஸம் பண்ணுவதில் ஸமந்வயம் இல்லைபோல் காண்கிறதல்லவா? ஸ்ரீபாஷ்யகாரரும் பின்னை லோகாசார்யரும் வ்யதிகரணமாக வாக்விந்யாஸம் செய்திருப்பதைக் கீழே யெடுத்துக்காட்டினோம். இது எப்படி பொருந்தும்? என்கிற சங்கை தோன்றுவதே ஸாமான்ய ஞானிகளுக்கு அரிது. தத்வத்ரயவியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் இந்த சங்கையை ஒருவாறு உத்தாபனம்பண்ணி ஸமாதானமருளிச் செய்திருக்குமழகு ஆழ்ந்த ஞானம் படைத்தவர்களுக்கே அவகாஹிக்க நிலமானது. அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் காண்மின் ;—

> "**லீலையாவது தாதாத்விகரஸமொழிய காலாந்தரத்தில் வருவதொரு பலத்தைக் கணிசியாமல் பண்ணும் வ்யாபாரமேயாகிலும் "இதுக்குப்ரயோஜனம்" என்று ஸ்ருஷ்டிரூப வ்யாபாரத்துக்கு ப்ரயோஜனமாகச் சொல்லுகையாலே தாதாத்விகரஸ மாத்ரத்தைச் சொல்லிற்றாகக் கடவது.**" என்பது மாமுனிகளின் அமுதமொழி.

இதில் "லீலையாவது......பண்ணும் வியாபாரமேயாகிலும்" என்கிற வாக்யம் வெகு கம்பீரமானது. "பண்ணும் வ்யாபாரமாகையாலே *இதுக்குப்ரயோஜனம் கேவலலீலை* என்கிற மூல ஸ்ரீஸூக்தி ஸமந்விதமாக மாட்டாதாகிலும்" என்பது இங்கு விவக்ஷிதம். மூல ஸ்ரீஸூக்தி அஸமஞ்ஜஸமாயிருக்கிறது என்பதைத் தம்திருவாக்கினால் வெளியிடக் கூசி வாக்யமருளிச்செய்கிறவழகு என்போல்வார் எடுத்துரைக்கக் கூடியதோ? "அகில புவந ஜந்மஸ்தேம பங்காதிலீலே" என்றும் "ஜகதுத்பத்தி ஸ்திதி ஸம்ஹார அந்த:ப்ரவேச நியமநாதிலீலம்" என்றும் ஸமாநாதிகரணமாகவே அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யகாரருங்கூட

"ஜகத் ஸ்ருஷ்டௌ லீலைவ ப்ரயோஜநம்" என்று வ்யதிகரணமாக அருளிச்செய்தபடியால் அதையடியொற்றிப் பிள்ளை லோகாசார்யர் (மூலத்தில்) 'இதுக்குப்ரயோஜநம் கேவலலீலை' என்று அருளிச்செய்திருந்தாலும் இது சிறிது திருத்தியமைக்கவேண்டிய ஸ்ரீஸூக்தியேயாகும்; "இதுக்கொரு ப்ரயோஜனமில்லை; இது கேவலலீலையே" என்று வாக்ய ஸந்நிவேசமிருந்திருக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றிய மாமுனிகள் அதைப் பூப்பறித்தாப்போல் காட்டியிருக்கிறவிதம் சாஸ்த்ர வ்யுத்பத்தியில் ஆழ்ந்திருக்குமவர்களுக்கே நிலமாகக்கூடியது. மாமுனிகள் காட்டியருளிய ஸமாதானம் எத்தகைத் தென்னில்; தற்காலத்தில் தோன்றும் ரஸத்திற்கு ஹேதுவான வ்யாபாரத்திற்குத்தான் லீலையென்று பெயர்; ஆனால் இங்கு மூலம் ஸமந்விதமாவதற்காக அவ்வர்த்தத்தைச் சிறிது குறைத்துக்கொள்ளவேண்டும். தற்காலத்தில் தோன்றும் ரஸத்துக்கு ஹேதுவான வ்யாபாரம் என்கிறவரையில் போகாமல் தற்காலத்தில் தோன்றும் ரஸம் என்றமட்டில் லீலாபதார்த்தமாகக்கொண்டால் மூலம் ஸமந்விதமாய்விடுகிறது என்று நிரூபித்தருளினாராயிற்று. இது லாக்ஷணிக நிர்வாஹம், ஔபசாரிகநிர்வாஹம் எனப்படும்.

"ஜகத் ஸ்ருஷ்டௌ லீலைவ ப்ரயோஜநம்" என்கிற ஸ்ரீ பாஷ்யகாரருடைய திவ்யஸூக்தியை ஒரு சதுச்சாஸ்த்ரவித்வானிடத்தில் கொடுத்து சங்கையை வெளியிட்டு ஸமாதானம் பண்ணச் சொன்னால் வெகு ச்ரமப்பட்டு நாலு நாழிகை வாக்யராசிகளைப் பரப்பிக் காடுபாய்ந்து ஏதோ கூறுவர். சுருக்கமாக அதை எழுதிக்கொடுக்கவேணுமென்று கேட்டாலோ ஒரு வித்வானாலும் அது த்ருப்திகரமாகச் செய்யமுடியாதென்பதை ஸத்தியமாகச் சொல்லுகிறேனடியேன். மாமுனிகள் "**தாதாத்விகரஸமாத்ரத்தைச் சொல்லிற்றாகக் கடவது**" என்ற மிகவழகியவொரு சிறு வாக்கியத்தில் முடித்தருளினது அவரொருவர்க்கே அஸாதாரணமான பாண்டித்ய ப்ரகர்ஷத்திற்குக் குன்றிலிட்ட விளக்காகும். இதை இங்கு நாம் எடுத்துக்காட்டியது—மாமுனிகள் இப்படி ஆழ்ந்து காண்பவர் என்பதற்காக மாத்திரமல்ல; இங்ஙனே நலிந்து நிர்வஹிக்கக்கூடிய ஸ்ரீஸூக்திகளையருளிச் செய்யுமியல்பு மாமுனிகளிடம் சிறிதும் காணக்கிடைக்காது என்பதற்காகவுமென்க. **விசதவாக்சிகாமணி** பட்டம் இவரொருவர்க்கே தகும்.

ஆராய்ச்சியில் தலைசிறந்த இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகள் மஹாசாஸ்த்ரஜ்ஞர்கள் உள் குழையத்தக்கவை மாமுனிகளின் ரஹஸ்ய வியாக்யான க்ரந்தங்களிலே நிதியாக அமைந்திருப்பதை உற்றுநோக்குங்கால் 'நீறுபூத்த நெருப்பு' என்றொரு பழமொழியுண்டே, அது மாமுனிகளைத்தான் சேருமென்பர் பெரியோர். ஸ்ரீஸூக்தியோ தமிழ்; அர்த்தங்களோ கஹநசாஸ்த்ரார்த்தங்கள். அருளிச்செய்த மஹாசார்யரோ டம்பமென்பது சிறிதுமில்லாதவர். அவருடைய ஞானபூர்த்தியும் ஆத்மகுண பூர்த்தியுமன்றோ அழகிய மணவாளனை அடிபணியச்செய்தன. இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த பேராசிரியரை வழிபடும் மரபில் தோன்றினோமென்கிற பாக்ய விசேஷத்தை நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்துகுமடியேனுக்கு. ... ... ... ... ❀

# 147. மணவாளமாமுனிகளின் அஷ்டதிக்கஜோபந்யாஸம்

மணவாளமாமுனிகளின் சிஷ்ய வர்க்கங்களில் எண்மர் தலைமைபெற்று **அஷ்டதிக்கஜங்க**ளென்கிற சிறப்புப் பெயரும் பெற்று உலகம்போற்ற நின்றார்கள். அவர்களது திருநாமம்:—1. வானமாமலை ஜீயர், 2. பட்டர்பிரான் ஜீயர், 3. திருவேங்கட ராமாநுஜ ஜீயர், 4. கோயிலண்ணன், 5. பிரதிவாதி பயங்கரமண்ணன், 6. எறும்பியப்பா 7. அப்பிள்ளை, 8. அப்பிள்ளார். இவர்களுள் 'எறும்பியப்பா' என்பவர் வந்து ஆச்ரயித்த விதம் வெகு விசித்திரமானது. சோளஸிம்ஹபுரமென்று பிரசித்தமான திருக்கடிகைக்கு அருகிலுள்ள **எறும்பி**யென்னும் அக்ரஹாரத்திலே தோன்றி தேவராஜாசார்யரென்று திருநாமம் பூண்டிருந்த இவர் மஹாவித்வான். இவர் ஒருகால் ஸ்ரீரங்கத்திற்குவந்து அங்கே தம் உறவினரான அண்ணனது திருமாளிகையில் தங்கியிருக்கையில் அவரோடு கூட மணவாளமாமுனிகளின் காலக்ஷேப கோஷ்டியிலும் அந்வயிக்கப் பாக்கியம் பெற்றார். அப்போது மாமுனிகளின் ஸர்வதோமுகமான ப்ரஜ்ஞாவிசேஷத்தைக் கண்டுகளித்தும், அவரது திருவடிகளில் ஆச்ரயிக்க பாக்யபரிபாகம் விளையாமலே அங்கு தீர்த்த ப்ரஸாதங்களும் பெறுமலே தம்மூருக்குத் திரும்பிவிட்டார். தம் திருமாளிகையிலுள்ள பெருமாளுக்குத் திருவாராதனம் கண்டருளப் பண்ணப் புகுந்து கோவிலாழ்வார் திருக்காப்பை நீக்கப் பார்க்கையில் திருக்காப்பு திறக்கப்பெற்றதில்லை. பல வுபாயங்கள் செய்துபார்த்தும் ஒருபடியாலும் திறக்கப்போகாமையாலே மிக வருந்தி அமுது செய்யாமலே, 'இது என்ன அபசார பலமோ!' என்று மனம் நொந்து மூர்ச்சித்துக் கிடந்தார்.

அன்றிராக்கனவில் அவருடைய ஆராதனப் பெருமாளான சக்ரவர்த்தி திருமகன் எதிரேவந்து தோன்றி 'நமக்கு ஆருயிராய் உலகுக்கு ஒருயிரான மணவாளமாமுனிகளின் திருவடிகளிலே பணியாமல் மீண்டு வந்திராதலால் உமக்கு நாம் கதவு திறந்திலோம்; ஆதிசேஷன் தானே மாமுனிகளாகவந்து அவதரித்தமை அறிவீராக; அவரது திருவடிகளிற் சென்று ஆச்ரயித்துத் தூய்மைபெற்று வந்தாலன்றி உமது கையில் நாம் திருவாராதனம் கொள்வதில்லை' என்று சொல்லி மறைய, அப்பாவும் துயிலெழுந்து மிக வியந்து இவ்வதிசயத்தை அன்பர்களுக்கு அறிவித்து அப்போதே புறப்பட்டுத் திருவரங்கம்சென்று சேர்ந்து மாமுனிகளின் திருவடிகளிலே வேரற்ற மரம்போலே விழுந்து இச்செய்தியை விண்ணப்பம்செய்து அபராதக்ஷாமணம் செய்துகொண்டு 'இனி அடியேனுக்கு இத்திருவடி நிழலொழியப் புகலிடம் வேறொன்றில்லை; நெறிகாட்டி நீக்கப்பாராதே அடியேனை அத்தாணிச் சேவகத்திற்கு ஆட்படுத்திக் கொண்டருளவேணும்' என்று மிகவும் பிரார்த்தித்து மாமுனிகளின் பரிபூர்ண அநுக்ரஹத்தைப்பெற்று அன்று தொடங்கி ஸகலார்த்தங்களும் சிக்ஷிக்கப்பெற்றுக் கிருதார்த்தரானார். இவர் பரமபக்தி தலையெடுத்து மாமுனிகள் விஷயமான காவ்யம் நாடகம் சம்பூ ஸ்தோத்ரங்கள் பலவும் பணித்தார். இவர் தம்முடைய இல்லத்தில் பரம்பரையாக ஆராதிக்கப்பட்டுவந்த சக்ரவர்த்தி திருமகன் ஸ்தானத்தில் மணவாளமாமுனிகளையே எழுந்தருளப் பண்ணி ஆராதித்துவந்தார்.

# 148. மைஸூரனந்தாழ்வான் கண்ட பெருமையுபந்யாஸம்

மணவாள மாமுனிகளை எம்பெருமானாருடைய அபராவதார மென்று அஷ்ட திக்கஜாசார்யர்களனைவரும் ஸாக்ஷாதநுபவத்தினால் நிர்ணயித்துப் பல பாசுரங்களும் ச்லோகங்களும் பணித்துள்ளார்கள். அவை ஜகத் ப்ரஸித்தமானவை. அவ்வளவு ப்ரஸித்தமல்லாமல் வித்வத் கோஷ்டியிலேயே ப்ரஸித்தமானதொரு விஷயம் இங்கு விஜ்ஞாபிக்கப்படுகிறது. திருநாராயணபுரத்தில் மண்டயம் அனந்தாழ்வாரென்று ஸுப்ரஸித்தரான மஹா வித்வான் எழுந்தருளியிருந்தார். மைஸூர் அனந்தாழ்வானென்றும் அவர் வழங்கப்படுவதுண்டு. **வேதாந்த வாதாவளி** யென்று ஜகத்ப்ரஸித்த



மான மஹா க்ரந்தரத்னங்களை யருளிச் செய்தவர் இவரே. இவர் ஜீவித்திருந்த காலம் மிகவும் ஸமீபமானதே. (அதாவது சென்ற நூற்றாண்டில் எழுந்தருளியிருந்தவர்.) இவருடைய திருவுருவப்படம் ஸேவிக்கலாகிறது. அவருடைய சதுச் சாஸ்த்ர பாண்டித்ய ப்ரபாவங்களைக் கொண்டாடாதவர்களில்லை. அவரிடத்தில் ஸாமாந்ய சாஸ்த்ரங்கள் பயின்ற வித்வான்களின் சிஷ்யர்கள் [பல மதஸ்தர்கள்] இற்றைக்கும் ப்ரஸித்திபெற்று விளங்குகிறார்கள். இம்மஹாவித்வான் மைஸூர் ஸ்ரீபரகாலமடத்தில் ஆஸ்தானவித்வானாக அமர்த்தப்பட்டிருந்தார். அங்கு இதர ஸம்ப்ரதாயஸ்தர்களான பல வித்வான்களிடையே இவரொருவரே ஸ்ரீமத் வரவரமுனி ஸம்ப்ரதாயஸ்தராக விளங்கிவந்தார். இவரையும்

ஸம்ப்ரதாயஸ்தராக்கிக் கொள்ளவேணுமென்று அந்த ஸ்ரீபரகால மடாதிபதி ஸ்வாமிக்குத் தோன்றி அந்த அவாவை அடிக்கடி தெரிவித்துவர, இவர் அதற்கு இடங்கொடாதுவந்தார். கடைசியாக, விசேஷ த்ரவ்யோபபத்திகளையும் ஜாகீர் ஜமீன்களையும் கொடுப்பதாகச் சொல்லி நிர்ப்பந்திக்கவே இவரும் சிறிது இசைவுகாட்டியிருந்தார். 'நாளை காலைமுதல் திருமண்காப்பை மாற்றிக்கொள்வது' என்று ஒருநாள் இவர் எண்ணியிருக்கையில் அன்றிரவு கனவிலே எம்பெருமானார் ஆதிசேஷரூபேண இவர்க்கு ஸேவை ஸாதித்து உடனே மணவாளமாமுனிகளான திருக்கோலத்துடனும் ஸேவைஸாதித்து 'நாமே அவர், அவரே நாம்' என்று சொல்லி மறைந்தருளினர். இவரும் துயில் விழித்தெழுந்து எம்பெருமானாருடைய கருணைத் திறத்திற்கு மிகவும் வியந்து தாம் எண்ணியிருந்த எண்ணத்திற்காக மிகவும் அநுதபித்து காலையனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஒரு ச்லோகத்தையெழுதி அந்த மடாதிபதி ஸ்வாமி ஸன்னிதியிலே ஸமர்ப்பித்தார். அந்த ச்லோகமாவது :—

> சேஷ: ஸ்ரீமாந் நிகமமகுடயுக்மரக்ஷாப்ரவ்ருத்த:
> ஸ்ரீமத்ராமாவரஜமுநிதாம் ஸௌம்யஜாமாத்ருதாஞ்ச,
> விந்தந் த்ருப்யத்விமத படலீபாடநோத்தாம ஸூக்தி:
> பூயாத் பவ்யப்ரதிதமஹிமா ச்ரேயஸே பூயஸே ந: —என்பது.

அந்த ஸமயத்தில் அந்த அனந்தாழ்வான்ஸ்வாமி **ந்யாய பாஸ்கர**மென்கிற மஹா க்ரந்தமெழுதிக்கொண்டிருந்தார். அதில் இரண்டாவது பரிச்சேதமெழுதிவருகையில் இந்த மஹாநுக்ரஹம் நேர்ந்தபடியினால் அந்த மஹாக்ரந்தத்தோடுகூடவே இவ்வநுக்ரஹ விசேஷமும் சாச்வதமாக உலகில் விளங்கவேணுமென்று கருதி மேலே குறித்த ச்லோகத்தை அந்த க்ரந்தத்தில் இரண்டாவது பரிச்சேதத்தில் விந்யாஸம் செய்தருளித் தாமே அச்சிட்டு வெளியிட்டார். இந்த சுலோகத்தின் கருத்தாவது—உபய வேதாந்தங்களையும் காத்தருளவேணுமென்று திருவுள்ளங்கொண்ட திருவனந்தாழ்வான் எம்பெருமானாராகத் திருவவதரித்து ஸம்ஸ்க்ருதவேதாந்த குத்ருஷ்டிகளை நிரஸித்தும், மணவாளமாமுனிகளாகத் திருவவதரித்து த்ராவிட வேதாந்த குத்ருஷ்டிகளை நிரஸித்தும் இப்படி உபயவேதாந்த ப்ரதிஷ்டாபனம்செய்து பெருமைபெற்றனன். அத்திருவனந்தாழ்வான் நமக்கு ஸகலவித நன்மைகளும் அளித்தருளவேணுமென்பதாம். ...

## 149. திருவாய்மொழி நூற்றந்தாதியின் பெருமையுபந்யாஸம்

'திருவாய்மொழி நூற்றந்தாதி மணவாளமாமுனிகளருளிச்செய்தது' என்றாலே போதும் இதன் பெருமையையுணர. உலகில் தோன்றியுள்ள அந்தாதி வெண்பா நூல்களில் நிகரற்ற நூல் இஃதொன்றேயாம். ஆசிரியர்களருளிச்செய்த எந்த நூலையெடுத்துக்கொண்டாலும் 'இது நிகரற்றது' 'இஃது ஒப்பற்றது' என்றே சொல்லும்படியாயிருக்கும். அப்படிச் சொல்லுவதன்று இது. இதன் சிறப்பை யாவருமிசையும்படி நன்கு நிரூபிக்கிறேன் கேண்மின். திருவாய்மொழியாயிரமும் அந்தாதியே; இயற்பாவில் எட்டு திவ்வியப் பிரபந்தங்கள் அந்தாதியே. கண்ணிநுண் சிறுத்தாம்பு அந்தாதியே; பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் தம்தம் திருமொழிகளில் ஒவ்வொரு பதிகம்

அந்தாதி பாடியுள்ளார்கள். கிம் பஹுநா? உலகில் பல்லாயிரம் அந்தாதிப் பிரபந்தங்கள் தோன்றியுள்ளன. அவை யெல்லாவற்றினுடையவும் ப்ரக்ரியை எப்படிப்பட்டதென்றால் செய்யுளைத் தொடங்கவேண்டியது நூலாசிரியர்களின் தம்தம் இஷ்டத்தைப் பொறுத்தது. செய்யுளை முடிக்கவேண்டியதும் தங்கள் தங்கள் இஷ்டத்தைப் பொறுத்தது. தங்களிஷ்டப்படி முடித்த சீரையோ சொல்லையோ எழுத்தையோ தொட்டுக்கொண்டு மேற்பாட்டு ஆரம்பம் செய்வதென்பதொன்றே அந்தாதி பாடுகிறவர்களனைவருங்கொண்ட நியதியாகும். (உதாரணம்.) பொய்கையாழ்வார் *வையம் தகளியா* என்று தொடங்கினார். (வையம்) என்று ஆரம்பம் செய்தது அவரிஷ்டமே. கடையடியை "இடராழி நீங்குகவே யென்று" என்று முடித்தார். இதுவும் அவரிஷ்டமே. "இடராழி நீங்குகவேயிங்கு" என்றாலும் கேள்வியில்லை. அந்தாதிபாடுவார் வெண்பாவிலோ கட்டளைக் கலித்துறையிலோ முடிக்குஞ்சொல்லை அவரவர்களிஷ்டப்படி பாடலாம்—பாடியிருக்கிறார்கள் என்பது நிர்விவாதம்.

இனி மணவாளமாமுனிகளின் திருவாய்மொழி நூற்றந்தாதியின் அமைப்பைப் பற்றிக் கேண்மின். நம்மாழ்வார் "**உயர்வற**" என்று திருவாய்மொழி தொடங்கினபடியால் அதற்குக் கட்டுப்பட்டு 'உயர்வே பரன்படியை' என்று தம்முடைய அந்தாதியைத் தொடங்கினார். (திருவாய்மொழியில்) அடுத்த பதிகம் (வீடுமின் முற்றவும்) என்று தொடங்குவதால் (மாமுனிகள் தம்முடைய அந்தாதி) அத்தோடும் சேரும்படி "வேராகவே விளையும் **வீடு**" என்று (வீடு) என்பதையே கடைச் சீராகவைத்துப் பாசுரத்தை முடித்தார். அதற்கு மேற்பாட்டைத் தம் இஷ்டப்படி தொடங்காமல் தமது நூலுக்கும் அந்தாதியடைவு குலையாதபடிக்கு (வீடுசெய்து) என்றே தொடங்கினார். நூறு பாட்டும் இந்த நிபந்தனைக்குக் கட்டுப்பட்டே அவதரித்துள்ளன. செய்யுளுக்குரிய மோனையின்பமும் எதுகையின்பமுங்கூட தம்மிஷ்டத்தைப் பொறுத்ததல்லவென்பதை உற்றுநோக்கவேணும். (வீடு) என்றதற்கு மோனை சேரும்படி (வேராகவே) என்ன வேண்டிற்று. (வேராக) என்றதற்கு எதுகை சேரும்படி முன்னடியில் (வாராமல்) என்னவேண்டிற்று. இவ்வளவோடுங்கூட ஒவ்வொரு பதிகத்தின் ஸாரத்தையும் ஒவ்வொரு வெண்பாவில் அடக்கவேண்டிற்று. பாட்டுத்தோறும் நம்மாழ்வார் திருநாமமும் தவறாது வரவேண்டியதாயிற்று. இத்தனை நிர்ப்பந்தங்களைக்கொண்டு பாடின அந்தாதி நூல் இஃதொன்று தவிர மாநிலத்தில் வேறொன்று கிடையாது. உண்டெனில் காட்டலாம். "மாமுனிகள் திருவாய்மொழிக்கு இங்ஙனே நூற்றந்தாதி அமைத்தார்; நாம் பெரிய திருமொழிக்கு இங்ஙனே ஒரு பிரபந்தமிடுவோம்" என்று சங்கற்பித்து ஒரு மகாகவி முயன்றால் அப்போதுதான் இதன் அருமைபெருமை தெரியும்.

இந்த ப்ரஸங்கத்திலே திருவாய்மொழி நூற்றந்தாதியிலிருந்து ஒரு பாசுரத்தை யெடுத்துக்கொண்டு அடுத்த உபந்யாஸம் விஜ்ஞாபிக்கலாகிறது. அதாவது, அதில் ஐந்தாவது பாசுரம் "வளமிக்கமால்பெருமை" இத்யாதி. இப்பாசுரம் திருவாய்மொழியில் (1-5.) *வளவேழுலகின் முதலாய* என்று தொடங்கும் பதிகத்தின் ஸாரப் பொருளுரைப்பது. ... ... ... ❋

# 150. பகவத் ஸௌசீல்ய விவரணோபந்யாஸம்

(*வளம்மிக்க மால்பெருமையென்கிற திருவாய்மொழி நூற்றந்தாதிப் பாசுரங்கொண்டு )

ஒரு பெரியவரை நாம் விரும்பியழைத்து, அவர் நம்முடைய அழைப்புக்கிணங்கி ஆதரத்தோடு வந்து சேர்ந்தால் நாம் செய்யவேண்டியதென்ன? திவ்யாஸனத்திலே அமர்த்தி யதாசக்தி உபசாரங்கள் செய்வது கடமையாகும். அங்ஙனே செய்யாமல் "ஸ்வாமிந்! தேவரீர் மிகப்பெரியீர்; அடியேனோ நீசனேன் நிறையொன்றுமிலேன்; தேவரீருக்கும் இந்த அற்பனுக்கும் சேர்த்தி பொருந்தாது" என்று சொல்லி அருகே நில்லாமல் அப்பால் செல்லப்பார்த்தால், வந்த பெரியவர்க்கு இது அவமரியாதை யாகுமன்றோ. மறுபடியும் அவருடைய முகாவலோகனம்செய்ய ப்ரஸக்திதானுண்டோ? ஸாதாரண மனிதர்கள் விஷயமே இப்படியிருந்தால் "மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்கும் தேவாவோ" என்கிறபடியே ஒத்தாரும் மிக்காருமற்ற பராத்பரனை எம்பெருமானை மிகவிரும்பியழைத்து, அவன் வந்தவாறே அவனோடு கலந்து பரிமாறித் தாமும் மகிழ்ந்து அவனையும் மகிழ்விக்க வேண்டியிருக்க, அந்த வழியைவிட்டு 'உன் பெருமை எங்கே? என்சிறுமை எங்கே?' என்று இருய்த்தல் தகுமோ? நம்மாழ்வார் திருவாய் மொழியில் (1-4.) *அஞ்சிறைய மடநாரையில் தூதுவிட்டழைத்து, எம்பெருமான்வரக் கொள்ள (1-5.)* வளவேழுலகு பதிகத்தில் பின்வாங்குகிறாரே, இதை என்னென்பது? எம்பெருமானுக்கு இது பெரிய அவமரியாதையல்லவா? என்று சங்கிக்க நேரும். மணவாளமாமுனிகள் நூற்றந்தாதியில் "தளர்வுற்று நீங்கநினை மாறனை மால் நீடிலகு சீலத்தால் பாங்குடனே சேர்த்தான் பரிந்து" என்றருளிச்செய்தபடி எம்பெருமானுடைய சீல குணத்தை யநுபவிக்க விரும்பிய ஆழ்வார் அக்குணம் ப்ரஸரிப்பதற்குச்செய்த வழி இது. விளக்கின் பெருமையைக்காட்ட இருள் வேண்டியிருப்பதுபோல சீல குணத்தின் பெருமையைக்காட்ட நைச்சியாநுஸந்தானமும் அதனால் இருய்க்கையும் இன்றியமையாத தாயிற்று. சீலம் அல்லது ஸௌசீல்யமாவது என்ன? என்னில்: "மஹதோ மந்தைஸ் ஸஹ நீரந்த்ரேண ஸம்ச்லேஷ:—ஸௌசீல்யம்" எனப்படுகிறது. ராமக்ருஷ்ண த்யவதாரங்களில் குஹன், சபரி, கூனி, மாலாகாரர் போல்வாரோடு கலந்து பரிமாறின படியை நினைப்பது. அவர்கள் சீல குணத்திற்கு இலக்கானார்களேயொழிய, இக்குணத்தை உள்குழைந்து அநுபவிக்கும் பாக்கியம் அவர்களுக்கு அமைந்ததில்லை; இப் பாக்கியம் ஆழ்வாரொருவர்க்கே அஸாதாரணமாயிற்று.

நைச்யாநுஸந்தானத்தாலே இருய்த்த ஆழ்வாரை எந்தவுபாயத்தாலே எம் பெருமான் தன்னோடு சேர்த்துக் கொண்டானென்னில்; "ஆழ்வீர்! நீர் இங்ஙனம் நம்முடைய மேன்மையைப் பார்த்து நெகிழ நினைத்தல் தகுமோ? நம்முடைய மேன்மையை மட்டுமோ நீர் பார்ப்பது? நாம் எல்லாரோடும் கலந்து தாழநின்று பரிமாறுகிற சீல குணமுடையோமல்லவா? "தாவியன்றுலக மெல்லாம் தலைவிளாக் கொண்டவெந்தாய்!" என்றழைக்கும்படியாக உலகளக்கின்ற வியாஜத்தாலே எல்லார் தலையிலும் அடியிட்டுக் கலந்து பழகின விருத்தாந்தத்தை நீர் அறியாதவரோ? எனக்கு நீர் தூதுவிடுவதற்கு முன்னே "பெருநிலங்கடந்த நல்லடிப் போது" என்று பேசி யிருப்பதை மறந்தீரோ? இப்படிப்பட்ட சீலவானை என்னிடத்திலா நீர் அகலப்

பார்க்கிறது? என்று வினவ, ஆழ்வார் (பா. 3ல்) *திசைகளெல்லாம் திருவடியால் தாயோன்* என்று சொல்லி ஒருவாறு உள்ளந்தேறி நின்றார். ஆனாலும் மீண்டும் அகலுகையிலே ஒருப்பட்டார். அதுகண்ட எம்பெருமான் இவரை நன்றாகத் தெளிவிக்க வேண்டுமென்று ஆழ்வாரோடே விஸ்தாரமாக ஸம்பாஷிக்கத் தொடங்கினான். அது இப்பதிகத்தில் *உண்டாயுலகேழ் முன்னமே* என்கிற எட்டாவது பாட்டிலுள்ளது. அதனைச் சிறிது விவரிப்போம்.

(எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்கும் ஸம்பாஷணை)

**எம்பெருமான்** - வாரீர் ஆழ்வீர்!, என்னுடைய செயல்களெல்லாம் உமக்கு நன்றாய்த் தெரியுமன்றோ. நான் ஒருகாலத்தில் உலகங்களெல்லாவற்றையுமெடுத்து



வயிற்றினுள்ளேயடக்கிவைத்துப் பிறகு வெளிநாடு காண உமிழ்ந்தேனென்பதும், திருவாய்ப்பாடியில் வெண்ணெய்விழுங்கினேனென்பதும் உமக்குத் தெரியுமன்றோ.

**ஆழ்வார்** - ஏன் தெரியாது? நன்றாகத் தெரியும். திருவாசிரியத்தில் *நளிர்மதிச் சடையனும்* என்கிற பாசுரத்தினால் உலகுண்ட கதையை விரிவாக அநுபவித்திருக்கிறேனே; திருவாய்ப் பாடியில் வெண்ணெய் விருத்தாந்தமோ என்னை ஆறுமாஸம் மோஹிக்கப் பண்ணிற்று. ஆகவே இவற்றை நன்கறிவேன். அதைப்பற்றி என்ன?

**எம்பெருமான்** - ஆழ்வீர்! இவ்விரண்டு காரியமும் நான் எதற்காகச் செய்தேன்? தெரியுமா? உலகங்களையுண்டுமிழ்ந்து வெண்ணெயுண்டது எதற்காக? ஆராய்ந்து சொல்லும், பார்ப்போம். நீர் மஹா மேதாவியல்லவா? சொல்லும்.

**ஆழ்வார்** - உன்னுடைய காரியங்களுக் கெல்லாம் காரணமறிவாரார்? ஏதோ உன் திருவுள்ளத்தில் தோன்றினபடியே நீ காரியங்கள் செய்து போருகிறாய்? அவற்றின் காரணம் உனக்கே தெரியுமோ தெரியாதோ? எனக்கென்ன தெரியும்?

**எம்பெருமான்** - உமக்குத் தெரியாதாகில் நான் சொல்லக் கேட்கலாமன்றோ? சொல்லுகிறேன் கேளும். பிரளயங் கொள்ளாதபடி உலகங்களை வயிற்றிலடக்கி நோக்கினேன்; பிரளயம் நீங்கினவாறே அவ்வுலகங்களை வெளிப்படுத்தினேன்; உள்ளடக்கி யிருந்த உலகங்களில், வெளிப்படாமல் உள்ளேயே மிச்சமாய் நின்று விட்டதுவதேனு மிருந்தாலுமிருக்கக்கூடும்; அந்த மண்ணுங்கரைந்து வெளிவந்து விடட்டுமென்றே திருவாய்ப்பாடியில் வெண்ணெயும் நெய்யுமுண்டேன் காணும். (இதுவிரேசனம்) என்றான்

**ஆழ்வார்** - இது யாரை மயக்குகிற வார்த்தை? உலகமுண்டுமிழ்ந்தது எப்போதோ போயிற்று; வெண்ணெயுண்டது மற்றெப்போதோ ஆயிற்று. அதற்குமிதற்கும் என்ன ஸம்பந்தம்? திண்ணைக்குத் தேள் கொட்ட, தீர்த்தமிடாவுக்கு நறிகட்டிற்று என்னுமா போலே நல்ல கார்யகாரண பாவம் சொல்லுகிறாய் பிரானே! இது வெகு நன்றாயிருக்கிறது.

**எம்பெருமான்** - 'நான் வெண்ணெயுண்டதற்கு என்ன காரணமிருக்கும்? நீர் சொல்லும்' என்றால் எனக்குத் தெரியாதென்கிறீர்; உள்ள காரணத்தை நானே சொன்னாலும் இது அஸம்பாவிதமென்கிறீர்; நான் சொல்லுகிற காரணம் தவறாயிருந்தால் நீர்தாம் ஆலோசித்து ஒரு காரணம் சொல்லலாகாதோ? மஹாமேதாவியான நீர் சொன்னால் அதை நான் அவசியம் இசைந்து தீருவேன். சொல்லும் கேட்போம்.

**ஆழ்வார்** - ஆச்ரிதர்களின் ஸம்பந்தம் பெற்ற வஸ்துவே உனக்குத் தாரகமாதலால் ஆச்ரிதஸம்பந்தம்பெற்ற வெண்ணெயையுண்டாயத்தனை; இதுதான் சொல்லக்கூடிய காரணம்; நீ சொல்லுகிற காரணம் மாய மயக்கு மயக்கே.

**எம்பெருமான்** - ஆழ்வீர்! ஆச்ரிதர்களின் வஸ்துவே எனக்குத் தாரகமென்பதை நீர் நன்கு அறிந்திருக்கிறீரன்றோ? உம்முடைய உடலும் எனக்கு அந்த வெண்ணெய் போன்றதே காணும். இதுவே எனக்குத் தாரகங்காணும். ஆகவே நீர் உம்மைக் கொண்டு அகல்வீராகில் திருவாய்ப்பாடியில் வெண்ணெயூண் விலக்கினார் புக்கலோகம் புகுவீரத்தனை. இனி நம்மை அணுகப் பாரும்.

இங்ஙனம் எம்பெருமான் சோதிவாய் திறந்து சொல்லிவிட்ட பின்பு மேலே ஒன்றும் வாய் திறக்க வழியில்லாத ஆழ்வார் எம்பெருமானது கருத்தைத் தாம் அறிந்தமை தோற்றவும், மேலே காட்டின ஸம்வாதம் வெளிப்படவும் பாங்காக *உண்டாயுலகேழ் முன்னமேயென்கிற பாசுரமருளிச் செய்யுமழகு அற்புதம். இவ்வளவு ஆழ்ந்த கருத்தை அழகாகக் கண்டுபிடித்து வியாக்கியானங்களை அமைத்தருளின பூருவாசாரியர்களின் மதிக்கு மண்விண்ணெல்லாங் கூடியும் விலை போருமோ?

**உண்டாயுலகேழ் முன்னமே** யென்றதில் **முன்னமே**யென்றதனால் வெண்ணெ யுண்டதற்கு எம்பெருமானியம்பின காரணம் அஸம்பாவிதமென்று ஆழ்வார் மறுத்தமை காட்டப்பட்டது. **நெய்யூண்மருந்தோ** என்றதனால் ‘வெண்ணெய் நெய் முதலான வற்றையுண்டது மண் கரைவதற்கு மருந்தாக’ என்று எம்பெருமான் கூறினனென்பது விளங்கும். **மருந்தோ?** என்ற ஓகாரம் அன்று என்ற பொருளைத் தரும். ...

## 151. பயிலுஞ்சுடரொளியும் நெடுமாற்கடிமையும்பற்றியுபந்யாஸம்

திருவாய்மொழி மூன்றும்பத்தில் *பயிலுஞ்சுடரொளிப்பதிகமும், எட்டாம்பத்தில் *நெடுமாற்கடிமைப்பதிகமுமுள்ளது. இவ்விரண்டு பதிகங்களுக்குமுள்ள விஷயபேதம் நுட்பமாகத் தெரிந்துகொள்ளவேண்டியதாதலால் அது இங்கே நிரூபிக்கப்படுகிறது. ஒருவன் ஒரு வஸ்துவினிடத்தில் அன்புவைத்தால் அவ்வன்பு அளவற்றதுமாயிருந்தால் அவ்வன்பு அவ்வஸ்துவோடே நின்றுவிடாமல் அதனோடு ஸம்பந்த ஸம்பந்தம்பெற்ற வஸ்துக்களிலும் பெருகிச் செல்லுமென்பதை அனைவரும் தம்தம் அநுபவத்தாலறிவர். அப்படியே பகவத் பக்தியின் எல்லைநிலமாக பாகவத பக்தி என்பது உண்டாமது. பகவத் பக்தியின் உறைப்பையே பாகவத பக்தி வெளிப்படுத்தும். ஸ்வாமியினுடைய பாதுகை களிலே நாம் ஆதரம்வைத்து அவற்றைக் கண்களில் ஒற்றிக்கொள்வதும் தலைமீது அணிந்துகொள்வதும் அலம்பித் தீர்த்தம் பருகுவதும் செய்கிறோம்; இதனால் நமக்கு ஸ்வாமியிடத்துள்ள பக்தி அபாரமானது என்பதன்றோ வெளியாகின்றது. அதுபோலவே பாகவத சேஷத்வத்தின் அதிசயத்தைப் பேசுவதெல்லாம் பகவச் சேஷத்வத்தின் உறைப்பையே பேசினபடியாகும்.

திருமந்திரத்தில், அஹங்காரமும் மமகாரமும் நீங்கப்பெற்று பகவச் சேஷத்வம் உள்ளபடி ப்ரகாசிக்கிற நமஸ்ஸிலே அந்த பகவச் சேஷத்வத்தின் எல்லைநிலமான பாகவத சேஷத்வம் அநுஸந்திக்கப்படவேணுமென்பது சாஸ்த்ரார்த்தம்; திருமந்திரத்திற்கு முக்கியமான பொருள் பாகவதசேஷத்வமேயென்பதை *மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த மங்கையர்கோன் தமது திருமொழியில் *மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்துங்கற்று நான்—உற்றது முன்னடியார்க்கடிமை என்ற பாசுரத்தினால் தெளியவைத்தார். மூன்றும்பத்தில் ஏழாவது பதிகமான *பயிலுஞ் சுடரொளியென்னுந் திருவாய்மொழியில் இவ்வர்த்தமே வெளியிடப்பட்டுள்ளது; அதிற்காட்டில் (8-10) *நெடுமாற்கடிமையென்கிற திருவாய்மொழிக்கு வாசி என்னென்னில், ஆசார்ய ஹ்ருதயத்தில் (211) *மூன்றில் சுருக்கிய வைந்தையும்* என்று தொடங்கியுள்ள சூர்ணையில் *பயிலுஞ்சுடரொளி ஸ்வஸ்வரூபப்ரதிபாதநபரமென்றும், *நெடுமாற்கடிமை புருஷார்த்த ஸ்வரூபப்ரதிபாதந பரமென்றும் வகையிட்டுக் காட்டப் பட்டது. அங்கு வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள்—“பகவச் சேஷத்வத்திலும் தத்காஷ்டையான பாகவத சேஷத்வமே ஆத்மாவுக்கு உத்தேச்யமென்று ப்ரதிபாதித்த *பயிலுஞ்சுடரொளியும்......பாகவத கைங்கர்ய பர்யந்தமாகவேணுமென்று மநோரதித்த *நெடுமாற்கடிமையும்” என்றருளிச்செய்திருப்பது காண்க. இதனால், பாகவத சேஷத்வம் ஆத்மஸ்வரூபம் என்பதிலே *பயிலுஞ்சுடரொளிக்கு நோக்கு; பாகவத கைங்கர்யமே புருஷார்த்தம் என்பதிலே *நெடுமாற்கடிமைப் பதிகத்திற்கு நோக்கு என்றதாயிற்று.

**அடியேன் அநுஸந்தித்துவரும் 12 திருமஞ்சனக் கட்டியங்கள் 12 உபந்யாஸங்களாக வரிசையாய் வெளியிடப்படுகின்றன.**

# தேவப்பெருமாள் ஸன்னிதி
# மணவாளமாமுனிகள் திருமஞ்சனக் கட்டியம்.

தேவ ! விஜயீபவ. நாயிந்தே நாயிந்தே !



காஷாயசோபி கமநீயசிகாநிவேசம்
தண்டத்ரயோஜ்வலகரம் விமலோபவீதம்,
உத்யத்திநேசநிப முல்லஸதூர்த்வபுண்ட்ரம்
ரூபம் தவாஸ்து யதிராஜ த்ருசோர் மமாக்ரே.

போதச்சிவந்து பரிமளம்வீசிப் புதுக்கணித்த
சீதக்கமலத்தை நீரேறவோட்டிச் சிறந்தடியேன்
ஏதத்தைமாற்றும் மணவாளயோகி யினிமைதரும்
பாதக்கமலங்கள் வாழியரோ பாதக்கமலங்கள் வாழியரோ.

ஸ்ரீபூப்யாம் ரங்கநாதே சடஜிதுபநிஷத்வ்யாக்ரியாம் ச்ரோதுகாமே
சேஷஸ் ஸந்தோஷயிஷ்யந் வரவரமுநிதாம் ப்ராப்ய யோ வர்த்ததேக்ரே,
காஷாய ஸ்ரீதுலஸ்யம்புஜமணி ஸூசிகா யஜ்ஞஸூத்ரத்ரிதண்டை:
பாந்தம் சுப்ரேரர்த்வபுண்ட்ரம் ஸ்மர ஹ்ருதய ஸதா கோசமுத்ராங்கஹஸ்தம்.

1. அரங்க நகரீடுதனை யளித்தருளும் பெருமாள்!
2. அழகானகுருகூரி லவதரித்த பெருமாள்!
3. அரவரசப் பெருஞ்சோதி யனந்தனென்னும் பெருமாள்!
4. அருளரங்கர் ஸ்ரீசைலமேத்தவந்த பெருமாள்!
5. இரவுபகலெதிராச ரடிமகிழும் பெருமாள்!
6. இந்நிலத்தில் பிறவிதனை யிகழ்ந்துரைக்கும் பெருமாள்!
7. திரமாக திக்கஜங்க ளிட்டருளும் பெருமாள்!
8. தேவபிரானடியிணையிலன்புபூண்ட பெருமாள்! நம் மணவாள முனிப்பெருமாள்!

பற்பமெனத்திகழ் பைங்கழலுன்றன் பல்லவமேவிரலும்
பாவனமாகிய பைந்துவராடை பதிந்த மருங்கழகும்
முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல்தன்னழகும்
முன்னவர்தந்திடுமொழிகள் நிறைந்திடு முறுவல்நிலாவழகும்
கற்பகமேவிழி கருணைபொழிந்திடு கமலக்கண்ணழகும்
காரிசுதன்கழல்சூடியமுடியும் கனநற்சிகைமுடியும்
எப்பொழுதும் வரயோகியின்வடிவழ கென்னிதயத்துளதால்
இல்லையெனக்கெதிரில்லை யெனக்கெதிரில்லையெனக்கெதிரே.

1. தேவரீருடைய திருவடித்தாமரைகளின் போக்யதாதிசயத்துக்கு ஒரு போலியாக கம்பீராம்பஸ் ஸமுத்பூத ஸுஸம்ருஷ்டநாள ரவிகரவிகஸிதமானதோர் செந்தாமரைப்பூவை அதினுடைய கர்வஸர்வஸ்வ நிர்வாபண பூர்வகமாகத் திருவடிகளின் கீழமுக்கி அதின் தலைமேல் வெற்றியுடன் வீற்றிருக்கு மிருப்பின்முகும்;—

2. பங்கஜ ரஜஸ்ஸும் பாதாருந்துத ம்ராம்படி சேடீஜநலோசந சர்ச்சாஸஹ ஸௌகுமார்ய சாலிநிகளான பிராட்டிமாரும் பிடிக்கக் கூசும்படி புஷ்பஹாஸ ஸுகுமாரதரரான பெரிய பெருமாளுக்கும் மெத்தென்ற பஞ்சசயநமாய் அத்யந்த ஸுகுமாரரான தேவரீர்தமக்கு ஆஸநமாய்க்கொண்டு தொண்டுபூண்ட புண்டரீகத்துக்கு ஸ்வதாஸ்யார்ஹ ஸாரஸ்யாதிகளை யூட்டுகைக்குத் ததாஸ்யாந்தரத்தில் சொருகியிட்டு வைத்தாற்போல் மறைத்திட்ட இடத்திருவடிகளும்;—

3. ஸம்ஸரண தவதஹந தந்தஹ்யமாந ஸகல ஜகதவநபர ஸந்தத சிந்தாஸமாக்ராந்தியாலே நிப்ருததயா பணிபதிசயந சயாநரான பெரிய பெருமாளுடைய யோக நித்ரா முத்ராநுகாரியாக இடத்தொடையின் மேல் வளர்த்திக் கண்ணுரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முற்றூட்டாகக் காட்டியிட்ட வலத்திருவடிகளும்:—

4. பரப்ரஹ்மபூத பரபுருஷ விஷயக ஸங்ககாமாத்யுத்திபகரான மன்னிய சீர்மாறனென்னும் மாறனுக்கு தேவரீருடைய பதஸரஸிஜ வ்யாஜேந குஸுமசரஸஹிதமாக அமைத்துவைத்த அம்பறுத்தூணிகள் போல் இணைத்துவைத்த கணைக்கால்களும்;—

5. கீழ்நோக்கிக் கிளர்கின்ற சுடர்ச்சோதி வெள்ளங்கள் ஆஸநாபிகாதத்தால் மறியுண்டு சுழித்தாற்போல் இரண்டுருகுந்திரண்டுருண்டு மடியுண்ட முழந்தாள்களும்:—

6. கந்தளித கதளீகாண்ட கரிகர கரபங்களை வென்று அடிபருத்து நுனிசிறுத்து மதமதென்று மாம்ஸளங்களாய் விளங்குகின்ற திருத்தொடைகளும்;—

7. சடப்ரமதந சமதந ஸார்வபௌம ஜைத்ரயாத்ராரதம்போன்ற தேவரீருடைய திருமேனிக்குக்கீழுருண்டுவரும் இரண்டு சக்ரமண்டலங்கள் போன்ற ப்ருதுநிதம்ப பிம்பங்களும்:—

8. திருவரையில் கடிதொடங்கிக் கணைக்கால்கள் நடுவளவும் உள்ளுள்ள வடிவழகுக்கு அத்யந்த ப்ரகாசகமாய்ப் பொருத்தமுடன் தரித்திருந்த கமநீயகாஷாயமும்:—

9. இடவருகில் தொடையடியில் தொங்குகின்ற தலைப்புடனே நடுக்கோத்து மடித்துடுத்த ஸர்வோத்தரோத்தரீயமும்;—

10. ஸந்த்யாராக ரஞ்ஜிதமான சாரதாப்ரத்தில் தனித்தெழுந்தோர் கொடிமின்னல் நிலைநின்று படர்ந்தாற்போல் அரைச்சிவந்த வாடையின்மேல் நெளிந்துகொண்டு நிகநிகென்ற பொன்னரைநாண் பூண்ட வழகும்:—

11. பவதநுபவரஸ விவசருடைய அபிநிவேசபாச பரிப்ராமித மதிமந்தாந மத்த்யமாநமான ஸௌந்தர்ய துக்தஸிந்துவானது சுற்றேரம் திரைந் தெழுந்து நடுக்குழித்திட்ட சுழிபோல் சுந்தரமாம் உந்திமலரும்:—

12. விநயமுடன் வீசுகின்ற வெட்டிவேர் விசிறிகளால் அத்யந்த குமுகுமித சனைச்சனை: ப்ரஸரந் மந்தகந்தவஹ விஹரணவிசேஷங்களாலே தேவரீருடைய திவ்ய

லாவண்ய தரங்கிணீ பார்ச்வ பாகங்களில் இரண்டலைவரிசை பரம்பினாற்போல் இருபக்கமும் திகழ்கின்ற த்ரிவலிகளும்:—

13. மாமேகமென்பதை அபிநயித்துக் காட்டுவதுபோல் நெஞ்சுக்கு நேராகக் கொஞ்சம் சாய்த்து அஞ்சலித்த திருக்கைகளும்:—

14. தங்கவளைமேல் தங்கித் தொங்குகின்ற சங்கிலிகளோடு இணக்கமுற்ற கணைக்கைகளும்:—

15. அபிநவதர தரவிகஸ்வர ஸரஸிஜவர முகுளதளத்தளாயமாந நிஜாஞ்ஜலி சிகாங்குளீ சோபையை நிஜஹ்ருதயஜலஜதளாக ரஸிக ஹார்த்த ஜநார்த்தனனுக்கு அவநமித்துக் காட்டுகையால் முறுக்கியிட்ட முன் கைகளும்:—

16. அகடித கடநாஸமர்த்த சதுர்ப்புஜ புஜதுர்ப்பர விபூதித்வயபர பரணார்த்த மாகக் கநகமயகிரிவரங்களிரண்டை வெளிறறக்கழித்துப் புகரெழக்கடைந்து தூணுக்கி மடுத்தாற்போல் இரண்டட்டத்திலுந் திரண்டுருண்டு நீண்டு த்ருடதரங்களுமாய், சிரீஷ குஸும ஸௌகுமார்யம் திரண்டு இரண்டு வடிவு கொண்டாற்போல் அத்யந்த ம்ருதுளங்களுமாய், ஸாக்ஷாத்புஜகபதி போகாத்மகத்வ ப்ரத்யாயகங்களுமாய் விளங்கு கின்ற பாஹு தண்டங்களும்:—

17. ஹ்ருதயாந்தர்நிஹித ப்ரஹ்மபுரகோபுர கோபநார்த்தமிட்ட ஹாடகமய கவாடபுடம்போல் பளபளென்றகன்று காடவ்யூடமாய் வய: பரிணம ஸூசனார்த்தமாகக் கொஞ்சந்தளர்ந்ததுபோல் விளங்குகின்ற விசாலவிமல வக்ஷஸ் ஸ்தலமும்:—

18. அழகு செண்டாடுகிற அம்மார்பினழகில் ஆழங்கால்பட்டு மயங்கி விழுகின்ற மநோநயன யுகளங்கள் மூன்றுக்கும் கைப்பிடி கொடுத்து அவற்றைத் தோளழகிலே துவக்குகைக்குத் தொங்கவிட்ட அவலம்பஸூத்ரத்ரயம் போன்ற ஸௌதாமநீ ஸவர்ண ஸௌவர்ண யஜ்ஞஸூத்ரமும்;—

19. ஸேச்வர விபூதித்வயத்துக்கும் நிழல் கொடுத்து வளர்ந்து விசாலங்களுமாய், கிரிவரசிகர ஸுகப்ரதிஷ்டித ஸிம்ஹஸ்கந்த ஸந்திபந்த ஸம்ஸ்தாந பத்தஸ்பர்த்தங்களு மாய்ச் சரிந்துயர்ந்து விளங்குகின்ற திருத்தோள்களும்;—

20. கண்டருத்த ப்ரணவாக்ஷரங்கள் கழுத்துள்ளே நெருக்குண்டு விம்மிப் புறம் பொசிந்தாற்போல் ரேகாத்ரய விபக்தாங்கமாய், க்ரமுக தருண க்ரீவா கம்புப்ரதிமமாய் விளங்குகின்ற திருக்கழுத்தினழகும்;—

21. *சுற்றுமொளிவட்டஞ் சூழ்ந்து சோதிபரந்தென்கிறபடியே சாரதசர்வரீ பர்வாக்ர ஸமயஸமேதித ஸகலகலா பரிபூர்ண ஸர்வாஹ்லாதகரமான மறுக்கழற்றின சந்த்ர மண்டலத்தையும், அப்போதலர்ந்த செந்தாமரைப் பூவையும் ஸஹஜகாந்தி சைத்யமார்த்தவ ஸௌரபாதிகளால் அத:கரித்துக் கிட்டினாரை மையலேற்றி மயக்கும் மாயமந்திரமாய் விளங்குகின்ற ஸ்மயமாந முகாரவிந்தமும்;—

22. நின்றவாநில்லாநெஞ்சு பிணிப்புண்ணும்படி கண்ணிக்கயிற்றுச் சுருள்கள் போல் சுருண்டுருண்டு நீண்டு மநோஹரங்களுமாய், முன் சிலநாள் சாத்திக்களைந்த கநகாக மகரகுண்டலத்வயத்தைத் தளர்ந்து வளர்ந்து வடுவிட்ட வடிவழகால் கோள்சொல்லித்

தரக்கடவதுகளுமாய், மார்த்தவாதிசயத்தால் மெல்லவசைந்தாடுவதுபோலத் தோளளவுந் தளதளென்று தொங்குகின்ற திருச்செவிகளும்;—

23. இசைந்து கனிந்த த்ராக்ஷாத்வயம்போல் நடுப்பதிந்து வகுப்புண்டு திரண்டெழுந்த சுபுகவிகாஸமும்;—

24. ஸ்வாந்த ஸ்வாந்தர்நிரந்தர சிந்த்யமாநாநந்தசயாநந்த சிரந்தநோதந்த ஸந்தாந ஸாக்ஷாத்கார ஹடாத்கார ஸமுதஞ்சித ரோமாஞ்ச விசேஷங்களாலே பரமபுருஷ ஸம்ச்லேஷ ஹர்ஷாதிரேகஸூசகங்களுமாய் அவ்யக்தாங்குரச்மச்ருஸமூஹதயா "யத்ரர்ஷய: ப்ரதமஜா யேபுராணா:" என்கிற நித்ய யுவத்வத்தைக் கோள்சொல்லித் தரக்கடவதுகளுமாய், புகர் படைத்துப் பெருத்து விளங்குகின்ற தாலுமூலங்களும்;—

25. ஸகலவிபுத ஸதாஸ்வாத்யமான தேவரீருடைய வதநஸுதாநிதி மண்டலாந்தராளத்தில் திரட்டியிட்ட அம்ருதரஸ ஸாரங்கள்போல் அத்யந்த போக்யங்களுமாய்ச் சிவந்து கனிந்த கோவைப்பழத்தையும் கடைந்து துண்டிட்ட பவளக்கொடியையும் பரிஹஸித்துச் சிரிப்பதுபோல் மந்தஸ்மித மநோஹரங்களுமாய், அதிருசிர பாவகர்ப்பமான தொரு வார்த்தை சொல்லத்தொடங்கித் துடிப்பதுபோல் விளங்குகின்ற திருப்பவளங்களும்;—

26. அபிமதஜந தர்சநாநந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழுகின்ற அவ்யக்த மதுர மந்தஹாஸ விலாஸமும்;—

27. ஸ்படிகமய கண்டசைல க்ருதங்களான இரண்டு முகுர மண்டலங்களை மாசறக் கடைந்து தூளிட்டுத் துலக்கித் துடைத்திணைத்து வைத்தாற்போல் தளதளென்ற திவ்ய கபோலங்களும்;—

28. தொங்குகின்ற செண்பகப்பூப்போலே நுனிமலர்ந்துயர்ந்து அடிகுறுகி நீண்டு நளிகாயுதம்போல் ரந்த்ரத்வய சோபிதமாய் மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோவென்று நித்ய ஸங்லேஹ ஜநகமாய் விளங்குகின்ற கோலநீள் கொடிமூக்கினழகும்;—

29. எப்பாலும் பரந்துள்ள ஸகல ஜனங்களுக்கும் தங்களையே நோக்கினாப்போல் அத்யந்த ரஞ்ஜகங்களுமாய்ப் புடைபரந்து மிளிர்ந்து இலங்கொளிசேர் அரவிந்தம்போன்று நீண்டு விசாலங்களுமாய், சண்டையிடும் இரண்டு கெண்டைகள் போன்ற தண்டாமரைக் கண்களும்;—

30. குணாரோபணங்கொண்டு வளைந்துநின்ற சார்ங்கவில்லை நிஜமான வடிவழகால் வென்றுகொண்டு வளைந்துநின்ற திருப்புருவ வட்டங்களும்;—

31. சாரதாஷ்டம்யோஷதீசனுடைய அதிநிர்மல மண்டலாந்தராளத்தில் ஊற்று மாறாமல் சுரந்து பெருகி வருகின்ற இரண்டம்ருததாரைகள் ததுபாந்த விநிர்மித திவ்யாலவால குல்யாகூல பந்த விசேஷங்களாலே பரஸ்பரமெதிர்கொண்டு பறியுண்டு கூடிக் குறுகி கம்பீரமாய் வழிந்திருந்து வளர்ந்து படர்ந்ததோர் கற்பகக்கொடியின் அடியிலேறிப் பாய்ந்து நிறைந்து தேங்கி நின்றாப்போல் திருநெற்றியின் நடுவில் வடிவிட்டுப் படிந்துகொண்டு அவிச்சிந்நரேகமுமாய் ப்ருபக்ஷ்மயுகளாந்தராள ஸ்தித கோணத்வய சோபிதமுமாய் கோலநீள்கொடிமூக்கினடியை விளாக்குலைகொண்டு

விளங்குகின்ற ராமாநுஜாக்க்ய திவ்யபீட ஸம்யுதமான திவ்யோர்த்வ புண்ட்ர விசேஷமும் ;—

32. அதினிடையில் அம்ருதோத்பவையான ஸகல விபூதிபட்டாபிஷேக ஸாம்ராஜ்ய லக்ஷ்மியினுடைய ஸ்வேச்சா விஹார விக்ஷிப்த பதகமல லாக்ஷாரஸ தாராரேகைபோலச் சிவந்து படிந்து விளங்குகின்ற ரக்தவர்ண ஸ்ரீசூர்ணரேகையும்;—

33. மலர்ந்துயர்ந்த திருமுடியும்;—

34. வளர்ந்து மடிந்து வ்யக்தாவ்யக்தமாய் விளங்குகின்ற திருக்குழலொழுங்கும்;—

35. சுற்றிச்சுழற்றிக் குளைத்திட்டு முடித்துத் தொங்கவிட்ட சிகாபந்தமும்;—

36. பின்னெடுத்த பிடரியழகும்;—

37. திருவனந்தாழ்வான் பின்படம்போல் நடுப்பதிந்து பரந்து நெறித்திட்ட திருமுதுகும்;—

38. வலவருகில் கைமேலும் மார்பிலுமாய் முன்னுட்டித் தாங்கியிட்ட த்ரிதண்டாகர்யமும்;—

39. சீரியதோர் நிதிபோலே திருமுன்பே நோக்கி வைத்திட்ட பொன்னடியாஞ் செங்கமலப்போதுகளும்;—

40. மந்த்ரராரத்நாநுஸந்தாந ஸந்தத ஸ்புரிதாதரமும், ததர்த்த தத்வ நித்யாநு ஸந்த்த புலகோத்கமமுமாய் தேவரீர் திருமஞ்சனங்கொண்டருள வெழுந்தருளியிருக்கு மிவ்வழகு ஏதேனும் சிந்தைமருளோ?

ஜகந்மோஹந மந்த்ர ப்ரபாவமோ? ஸகல ரஸகுளிகா விசேஷமோ?
ஸர்வபோக சிந்தாமணி ப்ரகாசமோ? அகில ஜகத் ஸுக்ருத விபாகமோ?
நிகில பல கல்ப லதா ப்ரஸரமோ? ஸமஸ்த ஸம்பத் ஸாம்ராஜ்ய வேஷமோ?
ஸர்வ மங்கள ஸந்தாந ப்ரஸவமோ? ஸகல ஜகஜ்ஜீவந மூலமோ?
ஸர்வாநந்த கந்தாவதாரமோ? ஸகலகலா ரஹஸ்ய ஸர்வஸ்வமோ?
ஸர்வேச்வராபத்தநமோ? இவையெல்லாந்திரண்டெழுந்து கொண்டதோர் வடிவோ?
இதுவுமன்றி அப்ரமேய தேஜஸ்ஸோ? நாங்களீதே தென்றறியா விவ்வழகுடன்
ஊழிதொறுமூழிதொறும் வாழ்ந்திடுக வாழ்ந்திகவே. யதிஸார்வபௌமனே!

41. அன்புடனே யண்ணலுக் கடிமைபூண்ட வேர்வையாறவோ?
அழல்சரத்தா லிந்திரசித்தையழித்த வேர்வையாறவோ?
அடைவுடனே திருப்பதிகள்நடந்த வேர்வையாறவோ?
அரவரசாயடியிணையி லன்புபூண்டவேர்வையாறவோ?
அருளாலே யடியார்கட் கிடளித்த வேர்வையாறவோ?
அடிக்கொதிப்பா லிங்கிலத்தி லார்த்தியுரைத்த வேர்வையாறவோ?
அருளாளர்கச்சிதனி லடியோங்களையளித்த வேர்வையாறவோ?
அனவரதம் வியாக்கியைக ளளித்தகளையாறவோ?
தேவரீர் மஞ்சன மாடியருள்வதே.

42. செந்தமிழ்வேதியர் சிந்தைதெளிந்து சிறந்து மகிழ்ந்திடவே
சீருலகாரியர் செய்தருள்நற்கலை தேசுபொலிந்திடவே
மந்தமதிப்புவி மானிடர்தங்களை வானிலுயர்த்திடவே
மாசறுஞானியர் சேரெதிராசர்தம் வாழ்வுமுளைத்திடவே
கந்தமலர்ப்பொழில்சூழ் குருகாதிபர்கலைகள் விளங்கிடவே
காரமர்மேனி யரங்கநகர்க்கிறை கண்கள்களித்திடவே
இந்த நிலந்தனில் வந்துதயஞ்செய்த சுந்தரமாமுனியே
இன்றெங்கள் கண்கள் களித்திட மஞ்சனமாடி யருள்நலமே.

43. நலமாக வண்ணலே நல்லெண்ணெய் மஞ்சளால்
நன்மஞ்சனங்கொண்டு நாடொறும் வாழ்கவே.

44. கங்கைநீ ரொருபால் காவிரியொருபால் கமழ்தரும்யமுனை நீரொருபால்
துங்கபத்திரையின் தூயநீ ரொருபால் துகில் வண்ணப்பொருநல் நீரொருபால்
மங்குல்தோய் சென்னி வேங்கடத் திலங்கும் ஸ்வாமி புஷ்கரிணியின்
தீர்த்தமுமொருபால்
இங்ஙனே பெருகுமெங்கள் மாமுனியே! மஞ்சன மாடுக மகிழ்ந்தே.

45. காவேரீஸலிலாநி காஞ்சநகடே கல்ஹாரகாச்மீரபூ
கர்ப்பூராதிபரிஷ்க்ருதாநி கலிதே காஷாயகௌசேயகே,
காலாகாங்க்ஷிபிரஷ்டதிக்கஜமுகைரங்வாஸ்யதே கிங்கரை:
காமம் காருணிக: கரோது கருணும் காந்தோபயந்தா முநி.:

அருளப்பாடு............................மங்களவாத்யம்

ஜீயர் திருவடிகளே சரணம்

## தேவப்பெருமாள் ஸன்னிதி
## நம்மாழ்வார் திருமஞ்சனக் கட்டியம்.

தேவ விஜயீபவ. நாயிந்தே நாயிந்தே!

மநஸ்ஸ்படிகதர்ப்பணப்ரதிபலத்பரப்ரஹ்மண:
ப்ரதர்சநமிவாசரந் ப்ரதிதபோதமுத்ராங்கித:.
ஸதாம் அபயசம்ஸிதா பவபயாபிதப்தாத்மநாம்
அகாநி சமயேத நச் சடரிபோ: அவாம: கர:.

மறைப்பாற்கடலைத் திருநாவின்மந்தரத்தால் கடைந்து
துறைப்பால்படுத்தித் தமிழாயிரத்தின்சுவையமிர்தம்
கறைப்பாம்பணைப் பள்ளியானன்பரீட்டங் களித்தருந்த
நிறைப்பான்கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லையே.

1. நல்லார்நவில்கின்ற நன்குருகைமாநகரில் நலமாக நாமுய்யவந்துதித்தபெருமாள்!
2. நன்னாரணன்நீங்க மற்றாருமுற்றதுணையன்றே நமக்கென்றுரைத்த பெருமாள்!
3. கல்லாதவாதிகளுமல்லாத மாயிகளும்நில்லாது நீக்கியருள்நல்ல பெருமாள்!
4. கலைவலவர்பலர்வாழுங் கச்சியில் கரிகிரிகீழ் கோயில்கொண்டடியாரையருளும் பெரு...
5. எல்லாருமுய்யவென நல்லானநான்மறையைச் சொல்லால் தொகுத்தருளவல்ல பெரு...
6. ஏரார்ந்தமதுரகவி தாரார்ந்தமணிமுடிமேல் சீராந்தவடியிணையையருளும் பெருமாள்!
7. நல்லானநாதமுனிக் கெல்லாப்பொருள்களையும் சொல்லாரவாழ்த்தவேசொன்னபெரு...
8. நாதனுக்குநாலாயிரமுரைத்தகுருவென்று நாற்றிசையும் நலமாகப்போற்றநின்ற பெரு.
9. கருவிருத்தக்குழிநீத்துக் காமக்கடுங்குழி வீழ்ந்தொருவிருத்தம்புகுதாமல்
திருவிருத்தமுரைத்த பிரான்!
10. காசினியோர்தாம்வாழக் கலியுகத்தேவந்துதித்து ஆசிரியப்பாவதனால்
அருமறைநூல்விரித்த பிரான்!
11. முயற்றிசுமந்தெழுந்து முந்துற்றநெஞ்சுடனே நயப்புடைய வந்தாதிநாவீன்ற
நாவலவா!
12. அவாவறச்சூழரியடிமேல் அவாவிலந்தாதிகளால் அவாவிலாயிரமுரைசெய்து
அவாவற்று வீடுபெற்றோய்!

அல்லன்ன குழலும் அகன்ற முகமும் வில்லன்ன புருவமும் விசால நயனமும்
எள்ளுப்பூநாசியும் இணைவள்ளக் காதும் சொற்ப்ரணவமொழியும் சிவந்தவதரமும்
வெள்ளன்ன வேஷ்டியும் விளங்கு திருமுத்திரையும் நேரான புண்ட்ரமும்
நிறைந்த மணிவடமும்
கதித்ததுடையும் கணைமுழந்தாளும் பல்லவப்பவழத்தைப் பழித்தவிரலடியுமாய்

தேவரீர் திருமஞ்சனங் கொண்டருளவீற்றிருக்குமிவ்வழகு
ஏதேனும் ஜகந்மோஹனமோ? ஸ்ரீ வைஷ்ணவஸர்வஸ்வமோ?
வேள்வியின் பயனோ? வேதாந்தவிழுப்பொருளோ?
நாங்களீதேதென்றுமறியாவிவ்வழகுடனும்,

அத்ரிஜமதக்நி பங்க்திரத வஸுநந்த ஸூநுவானவனுடைய யுகவர்ணக்ரமாவதாரமோ?
வ்யாஸாதிவதாவேசமோ? முதுவர்கரைகண்டோர் சீரியரிலேயொருவரோ?
முன்னம் நோற்றவனந்தன்மேல் புண்ணியங்கள் பலித்தவரோவென்று
சங்கிக்கைக்குறுப்பான சிறப்புடனும் ஊழிதொறுமூழிதொறும்

வாழ்ந்திடுக வாழ்ந்திடுகவே முநிஸார்வபௌமனே!

ஊழிதோறும் சோம்பாதொன்றிப்பொருளென்றளிமகிழ்ந்துமுற்றுமாய்நின்று நூலுரைத்து யோகுபுணர்ந்து கண்காணவந்து ஆள்பார்க்கிறவன் உலகினதியல்வை நல்வீடு செய்ய இணக்குப் பார்வை தேடிக் கழலலர்ஞானமுருவினமுழுது மோட்டினபெருங்கண் எங்குமிலக்கற்று அன்பொடுநோக்கான திசையிலே ஆக்கையில் புக்குழன்று மாறிப்படிந்து துளங்குகிறதம்மேலே படப் பக்கநோக்கறப் பண்ணின விசேஷ கடாக்ஷமடியாக, யான்நீயென்று மறுதலைத்து வானத்து மண்மிசை மாறும் நிகருமின்றி நிலையிடம் தெரியாதே தெய்வத்தினமொருவகைக் கொப்பாக இனத்தலைவன் அந்தாமத்தன்பு செய்யச் சேர்ந்தமைக்கு அடையாளமுளவாக உகந்துகந்து திமிர் கொண்டாலொத்து நாட்டியல்வொழிந்து சடரையோட்டி மதாவலிப்தர்க்கு அங்குசமிட்டு நடாவிய கூற்றமாய் தீயனமருங்குவாராமல் கலியுகம் நீங்கிக் கிதயுகம் பற்றிப் பட்டபோது எழுபோதறியாதிருந்த விடாய் தீரவோ?

தர்மவீர்ய ஜ்ஞானத்தாலே தெளிந்து ஹ்ருஷ்டராய் மேலே மேலே தொடுப்பாரைப் போலன்றிக்கே அருளின பக்தியாலே உள்கலங்கிச் சோகித்து மூவாறுமாஸம் மோஹித்து வருந்தியேங்கித் தாழ்ந்த சொற்களாலே நூற்ற கலையாறவோ?

ஸ்வாத்யாய யோகங்களைக் கற்றும் தெளிந்தும் கண்டமைமைப்பாலே ஓதியுணர்ந்தவர் இன்னுமாசாபாசபத்தராயிருக்க, அவன் வழங்கும் திவ்ய சக்ஷுஸ்ஸாலே நேரே கார் செறிந்த நீருடிகட்கரியவரும்பொருளைக் கண்ட போதே பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பு மிந்நின்ற நீர்மையினியாமுருமை யென்னும்படி வன்பாசங்கள் நீங்கப்பெற்ற விடாய் தீரவோ?

காயோடு நீடுகனியுண்டு வீசுகடுங்கால் நுகர்ந்து நெடுங்காலமைந்து தீயூடுநின்று தவஞ் செய்யாதே உண்ணுஞ்சோறு பருகுநீர்த் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்றிருந்த கலையாறவோ?

சந்தோகனென்று ஸாமாந்யமாகாமல் முதலிலே பிரித்து யாழ்பயில் காநஸ்வரூபியைப் பாலையாகியென்று விசேஷிக்கையாலே வேதகீதச்சாமி நானென்ற ஸாமந்தோன்ற உத்கீத ப்ரணவத்தை ப்ரதமத்திலே மாறுடி சரமகதி முடிவாகத் தொண்டர்க்கு அமுதென்ன தேவான்னமாக்கி மஹாகோஷ நல்வேத வொலிபோலே மஹாத்யயந மென்னப்பாடுகையாலே ச்சாந்தோக்ய ஸாமமென்பதாய், புரவியேழொருகாலுடைய தேரிலே திருச்சக்கரமொத்துக் காலசக்கரச்செங்கோல் நடாவி ஜ்யோதிச் சக்ரவொளி சுருக்கி அக்நீஷோமீய தேஜோம்ருதத்துக் கூற்றும் மந்தேஹர்க்குச் செந்தீயும் முக்திமார்க்கத்தலைவாசலும் கண்ணுவான்கண்ணில் பிறந்த கண்மணியும் த்ரயீமயமூ மான மண்டலத்திலே தண்டாமரை சுமக்கத் தோள்வளையுங்குழையும் திருச்செய்ய முடியும் ஆரமும் படையும் திகழும் பொன்மேனியும் செஞ்சுடர்த் தாமரைக் கண்ணுமாய் அணிநிற மூர்த்தியீதென்னும்படி இரண்டையும் தன்னிறமாக்குகிற செய்யாளான வித்யையோடே அருக்கன்மேவின ஸதாத்யேயதேஜஸ்ஸின் ஸாமரஸோத்கார நாமமுள்ளுறையான ஆத்யந்தங்களாலே ஓராயிரமாமவற்றிலே ஒன்றை ஆயிரமுகத்தினலருளின தீர்த்தம்போலே தீர்த்தங்களாயிரமுமாக விஸ்தரித்த விடாய்தீரவோ தேவரீர் மஞ்சனமாடியருள்வதே.

சகமேழுங்குளிர நின்று மஞ்சனமாடியருள்கவே.

ஸ்நாநீயம் கநஸாரகுங்குமலவங்கைலாதிபிர் வாஸிதம்
ஸௌவர்ணேஷு கடேஷ்வநந்த ஸரஸ: பூர்ணம் புரஸ் திஷ்டதி.
கௌசேயஞ்ச சரச்சசாங்கதவளம் ஸித்தா வயம் கிங்கரா:
காருண்யம் கருணாநிதிர் விதநுதாம் ஸ்ரீமாந் சடாரிர் முநி:.

அருளப்பாடு சங்கதாரை பத்மதாரை ஸஹஸ்ரதாரை பட்டர் மங்களவாத்யம்.

# ஸ்ரீ காஞ்சீ யதோக்தகாரி யெம்பெருமான் திருமஞ்சனக் கட்டியம்.

தேவ! விஜயீபவ. நாயந்தே நாயந்தே!

த்வம் மேஹம் மே குதஸ் தத் ததபி குத இதம் வேதமூல ப்ரமாணாத்
ஏதச்சாநாதி ஸித்தாதநுபவ விபவாத் ஸோபி ஸாக்ரோச ஏவ,
க்வாக்ரோச: கஸ்ய கீதாதிஷு மம விதித: கோத்ர ஸாக்ஷீ ஸுதீஸ் ஸ்யாத்
ஹந்த த்வத்பக்ஷபாதீ ஸ இதி ந்ருகலஹே ம்ருக்ய மத்யஸ்தவத் த்வம்.

நீலாஞ்ஜநாத்ரி நிப முந்நஸ மாயதாக்ஷம்
ஆஜாநுஜைத்ர புஜமாயத கர்ண பாசம்,
ஸ்ரீவத்ஸ லக்ஷண முதாரகபீரநாபிம்
பச்யேம தேவ சரதச் சதமீத்ருசம் த்வாம்.

கண்கள் சிவந்து பெரியவாய் வாயுஞ்சிவந்து கனிந்து* உள்ளே
வெண்பலிலகு சுடரிலகு விலகுமகர குண்டலத்தன்*
கொண்டல் வண்ணன் சுடர்முடியன் நான்கு தோளன் குனிசார்ங்கன்*
ஒண்சங்கதை வாளாழியானொருவ னடியேனுள்ளானே.

1. ஒன்றுந்தேவு முலகுமுயிரும் மற்றும் யாதுமில்லாவன்று நான்முகன்தன்னொடு தேவருலகோடுயிர்படைத்த பெருமாள்!

2. பண்டைநான்மறையும் வேள்வியும் கேள்விப்பதங்களும் பதங்களின் பொருளும் பிண்டமாய்விரிந்த பிறங்கொளியனலும் பெருகிய புனலொடுநிலனும் கொண்டல் மாருதமுங்குரைகடலேழு மேழுமாமலைகளும் விசும்புமண்டமுந்தானாய்நின்ற பெருமாள்,

3. தந்தையுந்தாயும் மக்களும் மிக்கசுற்றமும் சுற்றிநின்றகலாப்பந்தமும் பந்தமறுப்ப தோர் மருந்தும் பான்மையும் பல்லுயிர்க்கெல்லாம் அந்தமும்வாழ்வுமாய பெருமாள்,

4. பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கிப் பிறங்கிருள்நிறங்கெட வொருநாள் அன்னமாயன்றங்கருமறைபயந்த பெருமாள்,

5. சேயிருவிசும்பும் திங்களுஞ்சுடரும் தேவரும்தாமுடன்திசைப்ப ஆயிரந்தோளாலலை கடல் கடைந்த பெருமாள்,

6. வெங்கண்வாளெயிற்றோர் வெள்ளிமாவிலங்கல் விண்ணுறக் கனல்விழித்தெழுந்ததங் நனேயொக்க அரியுருவானபெருமாள்,

7. ஆயிரம்பெயரா லமரர்சென்றிறைஞ்ச அறிதுயிலலைகடல்நடுவே ஆயிரஞ்சுடர்வா யரவணைத் துயின்றபெருமாள்,

8. வரிசிலைவளைய வடுசரந்துரந்து மறிகடல்நெறிபட மலையால் அரிகுலம்பணிகொண் டலைகடலடைத்தபெருமாள்,

9. பாழியால்மிக்க பார்த்தனுக்கருளிப் பகலவனொளிகெடப் பகலே ஆழியாலன்றங் காழியை மறைத்தபெருமாள்,

10. அடியேற்கணியனுய் வந்தென்சிந்தையுள் வெந்துயரறுக்குமாயனுயன்று குன்றமொன் றெடுத்தபெருமாள்,

11. நெய்யே கடலாக வையந்தகளியிடுபொய்கைப்பிரான்கண்டு போற்றும்பெருமாள்,

12. முன்பேதமில்லாம லன்பேதகளியிடும் எம்பூதமுனிவந்திறைஞ்சும்பெருமாள்,

13. காயாநிறச் செய்யவாயான் திருக்கண்ட பேயார்மகிழ்ந்தேத்த நின்றபெருமாள்,

14. புகழுற்றதிருமால்மே லழகுற்றமறையோதும் மழிசைப்பிரான்வந்து வாழ்த்தும் பெருமாள்,

15. நல்லார்நவில்கின்ற நன்குருகைமாநகரில் நலமாகவந்தபிரான் நவின்றேத்தும் பெருமான்,

16. நலமான சொற்கொண்டு நன்கேத்தவந்துதித்த குலசேகரப்பெருமாள் கூறுகின்ற பெருமாள்,

17. சிட்டர்களோதெழுத்தெட்டின் பொருள்சொன்ன பட்டர்பிரான்வந்து பாடும் பெருமாள்,

18. சீமான்கள்வாழவே பாமாலைசொல்கோதை பூமாலைசூடியே பொங்கும்பெருமாள்,

19. விடிவோடெழுப்புநற் குடிவாழுந்தொண்டரடிப் பொடியோகி பூக்கொண்டு போற்றும்பெருமாள்,

20. காணல்லுறையூரில் வீணைதனைவருடுநற்பாணனுர் பரவியே பாடும்பெருமாள்,

21. ஆட்கொள்ளவே மங்கைதோட்கொண்ட வீரனும் வாட்கலியன்வாய்கொண்டு வாழ்த்தும்பெருமாள்,

22. மதிராசருய்யவே சதிரான சொல்தந்த எதிராசரனுதினமுமேத்தும் பெருமாள்,

23. உலகங்களுய்யவே விலகாத சொல்தந்த வுலகாரியன்வந்து வாழ்த்தும்பெருமாள்,

24. குணவாளருய்யவே தணவாத சொல்தந்த மணவாளமாமுனிவனேத்தும்பெருமாள்,

25. ஏழ்பாருமுய்யவரு மாழ்வாருமாரியரும் தாழ்வாதுமின்றியே துதிக்கும்பெருமாள்,

26. சீர்பூத்த செழுங்கமலத் திருத்தவிசின் வீற்றிருக்கு
நீர்பூத்த திருமகளும் நிலமகளுமடி வருட,
சிறைப்பறவை புறங்காப்பச் சேனையர்கோன் பணிகேட்ப
நறைப்படலைத் துழாய்மார்பில் நாயிறுபோல் மணிவிளங்க,
அரியதானவர்க்கடிந்த ஐம்படையும் புடைதயங்கக்
கரியமால்வரை முளரிக்காடீன்று கிடந்தாங்கு,
பாயிரநான்மறைபரவ வெஃகாவில் பருமணிச்சூட்
டாயிரவாய்ப் பாம்பணைமேல் அறிதுயிலி னிதமர்ந்தோய்,

27. தேவராய்த் தேவர்க்குந்தெரியாத வொளியுருவாய்
மூவராய் மூவர்க்குள் முதல்வனாய் நின்றோய் நீ,

28. போற்றுவார் போற்றுவதுன் புகழ்ப்பொருளே யாதலினால்
வேற்றுவாசக மடியேன் விளம்புமாறறியேனால்,

29. பணித்தடங்கா திமையவர்க்கும் பங்கயத்தோன்முதலோர்க்கும்
பணித்தடங்காப்புக ழடியேன் பணித்தடங்கற்பாலதோ,

30. யாங்கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற்கடவுளர்க்கும்
ஆங்கடவுள் நீயென்றால் அஃதுனக்கு வியப்பாமோ,

31. கருதரிய வுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையு
மொருதனிநாயகமென்றால் உன்பெருமைக் களவாமோ?

32. அனைத்துலகு மனைத்துயிரு மமைத்தளித்துத் துடைப்பதுநீ
நினைத்தவினையாட்டென்றால் நின்புகழ்க்குவரம்பாமோ?

33. ஒருநாலுமுகத்தவனோடு உலகீன்றாயென்பரது
உன்திருநாபி மலர்ந்ததல்லால் திருவுளத்திலுணராயால்,

34. மேருகிரியவுணனுடல் மிடல்கெடுத்தாயென்பரது
உன்கூருகிரேயறிந்ததல்லால் கோவேநீயறியாயால்,

35. பன்றியாய்ப் படியெடுத்த பாழியாயென்பரது
வென்றியா ரெனதெயிற்றின் மென்துகள்போன்றிருந்ததால்,

36. அண்டமெலா முண்டையென்ப ரறியாதார் ஆங்கவைநீ
உண்டருளுங்காலத்தி லொருதுற்றுக் காற்றாவால்,

37. திருக்கோவலிடைகழியில் நெருக்குண்ட மூவர்க்குள்
முதலாயவாழ்வார்மேல் முழுநோக்கையருள்முகிலே,

38. சதுமுகனார் வேள்விதனைச் சதிர்கெடுக்கச் செறிந்தோடுங்
கதியுடைய வேகவதிக் கணையாக வந்துதித்தோய்,

39. பொருப்பிடையே நிற்பதையும் புனல் குளிக்கப் போவதையும் நெருப்பிடையே நிற்பதையும் வீணாக்கி, விருப்புடைய வெஃகாவே சேர்ந்தானை மெய்ம்மலர் தூய்க் கைதொழுதால் அஃகாவேதீவினையென் றாய்ந்துரைக்கப்படுஞ் சோதீ,

40. போகின்ற கணிகண்ணன் பின்போன மழிசையர்க்காப் பைந்நாகப்பாய் சுருட்டிக் கொண்டெழுந்த பரஞ்சோதீ,

41. உலகளந்தமாணிக்கமே என்மரதகமே மற்றொப்பாரையில்லாவாணிப்பொன்னே அடியேனடியாவியடைக்கலமே ! கல்லுயர்ந்த நெடுமதிள்சூழ் கச்சிமேயகளிறே ! கடல்கிடந்தகனியே ! வில்லிறுத்து மெல்லியல்தோள்தோய்ந்து வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தே ! பாந்தள்பாழியில் பள்ளிவிரும்பிய வேந்தே !, பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடிநூறாயிரம் மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா ! உன் சேவடி செவ்வி திருக்காப்பு.

(வடிவழகிலீடுபாடு)

42. முடிச்சோதியா யுனதுமுகச்சோதி மலர்ந்ததுவோவென்னலாம்படி கதிராயிரமிரவி கலந்தெரித்தா லொத்த நீண்முடியும்,

43. சுற்று மொளிவட்டஞ்சூழ்ந்து சோதிபரந்தென்கிறபடியே சாரதசர்வரீ பர்வாக்ர ஸமய ஸமேதித கைலகலாபரிபூர்ண ஸர்வாஹ்லாதகரமான மறுக்கழற்றின சந்த்ர மண்டலத்தையும் அப்போதலர்ந்த செந்தாமரைப்பூவையும் ஸஹஜகாந்தி சைத்யமார்தவ ஸௌரபாதிகளால் அத:கரித்துக் கிட்டினாரை மையலேற்றி மயக்கும் மாயமந்திரமாய் விளங்குகின்ற ஸ்மயமாநமுகாரவிந்தமும்,

44. உத்தரத்யுபரி பக்தஜநாநித்யூர்த்வதாச்ரயண ஸூசிதசக்திகமான திவ்யோர்த்வ புண்ட்ர திலகப்ரகாசமும்,

45. மாட்டுயர்கற்பகத்தின் வல்லியோகொழுந்தோவென்று நித்யஸந்தேஹஜநகமான கோல நீள்கொடிமூக்கினழகும்,

46. வன்காற்றறைய வொருங்கே மறிந்து கிடந்தலர்ந்த மென்கால்கமலத்தடம்போல் பொலிந்து கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்துசெவ்வரியோடி நீண்டவப் பெரியவாய தண்டாமரைக் கண்களும்,

47. குணரோபணங்கொண்டு வளைந்துநின்ற சார்ங்கவில்லை நிஜமானவடிவழகால் வென்றுகொண்டு விளங்குகின்ற திருப்புருவவட்டங்களும்,

48. அபிமதஜநதர்சநாநந்தவேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக்கடந்து விம்மி வெளி விழுகின்ற அவ்யக்தமதுரமந்தஹாஸவிலாஸமும்,

49. மைவண்ணநறுங்குஞ்சிகுழல்பின்தாழ மகரஞ்சேர்குழையிருபாடிலங்கியாடுமழகும்,

50. ஸ்படிகமயகண்டசைலக்ருதங்களான இரண்டு முகுரமண்டலங்கள்போல் தளதளென்ற திவ்யகபோலங்களும்,

51. அண்டரண்டபகிரண்டத் தொருமாநிலமெழுமால்வரை முற்றுமுண்ட மூவுலகங் களையும் ரேகாத்ரயத்தாலே காட்டுமதாய் உதஞ்சித க்ரமுகதருணக்ரீவாகம்புப்ர லம்பமலிம்லுசமாய் விளங்குகின்ற திருக்கழுத்தினழகும்,

52. அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறையப்பெற்றுக் குருமாமணிப்பூண் குலாவித் திகழுந் திருமார்பும்,

53. தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும்புனைந்த தண்ணந்துழாய் மாலையும்,

54. *பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்யலோகோ மஹாத்மந:* என்கிறபடியே விபூதித்வயத்துக்கும் நிழல்கொடுத்துவளர்ந்து விசாலங்களான பாஹு தண்டங்களும்,

55. இன்றுஎன்றறியே னன்னேயாழியொடும் பொன்னார்சார்ங்கமுடையவடிகளை யின்றுஎன்றறியேனென்று மதிமயக்கவல்ல வலக்கையாழியிடக்கைச் சங்கமும்,

56. நகுகதிர்வழங்கு தகடுபட்டு செம்பொன் நவமணிகுயின்ற தொடியணியணிந்த ககன விலிடு நீலவெற்பொத்து அருமறைதுணிந்த பொருள்முடிவை இன்சொலமு தொழுகுகின்ற தமிழினில் விளம்பியருளிய சடகோபர் சொற்பெற்றுயர்ந்த திருத்தோள்களும்,

57. உய்யவுலகுபடைக்கவேண்டி நான்முகக்கொழுமுளையீன்ற நளிர்மாமலருந்தியும்,

58. படிச்சோதியாடையொடும் பல்கலனாய் நின்பைம்பொற்கடிச்சோதி கலந்ததுவோ வென்னலாம்படி திருவரை பூத்தாற்போன்ற திவ்யபீதாம்பரப்ரபையும்,

59. பிஷ்டதுஷ்டமதுகைடபகீடங்களாய் ஹஸ்திஹஸ்தயுகளாபஸவ்ருத்தங்களாய் விளங்குகின்ற திருத்துடைகளினழகும்,

60. வடிவிணையில்லாமலர்மகள் மற்றைநிலமகள்பிடிக்கக் கூசும்படி புஷ்பஹாஸ ஸுகுமாரதரமான திருவடித்தாமரையிணைகளும்,

61. கோலமாமணியாரமும் முத்துத்தாமமும் முடிவில்லதோரெழில் நீலமேனியும்,

62. கிரீடமகுடசூடாவதம்ஸ மகரகுண்டலக்ரைவேயக ஹாரகேயூரகடக ஸ்ரீவத்ஸ கௌஸ்துப முக்தாதாமோதரபந்தந பீதாம்பர காஞ்சீகுண நூபுராத்யபரிமித திவ்யபூஷணங்களான செங்கமலக்கழலில் சிற்றிதழ்போல்விரலில் சேர்திகழாழி களுங் கிண்கிணியும் அரையில்தங்கியபொன்வடமும் தாளநன் மாதுளையின் பூவொடுபொன்மணியும் மோதிரமும்கிறியும் மங்கலவைம்படையும் தோள் வளையுங்குழையும் மகரமும்வாளிகளும் சுட்டியுமென்றிவையும்,

63. சீரியதோர்நிதிபோலே திருமுன்பேநோக்கிவைத்திட்ட ஸ்ரீசடகோபனுமாய் தேவரீர் திருமஞ்சனங்கண்டருள நிற்குமிவ்வழகு, ஏதேனும் ஜகன்மோஹனமோ!

64. ஸ்ரீவைஷ்ணவ ஸர்வஸ்வமோ! வேள்வியின் பயனோ! வேதாந்த விழுப்பொருளோ! இவையெல்லாம் திரண்டெழுந்துகொண்டதோர் வடிவோ!

அதுவுமன்றி அப்ரமேயதேஜஸ்ஸோ!

நாங்களிதேதென்றறியா விவ்வழகுடன் ஊழிதொறுமூழிதொறும்

வாழ்ந்திடுக வாழ்ந்திடுகவே ஹரிஸார்வபௌமனே!.

65. அணியாகவேகவதி அலையோடுகொண்டோடி ஆலிக்கஅணையாக்கிடந்த களைதானோ? அரனுடைய வில்லிறுத் தழகானமெல்லியல்தோ ளன்பாகவே கச்சியணைத்த களைதானோ?

66. கணிகண்ணர்சொற்கேட்ட மழிசைமன் வாருமெனப் பைந்நாகப்பாய் சுருட்டிக் கொண்டெழுந்த களிதானோ?

67. கனியாக விருள்மூடக் கச்சிநகர்ப் பல்லவனும் சரணமெனப் பைந்நாகப் பாய்விரித்த களிதானோ?

68. பணியரசன் பாற்கடலில் மல்லையில்தள்ளவே பாங்காகக் கச்சிநகர் பார்த்த களிதானோ?

69. பராங்குசன் பரகாலபக்திஸாராதிகள் பல்லாண்டுபாடவே சாய்ந்தகளிதானோ?

70. பணிவுடன் பல்லாண்டுபாடு பரபக்தர்கள் பாவங்கள்தீர்க்கவே பார்த்தகளிதானோ?

71. பரிவுமிகு பொய்கையார் பாடலது கேட்டுகந்து பாங்காகவெஃகணையில் கண்வளர்ந்த களிதானோ? தேவரீர் மஞ்சனமாடியருள்வதே.

72. ஸ்நாநீயம் கநஸாரகுங்குமலவங்கைலாதிபிர் வாஸிதம்
ஸௌவர்ணேஷு கடேஷு சுத்தஸலிலம் பூர்ணம் புரஸ் திஷ்டதி,
கௌசேயஞ்ச சரச்சசாங்கதவளம் ஸித்தா வயம் கிங்கரா:
காருண்யம் குருதாம் யதோக்தக்ருதஸௌ ஸ்ரீசேஷசாயீ ப்ரபு:

## பொய்கையாழ்வார் திருமஞ்சனக் கட்டியம்

புண்ட்ரைர் த்வாதசபிர் யதாவிதி த்ருதைச் சுப்ரைரதப்ரச்சவி:
தத்த்ராத்ருக்சரதம்புவாஹபடலீஸௌந்தர்யஸம்பந்நிதி:
தீபக்த்யாதிகுணௌக ஸம்ப்ருதயசஸ்ஸந்தோஹஸந்தேஹதா,
மூர்த்திஸ் ஸா ஸரஸீமுநே: ப்ரதிகலம் ஜாகர்த்து சித்தே மம.

1. நல்லார் நவில்கின்ற நன்கச்சிமாநகரில் நலமாக நாமுய்யவந்த பெருமாள்,
2. நன்னாரணன் நீங்கமற்றுருமுற்றதுணை அன்றே நமக்கென்றுரைத்த பெருமாள்,
3. கல்லாதவாதிகளுமல்லாத மாயிகளும் நில்லாது நீக்கியருள் நல்லபெருமாள்,
4. கலைவலவர் பலர்வாழுங்கச்சியில் வெஃகாவில் கோயில்கொண்டடியாரை யருளும் பெருமாள்,
5. எல்லாருமுய்யவென நல்லானநான்மறையைச் சொல்லால் தொகுத்தருளவல்ல பெருமாள்,
6. ஏரார்திருக்கோவலிடைகழியிலீசனை எழில்மாதருடனேத்தியினிதுகந்த பெருமாள்,
7. மல்லாண்டதிண்டோளன் மலர்ப்பாத விணையதனில் சொல்லார்ந்த வந்தாதி சூட்டிநின்ற பெருமாள்,

8. மறைமௌலியுறைகின்ற மாண்பொருளை மனிசரெலாம் திறமாகவே கொள்ளத் தெளிவித்த பெருமாள், நம் பொய்கைப்பிரான் பெருமாள்!;

9. அல்லன்னகுழலும் அகன்றமுகமும் வில்லன்ன புருவமும் விசாலநயனமும் எள்ளுப்பூநாசியும் இணைவள்ளக்காதும் சொற்ப்ரணவமொழியுஞ் சிவந்த வதரமும், வெள்ளன்ன வேஷ்டியும் விளங்குமணியஞ்சலியும் நேரான புண்ட்ரமும் நிறைந்த மணிவடமும்,
கதித்ததுடையுங் கணைமுழந்தாளும் பல்லவப் பவழத்தைப் பழித்தவிரலடியுமாய் தேவரீர் திருமஞ்சனங்கண்டருள நிற்குமழகு ஊழிதொறூழிதொறும் வாழ்ந்திடுக வாழ்ந்திடுகவே முநிஸார்வபௌமனே!;

10. கங்கைநீரொருபால் காவிரியொருபால் கமழ்தரும்யமுனைநீரொருபால்
துங்கபத்திரையின் தூயநீரொருபால் துகில்வண்ணப்பொருநல்நீரொருபால்
மங்குல்தோய்சென்னிவேங்கடத்திலங்கும் ஸ்வாமிபுஷ்கரிணியின் தீர்த்தமுமொருபால்
இங்ஙனேபெருகும் பொய்கைமாமுனியே! மஞ்சனமாடுக மகிழ்ந்தே.

## பிள்ளைலோகாசாரியர் திருமஞ்சனக் கட்டியம்

தேவ விஜயீபவ. நாயந்தே நாயந்தே !

உத்யத்பாநுஸஹஸ்ரபாஸ்வரதநும் சுப்ரோர்த்வபுண்ட்ரோஜ்வலம்
கௌசேயாம்பரசோபிநம் ஸுருசிரஸ்வச்சோபவீதாந்விதம்
முக்தஸ்மேரமுகம் தயாஞ்சிதத்ருசம் வ்யாக்யாநமுத்ராந்விதம்
ஸ்ரீமல்லோககுருத்தமம் குணநிதிம் த்யாயாமி சித்தே ஸதா.

1. அத்திகரியருளாளருதயமானதேவா!
2. ஐப்பசியில் திருவோணத்தவதரித்ததேவா!
3. முத்திநெறிமறைத்தமிழால் மொழிந்தருளும்தேவா!
4. மூதறிவன்மணவாளன்முன்புதித்ததேவா!
5. நித்தியம்நம்பிள்ளைபதம் நினைந்தருளுந்தேவா!
6. நீள்வசனபூடணத்தால் நியமித்ததேவா!
7. உத்தமமாம்முடும்பைகுலமோங்கநின்றதேவா!
8. உலகேழுமேத்தநின்ற உலகார்யதேவா!

ஜய விஜயீபவ, மஞ்சனமாடியருள்கவே.

ஸ்நாநீயம் கநஸாரகுங்குமலவங்கைலாதிபிர் வாஸிதம்.
ஸௌவர்ணேஷு கடேஷு சுத்தஸலிலம் பூர்ணம் புரஸ் திஷ்டதி.
கௌசேயஞ்ச சரச்சசாங்கதவளம் ஸித்தா வயம் கிங்கரா:
காருண்யம் கருணாநிதிர் விதநுதாம் லோகார்யவர்யோ குரு:.

அருளப்பாடு..............மங்கள வாத்யம்.

# திருமழிசையாழ்வார் திருமஞ்சனக் கட்டியம்

(தையில் மகத்தன்று (ஒரிரவிருக்கை) க்ஷீரநதியில் ஸேவிப்பது.)
(முன்னம் ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான் கட்டியம் ஸேவிப்பது.)

தேவ! விஜயீபவ. நாயிந்தே நாயிந்தே!

சாந்த்யாதிஸத்குணநிதிம் விதிதாகிலார்த்தம்
நாராயணைகவிமுகம் நளிநாயதாக்ஷம்
ஸ்ரீமத்யதோக்தக்ருதி நிஸ்துலபக்தியுக்தம்
ஸ்ரீபக்திஸார்யமிநம் ஹ்ருதி சிந்தயேயம்.

கணிக்ருஷ்ணநிஷேவிதபாதயுகம் கலிகல்மஷஸம்ஹரணப்ரவணம்.
க்ஷிதிஸாரபுரோதிதஸூரிவரம் ஸததம் ஹ்ருதயே விநிவேசயத.

1. நல்லார்நவில்கின்ற நன்மழிசை மாநகரில் நலமாக நாமுய்யவந்த பெருமாள்!
2. நன்னாரணன்நீங்க மற்றொரு முற்றதுணையன்றே நமக்கென்றுரைத்த பெருமாள்!
3. கல்லாதவாதிகளுமல்லாதமாயிகளும் நில்லாது நீக்கியருள் நல்லபெருமாள்!
4. கலைவலவர்பலர்வாழுங்கச்சியில் வெஃகாவில் கோயில் கொண்டடியாரையருளும் பெருமாள்!
5. எல்லாருமுய்யவென நல்லானநான்மறையைச் சொல்லால்தொகுத்தருளவல்ல பெருமாள்!
6. ஒருபிறவிதன்னிலேயிருபிறவியானமையால் உலகுண்டவாயனுடனொப்புடையுயர்குலத்தோய்!
7. தையில்மகமின்றென்று தாரணியேரேற்றமதாச் செய்யமனம் செழிப்புற்றுச் சீர்தூக்குஞ் சிறப்புடையோய்!
8. துய்யமதிபெற்ற மழிசைப்பிரான்பிறந்த நாளென்று நற்றவர்கள் கொண்டாட வந்துதித்தோய்!
9. உலகினையும் மழிசையையுமொரு கோலாலுயர்தூக்க வலிதானபக்கமதாம் மழிசைவளம்வகுத்தருள்வோய்!
10. கருச்சந்துங்காரகிலுங்கமழ் கோங்கும்மணநாறும் திருச்சந்தத்துடன் மருவு திருமழிசைநகரரசே!
11. சார்வாகபௌத்தமத லோகாயதாதிகளில் கால்தாழ்ந்து நூல்பலவுமிட்டமிகு ஞானத்தோய்!
12. பேயாழ்வார்பேரருளால் பரதத்வநிலைதேர்ந்து மாயாமதந்தன்னை மாய்த்தொழித்த மதிக்கடலே!

13. வரந்தருவேனெனவந்த அரன் செருக்கையடிக்கண்ணுல் துறந்தொழியச்
செய்தருளும் மிகுஞானச்சிறு குழவீ !

14. ஊசிசெலும்வழியூடே நூல்தானும் செல்கவென்று உரைத்தருளி
யுருத்திரனுர்க்கொளியொழித்த வொண்சுடரே !

15. க்ருஷ்ணுநாம்வ்ரீஹீணு மித்யாதிநிகமத்தை நெல்லுரியால் நினைவித்தநிறைஞான
மூர்த்தியினுய் !

16. பெரும்புலியூரடிகள்பால் பெரும்பூஜைபெற்றருளிக் குடந்தைநகர்குடிகொண்டு
யோகவகையாராய்ந்தோய் !

17. பொய்கைமுனிபூதம் பேயாழ்வார்கள்மூவருடன் திருவல்லிக்கேணிதனில்
திகழ்ந்துறைந்த திகழ்தவத்தோய் !

18. நெறிநின்ற கணிகண்ணனடி நண்ணி மகிழ்வண்ணமருள் நண்ணியருந்தமிழ்நூலருள்
செய்தவருங்கலமே !

19. சிந்தாமற்கொண்மினீர் தேர்ந்தெனவே யாழ்பொருளை
அந்தாதி மேலிட்டறிவித்தவருள்முகிலே !

20. தருச்சந்தப்பொழில்தழுவு தாரணியின் துயர்தீரத்
திருச்சந்தவிருத்தஞ்செய் திருமழிசைப்பரஞ்சுடரே !

ஸ்நாநீயம் கநஸாரகுங்குமலவங்கைலாதிபிர் வாஸிதம்
ஸௌவர்ணேஷு கடேஷு துக்தஸரித: பூர்ணம் புரஸ் திஷ்டதி.
கௌசேயஞ்ச சரச்சசாங்கதவளம் ஸித்தா வயம் கிங்கரா:
காருண்யம் கருணுநிதிர் விதநுதாம் ஸ்ரீபக்திஸாரோ முநி:.

அருளப்பாடு சங்கதாரை............மங்களவாத்யம்.

திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்.

## காட்டுமன்னுர் ஸன்னிதி மன்னனுர் திருமஞ்சனக் கட்டியம்

ஜய விஜயீபவ ! நாயந்தே நாயந்தே.

அப்ஜந்யஸ்த பதாப்ஜ மஞ்சித கடீஸம்வாதி கௌசேயகம்
கிஞ்சித்தாண்டவகந்திஸம்ஹநநகம் நிர்வ்யாஜமந்தஸ்மிதம்
சூடாசும்பிமுகாம்புஜம் நிஜபுஜாவிச்ராந்த திவ்யாயுதம்
ஸ்ரீமந்தம் ஹரிமங்வஹம் ஹ்ருதி ததே ஸ்ரீவீரநாராயணம்.

கண்கள் சிவந்து பெரியவாய் வாயும் சிவந்து கனிந்து, உள்ளே
வெண்பலிலகு சுடரிலகு விலகுமகர குண்டலத்தன்
கொண்டல்வண்ணன் சுடர்முடியன் நான்கு தோளன் குனிசார்ங்கன்
ஒண்சங்கதை வாளாழியா னொருவனடியேனுள்ளானே.

ஒன்றுந்தேவுமுலகுமுயிரும் மற்றும் யாதுமில்லாவன்று
நான்முகன்தன்னொடு தேவருலகோ டுயிர்படைத்த பெருமாள் !

பாரிடந்து பாரையுண்டு பாருமிழ்ந்து பாரளந்து பாரையாண்டு
பாரோர்கள்தாமுய்யச் செய்து நின்ற பெருமாள்

நின்றுமிருந்தும் கிடந்தும் திரிதந்தும் அடியார்கள்
நெஞ்சைவிட்டகலாத பெருமாள்

அகலிடமுழுதும் பரந்த தண்பரவையுள் நீர்தொறும்
பரந்துளனாய்க் கரந்தெங்குமுறைந்த பெருமாள்

நிறைந்தஞானமூர்த்தியாய நாதயாமுனமுனிவர்
நிரந்தரமும் சேவிக்க வந்துதித்த பெருமாள்

சேவிக்கவாழ்விக்கும் சடகோபன் முதலாய
வாழ்வார்களனுதினமு மேத்தநின்ற பெருமாள்,

நாத்தழும்பவேத்தநின்ற நாதமுனியாளவந்தார்
எதிராசர்மாமுனிகளேத்த நின்றபெருமாள்

எதிராசதரிசனமே யெங்கணும் தழைத்தோங்கச்
சதிரானவருள்தந்த மன்னனூர் வாழியரோ

திருமகளும் மண்மகளும் திகழநின்ற ஐம்படையும்
அடியாரும் புடைசூழ என்ஞான்றும் வாழியே.

கோல்மாமணியாரமும் முத்துத் தாமமும் முடிவில்ல தோரெழில்
நீலமேனி நீடூழி வாழவே.

செங்கமலக் கழலில் சிற்றிதழ்போல் விரலில் சேர்திகழாழிகளும்
கிண்கிணியும் அரையில்தங்கிய பொன்வடமும் தாளநன்மாதுளையின்
பூவொடு பொன்மணியும் மோதிரமுங்கிறியும் மங்கலவைம் படையும்
தோள்வளையுங்குழையும் மகரமும் வாளிகளும் சுட்டியு மோங்குகவே.

இன்னாரென்றறியேனன்னேயாழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை
யின்னாரென்றறியேனென்று மதிமய்க்கவல்ல வலங்கையாழி யிடங்கைச்
சங்கமும் வாழ்ந்திடவே.

தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும்
புனைந்த தண்ணந்துழாய் மாலை திகழ்ந்திடவே.

சீரியதோர்நிதிபோலே திருமுன்பே திகழும் திருவடி நிலைகளும் வாழ
மஞ்சனமாடியருள்கவே. அருளப்பாடு சங்கதாரை பத்மதாரை
ஸஹஸ்ரதாரை பட்டர் மங்களவாத்யம் !

# ஸ்ரீமந்நாதமுனிகள் திருமஞ்சனக் கட்டியம்

தேவ விஜயயீபவ! நாயந்தே நாயந்தே!

புண்ட்ரைர் த்வாதசபிர் யதாவிதி த்ருதைச் சுப்ரை ரதப்ரச்சவி:
தத்தாத்ருக் சரதம்புவாஹ படலீ ஸௌந்தர்ய ஸம்பந்நிதி:
தீபக்த்யாதி குணௌகஸம்ப்ருதயசஸ்ஸந்தோஹ ஸந்தேஹதா
மூர்த்திர் நாதமுநேஸ் ஸதா விலஸதாத் சுப்ரா மதீயே ஹ்ருதி.

படநாகத்தணைக் கிடந்த பரம்புருடன் திருவருளால்
சடகோபனருள்பெற்றுச் சதிராகவாழ்ந்திடுவீர்!

மடவுலகர் மருளற்று மதிபெற்று வாழ்ந்திடவே
திடமானவருள் செய்து திசையெட்டும் புகழ்பெற்றோய்!

ஆராவமுதென்னும் பதிகத்தைச் செவிசாத்தி
அணிகுருகை நகர்மேவி யருமந்த செயல் செய்தோய்!

ஆராதகாதலுடன் கண்ணிநுண் சிறுத்தாம்பை
அனவரதம் சிந்தித்தே யருள்பெற்று மகிழ்ந்திடுவோய்!

தீராத பாவங்கள் தீர்ந்துலகமுய்ந்திடவே
சேமமுடன் நிதிபெற்றுச் சிறப்புற்று விளங்கிடுவோய்!

தேராரும் நெடுவீதி மன்னனூர்திருக்கோயில்
சீர்மையுடனோங்கிடவே சதிராக வந்துதித்தோய்!

சீரார்ந்த யோகநிலை தன்னிலே சடகோப
னேரார்ந்த திருமேனி கண்டுகொண்டு களித்திடுவோய்!

காரார்ந்த திருமேனிக் கண்ணனையுமுகவாதே
கடிபொழில் சூழ் குருகைக்கோனடியிணையேயாதரிப்போய்!

பாரோர்கள் தாமுய்யப் பாங்காக வந்துதித்துப்
பாமாலை பல் பலவும் பரவவைத்த பண்புடையோய்!

பண்ணினிசை யாழ்பயில்நூல் பயின்றவர்கள்தாம் வியப்பப்
பாமாலையனவரதம் பாடியே மகிழ்ந்திடுவோய்!

ஆளவந்தாரெதிராசர் மாமுனிகள் மகிழ்ந்தேத்த
ஆர்வமுடனருள் செய்யும் மிகுஞானமுனிவரனே!

சகமேழுங்குளிர நின்று மஞ்சனமாடியருள்கவே.

அல்லன்ன குழலும் அகன்ற முகமும் வில்லன்ன புருவமும் விசால நயனமும்
எள்ளுப்பூநாசியும் இணைவள்ளக்காதும் சொற்ப்ரணவமொழியும்சிவந்தவதரமும்

வெள்ளன்ன வேஷ்டியும் விளங்கு திருமுத்திரையும்
நேரான புண்ட்ரமும் நிறைந்த மணிவடமும்

கதித்ததுடையும் கணைமுழந்தாளும் பல்லவப் பவழத்தைப் பழித்த
விரலடியுமாய்

தேவரீர் திருமஞ்சனங் கொண்டருளவீற்றிருக்குமிவ்வழகு
ஊழிதொறூழிதொறும் வாழ்ந்திடுக வாழ்ந்திடுகவே முநிஸார்வ
பௌமனே !

கங்கைநீரொருபால் காவிரியின்னீரொருபால் கமழ்தரும் யமுனைநீரொருபால்

துங்கபத்திரையின் தூயநீரொருபால் துகில்வண்ணப் பொருநல் நீரொருபால்

மங்குல்தோய் சென்னி வேங்கடத்திலங்கும்
ஸ்வாமி புஷ்கரிணியின் தீர்த்தமுமொருபால்

இங்ஙனே பெருகும் நாதமாமுனியே ! மஞ்சனமாடுக மகிழ்ந்தே.

அருளப்பாடு சங்கதாரை பத்மதாரை ஸஹஸ்ரதாரை பட்டர் மங்கள வாத்யம்.

## ஆளவந்தார் திருமஞ்சனக் கட்டியம்

தேவ விஜயீபவ, நாயிந்தே நாயிந்தே.

விதாய வைதிகம் மார்க்கம் அகௌதஸ்குத கண்டகம்.

நேதாரம் பகவத்பக்தே: யாமுநம் மநவாமஹை.

காஷாய சோபி கமநீய சிகாநிவேசம் தண்டத்ர—

யோஜ்வலகரம் விமலோபவீதம், உத்யத்திநேசநிப

முல்லஸதூர்த்வபுண்ட்ரம் ஸ்ரீயாமுநார்ய ! தவ ரூபமுபாஸிஷீய.

நல்லார் நவில்கின்ற மன்னனூர் கோவில்தனில் நல்லோர்கள்
தாமுய்ய வந்துதித்த நற்குரவா !

நானிலத்தில் நிகரில்லாக் கலைவலவர் நாமென்று
கொற்றவன் சபைதன்னில் வெற்றிபெற்ற வீறுடையோய் !

நாரணனார் பரத்துவத்தை நலமாக நாட்டிவைத்து
நான்மறையின் நற்பொருளை நன்குரைத்த நாவலவா !

நாற்றிசையுங் கொண்டாட ஆடிதனி லுத்தராடத்
திருநன்னாள் சிறப்புறவே திகழ்ந்துதித்த வாரியனே !

நல்லார்கட் குணவாகத் திருமாற்கும் திருமகட்கும்
துதிநூல்களிரண்டருளித் தெளிவுதந்த மதிக்கடலே !

நற்பொருள்க ளனைத்துக்கும் நிதியான நன்னூல்கள்
நாவலவர் கொண்டாட நன்குரைத்த ஞானநிதி!

சித்தித்திரயமொடு கீதார்த்த ஸங்க்ரஹமும் ஆகமப்ரா,
மாண்யமது மருள்செய்த அருட்கடலே!,

நம்மாழ்வார் பதவிணையே தந்தைதாய் மக்களுமா
மென்றுரைத்து நிகரற்ற புகழ்பெற்ற யாமுனரே!

அல்லன்ன குழலும்............தேவரீர் திருமஞ்சனங்
கொண்டருள வீற்றிருக்கு மிவ்வழகு

ஊழி தொறு மூழி தொறும் வாழ்ந்திடுக
வாழ்ந்திடுகவே யதிஸார்வ பௌமனே!.

சகமேழுங் குளிர நின்று மஞ்சனமாடி யருள்கவே.

ஸ்நாநீயம் கநஸார குங்கும லவங்கைலாதிபிர் வாஸிதம்

ஸௌவர்ணேஷு கடேஷு சுத்தஸலிலம் பூர்ணம் புரஸ் திஷ்டதி;

காஷாயஞ்ச ஸஹோத்தரீயமநகம் ஸித்தா வயம் கிங்கரா:

காருண்யம் கருணாநிதிர் விதநுதாம் ஸ்ரீயாமுநார்யோ குரு:.

அருளப்பாடு சங்கதாரை பத்மதாரை ஸஹஸ்ரதாரை
பட்டர் மங்கள வாத்யம்.

---

## ஸ்ரீப்ரதிவாதிபயங்கரமண்ணு திருமஞ்சனக் கட்டியம்

ஸ்வாமிந் ! ஜயவிஜயீபவ, நாயந்தே ! நாயந்தே !

உத்யத்பாநு ஸஹஸ்ர........ஸ்ரீமத்வாதி பயங்கரம் குருவரம் ஸம்ஸேவிஷீயாநிசம்.

1. மாயா வயோத்தியிடை மகிமைபெறு கச்சியில் மஹாஷாட பூசத்தில் வந்த தேவா!
2. மாமுனிவன் வரயோகி திக்கஜங்க ளெட்டிடையில் மணியாவிளங்கு தேவா!
3. தாயான திருமந்த்ரப் பொருள்சொல்ல வரயோகி தகவுடன் பட்டோலை கொண்ட தேவா!
4. தத்வத்திரயமொடு சீர்வசன பூடணப் பொருளதனை யடியார்க்கு வகுத்த தேவா!
5. மாயாவி காபூர்வ வென்றசொல் கேட்டடனே காஞ்சீபூர் ண: என்று காய்ந்த தேவா!
6. மலையப்பன் மணிபெற்ற வரதார்யன் பரவாதி பீகரா வென்றணைய வாய்ந்த தேவா!
7. வாயார வாழ்த்தவே மாபாஷ்யப் பொருள்சொல்லி யடியாரை யீடேற்ற வந்த தேவா!

8. வனசமலர்ப் பெருந்தேவி மணவாளன் மலரடியில் வைஷ்ணவர்கள் தாஸராய் விளங்கு தேவா!

9. அல்லன்னகுழலும் அகன்ற முகமும் வில்லன்ன புருவமும் விசால நயனமும்

10. எள்ளுப்பூ நாஸியும் இணைவள்ளக் காதும் சொற்ப்ரணவ மொழியும் சிவந்த வதரமும்

11. வெள்ளென்ற வேஷ்டியும் விளங்கு திருமுத்திரையும் நேரான புண்ட்ரமும் நிறைந்த மணிவடமும்

12. கதித்த துடையும் கணைமுழந்தாளும் பல்லவப் பவழத்தைப் பழித்த விரலடியுமாய் தேவரீர் திருமஞ்சனங் கொண்டருள வீற்றிருக்கு மிவ்வழகு ஊழிதொறு மூழிதொறும் வாழ்ந்திடுக வாழ்ந்திடுகவே பரவாதிசிங்கமே.

13. தர்க்க மீமாம்ஸைகள் வ்யாகரண மோதவே
தரணியில் தாவடியால் தளர்ந்த களைதானோ

14. பாஷ்யப் பொருள்கேட்க பரமகுரு பதவிணையில்
பரிசர்யை பலபலவும் செய்த களைதானோ

15. சுஷ்க தர்க்கத்தையே கொக்கரித் தெதிர்வந்த
மக்களை மறைமுடியால் நக்க களைதானோ

16. சொற்பொருளின் பாவரஸ த்வநியோடு பாஷ்யத்தைத்
தொண்டர்க்கு விரிவாக வளித்த களைதானோ

17. தெற்குத் திருப்பதிக் கெல்லையாம் வேங்கடத்தி
லப்பற் காகாயநீ ரளித்த களைதானோ

18. தென் திரு வரங்கத்தில் தெய்வவர யோகியிடைத்
திருவாய் மொழிக்கீடு தேர்ந்த களைதானோ

19. நற்பதிகள் நூற்றெட்டு ஸுப்ரபா தத்தினால்
நாரணனை நன்றாக நவித்த களைதானோ

20. இருக்குடையன் வேள்விவரு தேவபிரான் களையதனை
வேய்சாலை நீரதனால் தீர்த்த களைதானோ?

நலமாக வண்ணலே நல்லெண்ணெய் மஞ்சளால்
நன்மஞ்சனங் கொண்டு நாடொறும் வாழ்கவே.

அருளப்பாடு சங்கதாரை பத்மதாரை
ஸஹஸ்ரதாரை பட்டர் மங்கள வாத்யம்.

# திருமலையனந்தாழ்வான் திருமஞ்சனக் கட்டியம்.

தேவ! விஜயீபவ! நாயந்தே நாயந்தே!

ஸ்ரீமத்ராமாநுஜார்யப்ரியதமம் அநகம் தத்கடாக்ஷைகபாத்ரம்
தத்திவ்யாஜ்ஞாநுஸாராத் அதிவர்ஷபகிரி ப்ராப்தகைங்கர்யராஜ்யம்
அஜ்ஞாநத்வாந்தபாநும் புருஷவரஇதி ஸ்ரீயதீந்த்ரோக்திஸித்த
ப்ரக்க்யாதிம் ஸேவிஷீய ப்ரதிதகுணமநந்தார்யமாசார்யவர்யம்.

1. சித்திரையில் சித்திரைநாள் சிறக்கவந்த பெருமாள்!
 சீராருமெதிராசரடிபணியும் பெருமாள்!
2. பத்தியுடன் வேங்கடவர்க்கடிமைசெய்த பெருமாள்!
 பாரோர்கள் தாமுய்யவந்து தித்த பெருமாள்!
3. நித்தியமுமத்தாணிச் சேவைசெய்த பெருமாள்!
 நிரந்தரமுமடியாரை வாழ்வித்த பெருமாள்!
4. எத்திசையும் புகழோங்கி விளங்கநின்ற பெருமாள்!
 எம்பெருமானடியிணைகளிறைஞ்சி நின்ற பெருமாள்!
5. எதிராசர்பதவிணையை யடைந்துய்ந்த வாரியர்க்குள்
 சதிரானபுகழ்பெற்றுச் சகமெங்கும் விளங்கிநின்றோய்!
6. எழுசிகரவேங்கடத்தே ஒழிவிலாக்காலமெலாம்
 வழுவிலாவடிமைகளைச் செய்துநின்று புகழ்பெற்றோய்!
7. துதிசெய்துதுவளில்லாத் தூமலர்கள்கொண்டு திரு
 வேங்கடமால்திருவுள்ள முகக்கநின்ற பெரும்புகழோய்!
8. தூயபுகழ்ச்சடகோபர் நாதமுனியாளவந்தார்
 தூயமொழிமாலைகளே துலங்கநின்ற நாவுடையோய்!
9. எதிவரனார் தரிசனமே யிவ்வுலகிலெஞ்ஞான்றும்
 அதிசயமாய்த் தழைத்தோங்க வருள்செய்த வருங்கலமே!
10. எத்திசையுமோங்குபுக ழாழ்வார்களருந்தமிழ்நூல்
 நித்தியமும் சிந்தைதனில் நிலவநின்றநிறைபுகழோய்!
11. மதியிலாமானிசரும் மாதவன்தாள் மலரேத்திச்
 சதிருடனே வாழ்கவென்று சொல்லமுதமீந்தருள்வோய்!
12. மாயாதவகவிருளும் மாய்ந்திடவே வந்துதித்த
 மாஞானியனந்தாழ்வான் மஞ்சனங்கொண்டருளுகவே.

# நம்பிள்ளை திருமஞ்சனக் கட்டியம்.

உத்யத்பாநுஸஹஸ்ரபாஸ்வரதநும் சுப்ரோர்த்வபுண்ட்ரோஜ்ஜ்வலம்
கௌசேயாம்பரசோபிநம் ஸு॰ருசிரஸ்வச்சோபவீதாஞ்சிதம்.
ஸ்ரீமத்க்ருஷ்ணகுருத்வயேந ஸஹிதம் வ்யாக்க்யாநமுத்ராந்விதம்
ஸ்ரீமந்தம் கலிவைரிணம் குருவரம் ஸம்ஸேவிஷீயாநிசம்.

1. கார்த்திகையில் கார்த்திகைநாள் கலிகெடவே வந்துதித்துக்
காசினியோர் பாக்கியமே வடிவெடுத்ததென நின்றோய்!

2. கார்முகில்போல் அரும்பொருளை அனவரதம் கறந்தளித்துக்
கற்பகமோ என நின்று கலைதந்த கலைவலவா!

3. காரிமாறனுயிரத்தைக் காசினியில் காத்தளித்துக்
கலைபலவும் திருநாவில் கமழநின்ற கலைக்கடலே!

4. கடிபொழில்சூழ் அரங்கற்குக் கண்ணாகவேநின்று
கச்சிநகர் தழைத்தோங்கக் காதலித்த கற்பகமே!

5. நஞ்சீயர் பதவிணையை நிச்சலுமே நச்சிநின்று
நாடெங்கும் நம்பிள்ளையெனநின்ற நாவலவா!

6. நாரணனார் பரத்துவத்தை நலமாக நாட்டிவைத்து
நல்லார்கட்குணவாகும் ஈடுதந்த நற்குரவா!

7. நானிலத்தில் உலகார்யன் என்ற பெரும்புகழ்பெற்று
நற்பொருள்களனைத்துக்கும் நிலமான நித்திலமே!

8. நல்லார்கள் பலர்வாழ நன்மொழிகள் நன்குரைத்து
நங்களுடைக் கண்குளிர நமக்கருளி இங்குதித்தோய்!

9. ஆரியர்கள் தாம்வாழ அனவரதம் அரும்பொருள்கள் அளித்த களைதானே!

10. ஆழ்வார்கள் அருளிய நற்கலைபலவும் ஆய்ந்தெடுத்துரைத்த களைதானே!

11. ஆசார்யனடியிணையில் ஓய்வின்றி அந்தரங்கவடிமைசெய்த களைதானே!

12. ஆராமம்சூழ் அரங்கநற்பதியை நன்குகந்து சேமித்த களைதானே!

13. ஆவலிப்பு மிகு குமதிமதயானை மதமொழித்து வெற்றிபெற்ற களைதானே!

14. ஆதரமேபெருகநின்ற அடியார்கட்கு அரும்பொருளை அருள்செய்த களைதானே!

மஞ்சனமாடி யருள்வதே.

15. நலமாகவண்ணலே நல்லெண்ணெய்மஞ்சளால் நன்மஞ்சனம்கொண்டு
நாடோறும் வாழ்கவே.

16. சீரார்வடக்குத் திருவீதிப்பிள்ளையொடும் ஏரார் பெரியவாச்சான்
பிள்ளையொடுமித்தலத்தில்,

பாரோர்கள் தாமுய்யப் பாங்காக வந்தமைந்த காரார்முகில்போலும்
கலிகன்றியாரியரே

சகமேழும் குளிரநின்ற மஞ்சனமாடியருள்கவே.

ஸ்ரீ :

**குறிக்கோள் :**—திருமஞ்சனக் கட்டியங்களுக்குமுன் 151 உபந்யாஸங்கள் முடிந்தன. 152 முதல் 163 வரை திருமஞ்சனக் கட்டியங்கள் பன்னிரண்டு. இனி

# 164. மணவாளமாமுனிகளுத்ஸவத்தில் திவ்யதேசமங்களாசாஸனம்

ஜய விஜயீபவ !

போதச்சிவந்து பரிமளம்வீசிப் புதுக்கணித்த
சீதக்கமலத்தை நீரேறவோட்டிச் சிறந்தடியேன்
ஏதத்தைமாற்று மணவாளமாமுனி யினிமைதரும்
பாதக்கமலங்கள் வாழியரோ ! பாதக்கமலங்கள் வாழியரோ !

பல்லாண்டுபல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடிநூறுயிரம்
மல்லாண்டதிண்டோள்மணி வண்ணு !உன்சேவடி செவ்விதிருக்காப்பு.

என்னெஞ்சமேயானென்சென்னியான், தானவனை வன்னெஞ்சங்கீண்டமணிவண்ணன்.
முன்னஞ்சேயூழியானூழிபெயர்த்தான் உலகேத்துமாழியானத்தியூரான்.

அத்தியூரான்புள்ளையூர்வான், அணிமணியின் துத்திசேர் நாகத்தின்மேல் துயில்வான்.
முத்தீமறையாவான் மாகடல் நஞ்சுண்டான்றனக்கும் இறையாவானெங்கள் பிரான்.

அகிலகில்லேனிறையுமென்று அலர்மேன்மங்கையுறைமார்பா!
நிகரில்புகழாயுலகம் மூன்றுடையாய் என்னையாள்வானே!
நிகரிலமரர் முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே!
புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே.

துளங்குநீண்முடியரசர்தங்குரிசில் தொண்டைமன்னவன் திண்டிறலொருவர்க்கு.
உளங்கொளன்பினோடின்னருள்சுரந்து அங்கோடுநாழிகையேழுடனிருப்ப
வளங்கொள்மந்திரம் மற்றவற்கருளிச் செய்தவாறடியேனறிந்து, உலகம்
அளந்தபொன்னடியே அடைந்துய்ந்தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே.

இலிங்கத்திட்டபுராணத்தீரும் சமணரும் சாக்கியரும்.
வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றும் நுந்தெய்வமுமாகி நின்றுன்.
மலிந்துசெந்நெல் கவரிவீசும் திருக்குருகூரதனுள்.
பொலிந்துநின்றபிரான் கண்டீர் ஒன்றும்பொய்யில்லை போற்றுமினே.

பயனன்றுகிலும் பாங்கல்லராகிலும்
செயல்நன்றாகத் திருத்திப்பணிகொள்வான்
குயில்நின்றுல் பொழில்சூழ்குருகூர்நம்பி
முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே.

அஞ்சுகுடிக்கொருசந்ததியாய் ஆழ்வார்கள் தஞ்செயலைவிஞ்சிநிற்குந் தன்மையளாய்.
பிஞ்சாய்ப்பழுத்தாளை யாண்டாளைப்பத்தியுடன் நாளும்வழுத்தாய் மனமேமகிழ்ந்து.
வாழியெதிராசன் வாழியெதிராசன் வாழியெதிராசனெனவாழ்த்துவார்,
வாழியெனவாழ்த்துவார்வாழியெனவாழ்த்துவார் தாளிணையில்தாழ்த்துவார்விண்ணோர்தலை.

சாறுவாகமதநீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே
சாக்கியக்கடலை வற்றுவித்து மிகுசாங்கியக்கிறி முறித்திட
மாறுசெய்திடுகணாதவாதியர்கள் வாய்தகர்த்தற மிகுத்துமேல்
வந்தபாசுபதர் சிந்தியோடும் வகை வாதுசெய்த வெதிராசனார்
கூறுமாகுரு மதத்தொடோங்கிய குமாரிலன் மதமவற்றின்மேல்
கொடியதற்கசரம்விட்டபின் குறுகிமாயவாதியரை வென்றிட
மீறிவாதில்வருபாற்கரன் மதவிலக்கடிக்கொடியெறிந்துபோய்
மிக்கயாதவமதத்தை மாய்த்தபெருவீரர் நாளுமிகவாழியே.

தென்னரங்கர்சீரருளுக்கிலக்காகப்பெற்றோம்
திருவரங்கந்திருப்பதியேயிருப்பாகப்பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலையுணவாகப்பெற்றோம்
மதுரகவிசொற்படியே நிலையாகப்பெற்றோம்
முன்னவராம் நங்குரவர்மொழிகளுள்ளப்பெற்றோம்
முழுதும் நமக்கவைபொழுதுபோக்காகப்பெற்றோம்
பின்னையொன்றுதனில் நெஞ்சுபோராமல்பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறுமையிலாப்பெருமையும் பெற்றோமே.

ஜய விஜயீபவ—ஸ்வாமியெச்சரிக்கை !

